# எல்லா வேலையும் என் தலையிலே!



எல்லா வேலையும் நானே செய்ய
வேண்டும் என்று எதிர்பார்த்தார்கள்...
எனக்கோ ஒரே சோர்வு. குழந்தைகள்,
சமையல், வீட்டுவேலை
எல்லாவற்றையும் எப்படி
நானே சமாளிக்க முடியும்...

என் கணவர் ஒரு நாள்
ஹார்லிக்ஸ் வாங்கி
வந்தார். ஹார்லிக்ஸ்
பருகினால் இழந்த
சக்தியை மீண்டும்
பெறலாம் என்றார்!




இப்பொழுது
என்னைப்
பாருங்கள்!
திட
ஆரோக்கியத்
துடன் தெம்பும்
சுறுசுறுப்புமாய்
இருக்கிறேன்.
எல்லாம் ஹார்லிக்ஸ்
செய்த நன்மை!




போஷாக்குக் குறைவினும்
ஏற்படும் சோர்வும்
தள்ளாமையும் நீங்க
ஹார்லிக்ஸ் பருகும்படி
டாக்டர்கள் சிபாரிசு
செய்கிறார்கள். ஆடைச்
சத்து மிகுந்த பால்,
கோதுமை மாவு,
மால்ட்டட் பார்லி இவற்றின்
போஷாக்குச் சத்துக்களை
ஒருங்கே கொண்ட
ஹார்லிக்ஸ் இழந்த
சக்தியை மீண்டும் பெற
உதவுகிறது என்பது
டாக்டர்களுக்குத்
தெரியும்.

**ஹார்லிக்ஸ்**
அதிக சக்தி
அளிக்கிறது!

புத்தாண்டு மலர்

## நினைவுத் திரையில்...

அதோ டக்கு டக்கு என்ற பாதக் குறட்டின் சத்தம் கேட்கிறது. வருகிறவர் ஸ்ரீமான் கே. பி. பங்காரு நாயுடு பி. பி. எம் அவர்கள் தான்.

பி. பி. எம். என்றால் ஏதோ சாதாரணமாக நினைத்து விடவேண்டாம். பிராஞ்சு போஸ்டு மாஸ்டர் என்று அறிந்து கொள்க!

கிராமத்துப் போஸ்டு மாஸ்டருக்குச் சம்பளம் சொற்பம் தான். ஆனால் அவருடைய அதிகாரம் பெரிது. அவருடைய உத்தியோகப் பொறுப்பு அதை விட அதிகமானது.

"ஜில்லா கலெக்டராகட்டும் ஹிஸ். எக்ஸெலன்ஸி கவர்னரேயாகட்டும்; இந்தத் தபால் ஆபீஸுக்குள் அவர்களுடைய அதிகாரம் செல்லாது! இன்னொருவருக்கு வந்த கடிதத்தைக் கொடு என்று கவர்னரே வந்து கேட்டாலும் 'மாட்டேன்' என்று சொல்ல எனக்கு ரைட் உண்டு!" என்று நாயுடுகாரு அடிக்கடி பெருமிதத்துடன் சொல்லிக் கொள்வார். - கல்கி - "அலை ஓசை" மார்ச் 28, 1948

# கல்கி

## பொருளடக்கம்

**பிலவங்க சித்திரை 3 — ஏப்ரல் 16**



ஆண்டுகள் மாறுகின்றன
ஆனால் யுகங்கள் மாறினாலு
மாறாமல் நிற்பது அன்
மாறுகிற ஆண்டிலே மாறு
பண்பின் உருவைப் பணிவோ

தமிழ்த்திருநாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 37



# புதுமைகள் காணும் புத்தாண்டு

சென்ற ஆண்டு பிறந்தபோது நாடு இருந்த நிலைமைக்கும் இன்று நாடு உள்ள நிலைமைக்கும்தான் எத்தனை வேறுபாடுகள்? தோல்வியைக் குறிக்கும் 'பராபவ' ஆண்டு தவறான கொள்கைகளுக்குத் தோல்வியைத் தேடித் தர வேண்டும் என்று சென்ற ஆண்டுத் தொடக்கத்தில் நாம் பிரார்த்தித்தது வெகுவாக ஈடேறி விட்டது.

சிரம சாத்தியமான பணி என்று நினைக்கப்பட்ட காரியத்தை — காங்கிரஸின் அசுர பலத்தைக் கணிசமாக ஒடுக்கும் சாதனையை — செய்து நம் மக்கள் அனைவரும் பாராட்டுக்குரியவராயிருக்கிறார்கள். நாட்டின் பல ராஜ்யங்களும் ஜனநாயகத்தின் உயிர் நாடியைக் காப்பாற்றி நம் போற்றுதலுக்குப் பாத்திரமாயுள்ளன எனில், நமது அருமைத் தமிழகமோ அதனிலும் தனிப் பெருமை கொண்டிருக்கிறது. ஏனெனில், கூட்டுச் சர்க்காராக இன்றித் தனியொரு கட்சியே காங்கிரஸுக்குப் பதில் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்கும் சாதனையைத் தமிழகத்தில்தான் காண்கிறோம். வள்ளுவர் காட்டிய வழியில் சென்று தமிழகம் முழுவதையும் ஒப்புரவில் இணைந்த குடும்பமாக்கும் திருப்பணியைத் தமிழக அரசு புரிய வேண்டும் என்பதே இன்று நமது அவா.

தமிழகத்தில் இப்போது ஆட்சிப் பொறுப்பேற்றிருப்பவர்கள் தமிழிடத்தில் அளப்பரிய பற்றுக் கொண்டவர்கள். வருடப் பிறப்பன்று நம் சர்க்காருக்குத் 'தமிழ் நாடு அரசு' எனப் புதுப் பெயரிட்டுத் தங்கள் தமிழன்பை வெளிப்படுத்திக் கொள்கிறார்கள். பெயருக்கு மட்டும் தமிழில் பற்றுக் கொள்ளாமல், தமிழ்ப் பண்பாகிய பரந்த மனப்பான்மையையும், பக்தி உணர்ச்சியையும், கலைத் திறனையும், ரசிக உணர்ச்சியையும் மக்கள் அனைவரும் பெற்றுப் பாரதத்தில் தமிழகம் முதன்மை எய்துமாக!

ஃ ஃ ஃ

அறுபது ஆண்டுகளுக்கும் பெரியோர் பெயர் சூட்டியுள்ள பாங்கு விந்தையானது. ஆனந்த — ஸர்வஜித் முதலிய மங்களமான பெயர்களைப் போலவே விரோதி — குரோதி என்பது போன்ற கசப்பான பெயர்களையும் ஆண்டுகளுக்கு இட்டிருக்கிறார்கள். நல்லதும் கெட்டதும், தூயதும் தீயதும் கலந்ததுதான் காலத்தின் கதி என்று குறிப்பிடவே இப்படி நாமகரணம் செய்திருப்பார்கள் போலும்! நிகழும் ஆண்டுக்குப் 'பிலவங்க' என்று பெயர். தாவிக் குதிக்கும் பிராணிகளை — மான் அல்லது குரங்கை — இப்பெயர் குறிக்கும் என்று சொல்வார்கள். நிலையின்றி அலை பாயும் சித்தப் போக்கையே மானாகவும் குரங்காகவும் உருவகப்படுத்துவது நமது மரபு. பற்பல கொள்கைகளிடையே பிடிப்பின்றித் தடுமாறி, ஒரு கட்சியிலிருந்து இன்னொன்றுக்குத் தாவுகிற போக்கு அதிகரித்து வரும் இச்சமயத்தில் 'பிலவங்க' பிறப்பது வேதனை செறிந்த ஒரு வேடிக்கையுள்ளது. ஆயின் 'பிலவங்க'வை நல்ல கண்களோடு பார்க்கவும் இடமுண்டு. நாலு கால் பாய்ச்சலில் தாவும் பிலவங்கம் போல் இவ்வாண்டில் தேசம் முன்னேற்றப் பாதையில் குதிநடை போட்டுச் செல்லும் என்று நம்புவோமாக.

இதற்கு ஆட்சியாளர், மக்கள் இரு சாராரிடமும் மனத் தெளிவும், முயற்சியும், உழைப்பும் கூட வேண்டியது அவசியம். இவற்றுக்கெல்லாம் ஊடாகவும், மேலாகவும் இறைவனின் திருவருள் வேண்டும். ஆண்டவனை நினைந்து பிறந்த பொன்னாட்டின் முன்னேற்றத்துக்குப் பணி புரியப் புத்தாண்டில் பிரதிக்ஞை செய்வோம்.

# என்ன சேதி?

★ கைத்தறி வாரம்
★ ஆந்திர மந்திரி சபை
★ பதினொன்கு மொழிகள்
★ சதவீதக் கணக்கு
★ தமிழ்க் காது

கைத்தறி வாரத்தில் அத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களின் கஷ்டங்களைப் பற்றி நினைவுகூர்வோம். இத் தொழிலுக்கு இன்னல்கள் இரண்டு வகையில் தோன்றியுள்ளன. ஒன்று போதிய மூலதனம் கிடைக்காமை; இரண்டாவது ஏற்றுமதி வியாபாரத்துக்குதவும் விளம்பர வகைச் செலவுகளுக்குப் போதிய உதவி கிடைக்காமை.

கூட்டுறவுச் சங்கங்களில் இணைந்துள்ள நெசவாளர்களுக்குப் பல இனங்களில் கடன் கொடுக்கப்படுகிறது. இதற்காகப் பஞ்சாலைத் தொழில் மீது விதிக்கப்படும் பிரத்தியேக "செஸ்" வருமானத்தை ஒதுக்கிவைத்திருக்கிறார்கள். இதைப் பரிபாலிக்கும் பொறுப்பை ராஜ்ய அரசாங்கங்களுக்குக் கொடுத்திருக்கிறது மத்திய அரசாங்கம். இப்பொறுப்பை எல்லா அரசாங்கங்களும் சீராக நிறைவேற்றுவதாகச் சொல்வதற்கில்லை. கூட்டுறவு இயக்கம் வேரூன்றியுள்ள சென்னை போன்ற சில ராஜ்யங்களைத் தவிர பல ராஜ்யங்களில் இந்தக் கைத்தறி 'செஸ்' நிதி, இதர துறைகளுக்குத் திருப்பிவிடப் படுகிறதாம். 'செஸ்' நிதி விநியோகத்தை ராஜ்ய அரசாங்கங்களின் பொறுப்பிலிருந்து அகற்றி மத்திய அரசாங்கத்தின் நேரடி அதிகாரத்திலேயே வைத்துக்கொண்டால் நன்மை உண்டாகும் என்று அகில இந்திய கைத்தறி ஜவுளி விற்பனை சங்கத்தின் தலைவர் ஸ்ரீ சோமப்பா அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார். கவனத்துக்குரிய யோசனை.

ஏற்றுமதித் துறையில் கைத்தறி இனங்களுக்கு நல்ல கிராக்கி வெளி நாடுகளில் இருப்பது தெரிந்ததே. ஆனால் இதைப் போதுமான அளவுக்கு வெளி நாடுகளில் விளம்பரப்படுத்த வேண்டும். வசதியில்லாத நெசவாளர் சங்கமே இதைச் செய்து வருகிறது. ஏற்றுமதியை ஊக்குவதில் அக்கறை காட்டும் அரசாங்கம் சக்திவாய்ந்த முறையில் விளம்பரம் செய்ய வேண்டும்.

கைத்தறி வாரத்தில் இத்துறையில் ஈடுபட்டுள்ள லட்சக் கணக்கான ஏழை மக்களின் குறைகளை உண்மையாகவே உணர்ந்து அவற்றுக்கான பரிகாரத்தைக் காண முயலுவது அவசியம். நெசவாளர்கள் அரசாங்கத்தின் உதவியை எதிர்பார்த்தே வாழ்க்கை நடத்துவது முடியாது; மக்களும் மனமுவந்து கைத்தறிக்கு அதிக ஆதரவு தரவேண்டும்.

ஒரிஸாவிலும் உ. பி. யிலும் காங்கிரஸ் மந்திரி சபைகள் கவிழ்ந்த வேகத்தைப் பார்த்த ஆந்திர முதல் மந்திரி ஸ்ரீ பிரம்மானந்த ரெட்டி அவர்கள் ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்காமல் காங்கிரசுக்குள்ளேயே தம்மை எதிர்த்து வந்த ஸ்ரீ சுப்பா ரெட்டி கோஷ்டிக்கு மந்திரி சபையில் இடம் கொடுத்துத் தமது ஸ்தானத்தை உறுதிப் படுத்திக் கொண்டு விட்டார். தேர்தலுக்கு முன் இவ்விரு கோஷ்டிகளுக்குமிடையே இருந்த போட்டியையும், சண்டையையும் பார்த்தபோது இது தீராத பகை என்று தான் யாரும் நினைத்திருப்பார்கள். தேர்தலுக்குப் பின் பிரம்மானந்த ரெட்டியின் கோஷ்டி உறுதியாக இருந்ததால் பகை தீர அவர் முயல மாட்டார் என்று கருதப்பட்டது. ஆயினும் நாளைக்கே நிலைமை எப்படி எப்படி

---

அறிவுச் சக்தியும், பௌதிக ஆற்றலும் அதிகமாக ஆக உலகத்துக்கு ஆபத்தும் அதிகமாகிறது. பக்தியும் சாந்தமும்தான் உலகின் கோளாறுகளுக்கெல்லாம் உற்ற மருந்து. உண்மையான பக்தியும் சாந்தமும் பரவப் பரவப் போலீஸுக்கும் கோர்ட்டுகளுக்கும் சைனியங்களுக்கும் வேலை குறையும். ஆதலால் ஆட்சி மன்றத்தின் முதல் கடமை பக்தியையும் சாந்தத்தையும் பரவச் செய்வதே. ஆனால் ஆட்சி மன்றத்தினரோ தாம் மதச் சார்பற்றவர்கள் என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறபடியால் பக்திப் பிரசாரம் அத்தீர்மானத்துக்கு மாறுபட்டதாகி விடுமோ என்று சந்தேகித்து இவ்வழி செல்லாதிருக்கலாம். அது எப்படியிருந்தாலும், மக்களில் அறிந்தோருடைய கடமை மக்களுடைய உண்மையான நலனைக் கோருவதே. மக்களுடைய உண்மையான நலன் எப்படி விளையும்? நம்மை விட்டுப் பிரிய முடியாத பேர் உறவினரான ஆண்டவனிடம் அன்புசெலுத்துவதாலேயே விளையும். அதற்கே அனைவரும் முயல வேண்டும்.

காமகோடியின் கருணைமொழி



மாறுமோ என்று அவர் கருதி, சிறிதும் சந்தேகத்துக்கு இடம் தராமல் ஆந்திரா காங்கிரஸுக்குள் கோஷ்டி பூசலுக்கு முடிவுகட்டி விட்டார். அவரது ராஜதந்திரத்தைக் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் பாராட்டத்தான் வேண்டும்! ஆயினும் கொள்கையில் பிரியாதவர்கள் பதவிப் போட்டியில் பிரிவதும் பிறகு கூடுவதும் தேசத்துக்கு எவ்வித முக்கியத்துவமும் வாய்ந்ததல்ல.

டில்லி மக்கள் சபையில் பதினான்கு மொழிகளும் வழங்கும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதாவது சபாநாயகருக்கு முன்னறிவிப்பு இன்றியே அங்கத்தினர்கள் எந்த மொழியில் வேண்டுமானாலும் பேச அனுமதிக்கப்படுவார்கள். இது தி. மு. க. அங்கத்தினர் திரு மனோகரன் அவர்களுக்கு ஒரு வெற்றி என்று சொல்ல வேண்டும். அவரது கட்சியின் மக்கள் சபைத் தலைவர் திரு அன்பழகன் தமிழில் சிறந்த பேச்சாளர். ஆயினும் அவர் மக்கள் சபையில் தமிழில் பேச வேண்டுமானாலும் முன்னதாகத் தமது பேச்சின் ஹிந்தி மொழிபெயர்ப்பையோ, ஆங்கில மொழிபெயர்ப்பையோ அளித்து விட்டுத்தான் பேச வேண்டியிருந்தது. ஹிந்தி வட்டாரங்களிலிருந்து வரும் அங்கத்தினர்களுக்கு இந்தக் கஷ்டம் இல்லை. இது ஹிந்தி வட்டார அங்கத்தினர்களுக்கும் மற்றப் பகுதி அங்கத்தினர்களுக்கும் இடையே பாகுபாடு காட்டுவதற்குச் சமம் என்றும், இதனைத் தவிர்க்க வேண்டும் என்றும் திரு மனோகரன் வற்புறுத்தி வந்துள்ளார். அவர் குறிப்பிட்ட பாரபட்சம் இப்போது நீங்கிவிட்டது.

ஆனால் அங்கத்தினர்களின் பேச்சை மொழிபெயர்ப்பாளர்களின் உதவியால் புரிந்து கொண்டு, மந்திரிகள் பதில் சொல்ல வேண்டியிருந்தால் அதிலிருக்கும் சிரமத்தையும் கவனிக்க வேண்டும்.

இதெல்லாம் ஒருபுறமிருக்க: மொழி என்பது கருத்தைப் புரியவைக்கும் ஒரு சாதனமேயன்றி இலட்சியமாகாது என்ற விவேகத்துடன், அதிகபட்ச அங்கத்தினர்களுக்கு விஷயம் புரிவதே முக்கியம் என்ற உணர்வோடு ஆங்கில மறிந்தவர்கள் ஆங்கிலத்திலேயே விவகாரங்களை நடத்துவது சாலச் சிறந்ததாகும்.

காங்கிரஸுக்குச் சகாயமாக உள்ள பத்திரிகைகள் இப்போது சட்ட சபைகளில் காங்கிரஸ் பெற்றுள்ள ஸ்தானங்களின் எண்ணிக்கையை விட்டு விட்டு, மொத்த வாக்குகளில் அது பெற்றுள்ள சத விகிதத்தைப் பற்றிக் கணக்குப்போட ஆரம்பித்திருக்கின்றன. காங்கிரஸ் எந்த முறைகளைக் கையாண்டு வோட்டுச் சம்பாதித்தது என்பதை யறிந்த எவரும் இந்த விதண்டாவாதத்தை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். எல்லா வோட்டுக்களையும் ஒரே போலப் பாவித்துக் கணக்கெடுப்பதில் பொருள் இல்லை. காங்கிரஸுக்கு எதிராக வோட் செய்வதற்குத் தனிப்பட்ட தீரமும் சுதந்திரமும் தேவையா யிருந்தன. வெறும் சத விகிதக் கணக்கு இந்த உண்மையை உணர்த்தாது.

இந்தப் புது வருஷத்திலிருந்து சென்னை ராஜ்ய சர்க்கார் "தமிழ் நாடு அரசு" என்று வழங்கப்படுமாம். தி. மு. க.வினரின் தமிழ்ப் பற்று உலகமறிந்தது. அதனால் அவர்கள் 'மெட்ராஸ் கவர்ன்மெண்ட்' என்பதை, 'தமிழ் நாடு அரசு' என்று நேருக்கு நேர் மொழிபெயர்த்திருக்கிறார்கள். ஆனால் "புல்லக் கார்ட்" என்பதை "மாடு வண்டி" என்றால் தமிழ்க் காது ஏற்குமா? "மாட்டு வண்டி" என்று சொன்னால்தானே தமிழ் மொழியின் பண்புக்கு ஒவ்வுகிறது? அதே போல் 'மெட்ராஸ் கவர்ன்மெண்ட்' என்பது "தமிழ் நாட்டரசு" என்றாவது, "தமிழக அரசு" என்றாவது இருக்க வேண்டுமே தவிர, "தமிழ்நாடு அரசு" என்றல்ல.


பாரத
ராஷ்டிரபதி
தேவை!
சொன்னபடி
இயங்குபவர்
காங்கிரஸ்
ஆபீஸுக்கு மனுப்
போடவும்
உ.பி.
காங்கிரஸ்

# வேறு எந்த மொழியிலும் இல்லை

ஆண்டவனுக்குத் தமிழ் மூதோர் கொடுத்த பெயரின் சிறப்பை நாம் உணர்ந்து பாராட்ட வேண்டும்.

तदन्तरस्य सर्वस्य
तदु सर्वस्यास्य बाह्यतः ।

இந்த ஈசாவாஸ்ய உபநிஷத்து மந்திரம் சொல்லுவ தாவது:

பரம்பொருள் அனைத்துக்குள்ளும் இருக்கும்; அது அனைத்தையும் கடந்து அப்பாற்பட்டதுமாகும்; இது எல்லா மதங்களிலும் கண்ட உண்மை. ஆயினும் இந்த உண்மையை எடுத்துக் காட்டும் சொல் தமிழில் இருப்பதுபோல் வேறு எந்த மொழியிலும் இல்லை. ஈசுவரனுக்குத் தமிழில் வழங்கும் பெயர் கடவுள். இந்தச் சொல் பாமர மக்களின் பேச்சிலும் உயரிய நூல்களிலும் தமிழில் வழங்கும் சொல். இதன் முதல் இரண்டெழுத்துக்கள் அனைத்தையும் கடந்தது, அப்பாற்பட்டது என்பதைக் குறிக்கும். கடவுள் என்கிற சொல்லின் பிற்பகுதியாகிய 'உள்' என்பது அனைத்துக்கும் அப்பாற்பட்ட அந்தப் பொருள் அனைத்துள்ளும் உள்ள பொருள் என்பதையும் காட்டுகிறது. ஆக, கடவுள் என்கிற தமிழ்ச் சொல் மேலே எடுத்துச் சொன்ன உபநிஷத்து மந்திரத்தைத் தனக்குள் அடக்கி நிற்கிறது.

'கடவுள்' என்கிற இந்தத் தமிழ்ச் சொல்லுக்கு ஈடாக வேறு எந்த மொழியிலும் ஆண்டவனுக்குப் பெயர் இல்லை. இது தமிழ் மூதோரின் தனிச் சிறப்பாகும். கடவுள் ஆணுமல்ல பெண்ணுமல்ல. தமிழ் வருஷப் பிறப்பன்று அந்தக் கடவுளைத் தியானிப்போமாக!

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்




வடகிழக்குப் பம்பாய்த் தொகுதியில் நடக்கிற உபதேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெற விட்டோமாயின், சமீபத்துப் பொதுத் தேர்தலில் காங்கிரஸுக்குத் தந்த தோல்வி குறித்து மக்கள் பச்சாதாபம் கொண்டு அம்முடிவை மாற்றிக் கொண்டது போலாகி விடும். இது ஓர் அபாயகரமான நடவடிக்கை. ஆனபடியால் ஸ்ரீ பார்வே அவர்களின் மரணத்தினால் உணர்ச்சிகளைத் தொடும் முறையில் எவ்வளவு பிரசாரம் செய்யப்பட்டாலும் அத்தொகுதி வாக்காளர்கள் காங்கிரஸுக்கு வோட்டுச் செய்வதில்லை என்று சங்கற்பம் செய்து கொள்ள வேண்டும். ஏராளமான வேட்பாளர்கள் அங்கு போட்டியிடுகிறார்கள். இவர்களில் யார் பிடித்தமாயிருப்பினும் அவர்களுக்கு வாக்குத் தரலாம். ஆனால் காங்கிரஸுக்கு வோட் செய்வதாக மட்டும் எண்ணவும் கூடாது. மற்ற வேட்பாளர்களிலும் வெற்றி வாய்ப்பு இல்லாதவர்களுக்கு ஆதரவாக வோட்டுக்களைப் பல் முனைகளில் சிதற அடித்தால் முடிவு காங்கிரஸுக்கு அனுகூலமாக ஏற்பட்டுவிடும். ஒழுங்கீனம் செய்த காங்கிரஸின் மூர்த்தியை இன்றைய நெருக்கடி நிலைமையில் பிரகாசப்படுத்துவது பொருந்தாது. தேர்தலில் பெற்ற தண்டனைகளுக்குப் பிற்பாடும் காங்கிரஸ் தன் கொள்கைகளை மாற்றிக் கொள்ள முன்வரவில்லை; மாறாக, மத்திய ஆட்சியைப் பிடித்துவிட்ட மமதையில் காரியங்களைச் செய்து வருகிறது என்பதை மறக்கலாகாது. இதற்குத் தேசம் தரும் கண்டனத்தை வட கிழக்குப் பம்பாய் தெரிவித்தாக வேண்டும். காங்கிரஸ் சார்பில் நிற்கும் ஸ்ரீ பார்வேயின் சகோதரியை மக்கள் சபைக்கு அனுப்பி வைப்பதால் இன்றைய சிக்கல் நிலையில் எந்த வித நன்மையும் ஏற்பட்டு விடாது. காங்கிரஸின் பலத்தை மேலும் ஒரு ஸ்தானம் அதிகப்படுத்துவதில் உள்ள ஆபத்தையே அது உண்டாக்கும்.

ஃஃஃ

ராஷ்டிரபதி பதவிக்கு எதிர்க் கட்சிகள் ஏகமனதாகப் பிரேரித்துள்ள பிரதம நீதிபதி ஸ்ரீ கே. சுப்பா ராவைப் பிரதம மந்திரி எக்காரணத்தையாவது முன்னிட்டு ஏற்றுக் கொள்ளாமல் போனால் அது பரிதாபப்பட வேண்டிய விஷயம்.

நமது சுதந்திர வரலாற்றில் இவ்வளவு குறுகிய காலத்துக்குள், போட்டியிட்டுச் சிறிய அல்லது பெரிய மெஜாரிட்டி மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய பதவியாக ராஷ்டிரபதி ஸ்தானத்தை ஆக்கிவிட்டால், அந்தப் பதவிக்குரிய மதிப்பு துரதிர்ஷ்ட வசமாகக் குறைந்துவிடும். எனவே, இப்போது இது தவிர்க்கப்பட வேண்டும்.

காங்கிரஸ் மந்திரி சபை உள்ள ராஜ்யங்கள், காங்கிரஸல்லாத மந்திரி சபை உள்ள ராஜ்யங்கள் உள்பட இந்திய யூனியனில் இன்றுள்ள நிலவரத்துக்கு மிகப் பொருத்தமான பெயரை எதிர்க் கட்சிகள் ஏகமனதாகச் சமர்ப்பித்துள்ளன. இதற்கெதிராக எதையும் வற்புறுத்திச் சொல்வதற்கில்லை. இதைப் பிரதம மந்திரியும் அவரது கட்சியினரும் ஏற்றுக் கொள்வார்கள் என்று இன்னமும் நம்புகிறேன். இதுவே மக்களில் எல்லா வர்க்கத்தினருக்கும் திருப்தியை அளிக்கும். இந்தியாவில் மட்டுமின்றி வெளி நாடுகளிலும் இத் தேர்வு பாராட்டப்படும்.

ஃஃஃ

தாற்காலிகமான காபந்து சர்க்காரின் நிலையிலேயே தான் இருப்பதை மத்திய அரசாங்கம் வெளிப்பட ஒப்புக்கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டது. தேசிய சம்மேளனம் ஒன்றைக் கூட்ட அது உடனடியாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். பற்பல ராஜ்யங்களின் சமீபத்திய போக்குகளைப் பற்றி இச் சம்மேளனத்தைக் கொண்டு ஆராய வேண்டும். தேசத்தின் அரசியல்—பொருளாதார நிலைமை பற்றியும் சம்மேளனம் பரிசீலனை செய்ய வேண்டும். தேசத்தில் ஒழுங்கான ஆட்சி ஏற்பட வழி என்ன, மக்கள் சுபிட்சமும் திருப்தியும் பெற உபாயம் என்ன என்பவை குறித்து இத் தேசிய சம்மேளனம் யோசனை கூற வேண்டும்.

ஃஃஃ

பற்பல முறை சொன்னதையே மீண்டும் கூறுகிறேன் — காச்மீரப் பிரச்னை என்பது, காச்மீரம் இந்தியாவுக்குச் சொந்தமா பாகிஸ்தானுக்குச் சொந்தமா என்பதல்ல. காச்மீர மக்கள் சமாதான சூழ்நிலையில் தக்க பாதுகாப்பு உணர்வுடன் வாழ்வதற்கு எத்தகைய அரசாங்கம் வேண்டும் என்பதே பிரச்னை. காச்மீரத்தை ஏதோ ஸ்தாவர சொத்துப் போல் நினைத்து, அது இந்தியாவுக்கோ பாகிஸ்தானுக்கோ உடைமையாக வேண்டியது என்று எண்ணக் கூடாது. இந்த உண்மையை அழுத்தமாகப் பதிய வைக்க வேண்டுமாயின் ஷேக் அப்துல்லாவை விடுதலை செய்வது சிலாக்கியமாயிருக்கும். காச்மீரத்தின் தலைவர்களுள் அம்மக்களின் நலனிலும் கௌரவத்திலும் மிகுந்த அக்கறை கொண்டவர் அவர் என்பது வெளிப்படை. அவர் பாகிஸ்தான் இந்தியா இரண்டில் எதற்குமே கைப்பாவை ஆகாதவர்.

ஃஃஃ

மதுவிலக்கை ரத்துச் செய்வது பற்றிப் பேச்சுக்கள் எழுந்துள்ளன. பொதுமக்களுடன் உண்மையான தொடர்பு கொண்ட எவரும் கள்ளுக் கடையை மூடியபின் ஏழை

மக்கள் குடிப் பழக்கத்திலிருந்து விமோசனம் பெற்றிருப்பதை உணர முடியும். நகரப்புறம், நாட்டுப்புறம் இரண்டுக்கும் இது பொருந்தும். கள்ளச் சாராயம் காய்ச்சுவது ஆங்காங்கு நடைபெற்றாலும் பொது உண்மை இதுவே. மறுபடியும் கள்ளுக் கடைகளைத் திறப்பது ஏழை மக்களின் பொருளாதார நிலையை, எண்ணுவதற்கே பயங்கரமான முறையில் மாற்றிவிடும். ஏழைகள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த காசு கள்ளுக்கடை லைசென்ஸ் பெற்றவர்களுக்குச் சென்றுவிடும். கடைகளை ஏலம் விட்டுச் சர்க்காரும் குத்தகைத் தொகை பெறும். ஆனால் உற்பத்திக்கு உதவாத வீண் செலவில், உடல் நலத்தைப் பாதிக்கும் விதத்தில் ஏழைகளின் பணம் நஷ்டமாகும். குடிப் பழக்கக்காரர்களின் வாழ்நிலை மோசமாக ஆக மதுவின் வசியமும் அதிகமாகும். பயனற்ற செலவைக் கட்டுப்படுத்தி, சேமிப்பை அதிகப்படுத்த வேண்டும் என்பதுதான் உண்மையிலேயே தேசத்தின் கொள்கையாக இருந்தால் அதற்கு மதுவிலக்கு ரத்து பெரும் ஊறு விளைவிக்கும். மதுவிலக்கு ரத்தினால் சர்க்காரின் வருமானம் கூடும் என்பதைப் பெரிதாக நினைப்பது பிரமை. சர்க்காருக்குக் கிடைப்பதை விடப் பலமடங்கை உழைக்கும் ஏழை மக்கள் இழப்பார்கள். இது வேறு விதங்களில் சர்க்காருக்கே பெரும் இழப்பாக முடியும்.

நாங்கள் முன்பு மதுவிலக்கை அறிமுகம் செய்கையில் மத்தியில் ஆட்சி புரிந்த பிரிட்டிஷ் சர்க்கார் அதற்குத் தடையாக நின்றது. கலால் வரி குறைந்ததற்கு ஈடாக நிதி தர மறுத்தது. எனவே வருமான நஷ்டத்தை ஈடுகட்டப் புதிதாக விதிக்கப்பட்ட விற்பனை வரியை நம்ப வேண்டியதாயிற்று. இப்போதோ மத்திய சர்க்கார் — ராஜ்ய சர்க்கார்கள் ஆகிய அனைத்துமே ஒப்புக்கொண்டது மதுவிலக்குக் கொள்கை. இச்சமயத்தில் கள்ளுக்கடைகளை மீண்டும் திறப்பது முட்டாள்தனமாகும். பணக்காரர்கள் தங்கள் பொருளை எப்படி வேண்டுமாயினும் மனம் போனபடி விரயம் செய்யட்டும். ஆனால் ஏழைகள் பொருள் நஷ்டப்படாமல் காக்க வேண்டியது நம் கடமை. பணக்காரர்கள் மதுப் பெர்மிட் வாங்குவதிலுள்ள கூச்சத்தைப் போக்குவதற்காக ஏழைகளை வதைக்கக் கூடாது.

ஃஃஃ

காங்கிரஸல்லாத சர்க்கார் அமைந்த ராஜ்யங்கள் யாவும் மக்கள் சபையிலுள்ள எதிர்க்கட்சி அமைப்பைத் தங்களுக்குக் காப்புக் கவசமாகக் கருதுகின்றன என்று எண்ணுகிறேன். இந்த ராஜ்யங்கள் தம்மிடம் வைத்துள்ள விசுவாசத்தை மக்கள் சபை எதிர்க்கட்சியினர் திறமையுடனும், கவனிப்புடனும், ராஜநீதியுணர்வுடனும் மதித்து நடைமுறையாக்க வேண்டும். மக்களின் இந்த நம்பிக்கை இயற்கையாக ஏற்பட்ட ஒன்று. இதை நிறைவேற்றுவதையே எதிர்க்கட்சிகள் முக்கியமாகக் கருத வேண்டும். மக்கள் சபையில் கௌரவமாக நடந்து கொள்வதும், மத்திய சர்க்காரிடம் நல்லிணக்கம் காட்டுவதும், தத்தம் தனியுருவை மக்களின் மனத்தில் மங்காமல் காத்து வருவதும் எதிர்க்கட்சிகளின் நோக்கமாயிருப்பின் இவற்றை அவை கைவிட வேண்டியதில்லை. ஆனால் இவற்றையெல்லாம்விட முக்கியமான பணி, மத்திய சர்க்காருக்கு எதிராகத் தங்கள் காப்பை விரும்பும் ராஜ்ய சர்க்கார்களின் நலனைக் கூர்ந்த கவனத்துடன் நோக்கி, அவற்றுக்காகப் போராடுவதேயாகும். இத்தகைய ஒரு பணி வாய்த்திருக்கும் போது, மக்கள் சபையிலுள்ள எதிர்க்கட்சிகள் பிரிவுபட்டு இருக்குமாயின் அது காங்கிரஸுக்குத் தோல்வி தருமளவுக்குத் துணிந்திருந்த ராஜ்யங்களுக்குப் பிராணபத்தாக முடியும்.

ஃஃஃ

அரசியல் சாஸனத்தில் ஆட்சி மொழி குறித்து இருக்கும் அத்தியாயம் முழுவதையுமே ரத்து செய்துவிட்டு, பிரிட்டிஷாரிடமிருந்து சுதந்திர சர்க்காருக்கு ஆட்சி மாற்றப்பட்ட போது இருந்தவாறே ஆங்கிலம் தொடர்ந்து உபயோகிக்கப்படும் என்று புதிதாக சாஸனத்தில் ஒரு விதியை ஏற்படுத்துவதொன்றே ஹிந்தி பேசாத மக்களுக்குத் திருப்தி தரும் என்பது பட்சபாதமற்ற சட்ட நிபுணர்களுக்குத் தெளிவு. ஆனால் இந்த ரீதியில் அரசியல் சாஸனத்தைத் திருத்துவது வியர்த்தமான முயற்சியேயாகும். ஏனெனில், இதற்கு மக்கள் சபையிலும் மற்ற ராஜ்ய சட்டசபைகளிலும் போதிய மெஜாரிட்டி கிடைப்பது சிரமம். இவ்வாறின்றி, மத்திய சர்க்கார் கூறுவது போல் வேறெவ்விதத்திலோ சட்டம் செய்தால் அதுவும் வியர்த்தமேயாகும். ஏனெனில், அது ஹிந்தி பேசாத ராஜ்யங்களுக்குத் திருப்தி தராது. ஆனபடியால் இப்போதுள்ள ஒரே மார்க்கம், சட்டரீதியாக நடவடிக்கை எடுக்காமல் நிர்வாக ரீதியாகச் செயல்படுவதேயாகும். அதாவது ஆங்கிலத்தின் இடத்தில் ஹிந்தியை அமர்த்தும் காரியங்களை விடுத்து, இதுவரை இருந்துவரும் நிலையையே நீடிப்பதாக நிர்வாக ரீதியில் முடிவு செய்து அவ்வழியைப் பின்பற்ற வேண்டும்.

ஃஃஃ

தி. மு. க. முதன் மந்திரியிடம் ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் ஆட்சிப் பொறுப்பைத் தந்தபோது சென்னை நகரில் அரிசிக் கையிருப்பு மிகவும் குறைந்திருந்தது. இதனால் புதிதாகப் பொறுப்பேற்றவர்களுக்கு ஒரு கவலை உண்டாயிற்று. எனவே கொள்முதலுக்கு விசேஷ நடவடிக்கைகள் எடுக்க வேண்டியதாயிற்று. புதிய சர்க்கார், நிலவரத்தைப் புரிந்து கொண்டு அமர்வதற்குப் போதிய அவகாசம் கொடுக்க வேண்டும். அவசரப்பட்டுக் கொண்டு அதன் நடவடிக்கைகளை எதிர்க்க வேண்டாம் என்கிறேன். புதிய மந்திரிசபைக்கு எல்லா விதத்திலும் நட்புடன் உதவி புரியவே சுதந்திரக் கட்சி விரும்புகிறது.

சபாநாயகர் தேர்தல் விஷயமாக நடந்த போட்டி, தி. மு. க.வின் பிரேரணையை எதிர்த்துத் தருமரீதியில் செய்த ஆட்சேபணை மட்டுமேயாகும். அதைப் பெரிது படுத்துவதற்கில்லை.

# ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவன்



நாட்டில் ஆன்மசக்தியையும், நமது புராதனப் பண்பாட்டின் ஒளியையும் பெருக்கி வரும் பெரியார்களிலே முன்னணியிலுள்ள ஒருவர் திருக்குடந்தை ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள். கல்வி, ஒழுக்கம், பக்தி நெறி, சொல்வன்மை இவற்றில் சிறந்த இச் சான்றோர் அறுபதாண்டுகளை நிறைவிக்கும் இச் சமயத்தில் அவரது திருவடிகளுக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றோம். — ஆசிரியர்

**வை**ஷ்ணவம் என்பது நம் நாட்டிலுள்ள முக்கியமான ஆறு மதங்களுள் ஒன்று. இங்கும் அங்குமாய்ச் சிதறிக் கிடந்த இம்மதத்தின் சித்தாந்தங்களைத் திரட்டி, தொகுத்து, நடைமுறையில் பின்பற்றுமாறு கட்டுத் திட்டங்களை நிறுவி உலகுக்கு உதவியவர்கள் ஆழ்வார்களும் ஆசாரியர்களுமாவர்.

ஆழ்வார்களைப் பற்றியும், அவர்களுள் முக்கியமான சிலரைப் பற்றியும், அவர்களின் பாடல்களின் சுவைகளைப் பற்றியும் ஸ்ரீ ராஜாஜி அவர்கள் கல்கியில் எழுதி வந்த கட்டுரைகளை நாம் படித்து, சிந்தித்து, அனுபவித்து ஆனந்தமெய்தியுள்ளோம். அவ்வப்போது அவரவருக்கும் ஏற்பட்ட ஆன்மானுபூதிகளையே ஆழ்வார்கள் தெரிவித்தனர்.

ஆழ்வார்களுக்குப் பிறகு பல்லாண்டுகள் சென்ற பின் ஆசாரியர்கள் தோன்றலாயினர். கி. பி. 825 முதல் 918 வரை வாழ்ந்த ஸ்ரீ நாதமுனிகள் என்னும் பெரியார் தான் இந்த ஆசாரியர்களின் பரம்பரையில் முதலிடம் பெறுபவர். இவர்தான் ஆழ்வார்கள் அருளிய பாடல்களைத் திரட்டித் தொகுத்து நாலாயிரம் என்னும் ''தமிழ் மறை''யை நமக்கு அருளினார்.

வடமொழியில் உள்ள வேதம் வகுக்கும் ஸித்தாந்தமும் ஆழ்வார்கள் அருளிய ''தமிழ் மறை'' என்னும் திவ்யப் பிரபந்தங்களின் வாயிலாகக் கிடைக்கும் ஸித்தாந்த விளக்கங்களும் ஒன்றே என்பதை விளக்கிக் காட்டிய நாதமுனிகளின் ஸித்தாந்தத்தை ''உபய வேதாந்தம்'' என்று உலகம் ஏற்கலாயிற்று.

ஸ்ரீ நாதமுனிகளின் பௌத்திரரான ஸ்ரீ யாமுன முனிகள் (இவரை ஆளவந்தார் என்றும் அழைப்பதுண்டு) ஆசார்ய பரம்பரையில் அடுத்தபடி முக்கியமானவர். இவருக்கு அடுத்தபடி கி. பி. 1017 முதல் 1137 வரையில் வாழ்ந்த ஸ்ரீ ராமானுஜ முனிகள் மிக முக்கியமான ஆசாரியராவர். இவர் வேதாந்தம் ஸித்தாந்தம் இரண்டையும் ஒருமைப்படுத்தி வைஷ்ணவர்கள் தினசரி அனுஷ்டிக்க வேண்டிய நன்னெறி நல்வழிகளைத் திட்டமிட்டுக் கொடுத்து உதவினார். ஸ்ரீ பகவத் ராமானுஜ ஸித்தாந்தம் என்னும் இதை விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் என்பர்.

ஆழ்வார்கள் ஆசார்யர்கள் அருளியதற்கு மாறுபட்டோ அதிகமாகவோ ஸ்ரீ ராமானுஜ முனிகள் எதையும் சொல்லவில்லை. அவர்கள் சொன்ன தத்துவங்களையேதான் திட்டப்படாத ரத்தினங்களைத் தீட்டி, அவற்றைச் செம்பொன்னில் பதித்து, நகாசு வேலைகளையும் செய்து அளிப்பது போல்—

ஸ்ரீஹரி



ஸ்ரீரங்கம் - கருப்பக்கிருஹ — ரங்க விமானம்.

பாமரர்களின் உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும் வகையில் அமைத்தருளினார்.

ஸ்ரீ ராமாநுஜருக்குச் சிலகாலம் பிறகு அவரது சித்தாந்தத்தையே ஏற்றவர்கள் வடகலை என்றும் தென் கலை என்றும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரண்டு மகவுகளென வளர்ச்சி பெறலாயினர்.

ஸ்ரீ வேதாந்த தேசிகன் (கி. பி. 1268–1369) வடகலை வழி வந்தவருக்கு ஆசாரியனாக விளங்கலானார். ஸ்ரீ மணவாள மாமுனி தென்கலை வழிவந்தோருக்கு ஆசாரியராய் விளங்கலானார். இவ்விரு வழி வந்தோருக்கும் ஸ்ரீ இராமாநுஜர் ஈருக உள்ளவர்கள் யாவரும் பொதுவான குரு பரம்பரையாகும்.

வடகலை வழிவந்தோரும் தென்கலை வழி வந்தோரும் காலக் கிரமத்தில் பெருகலாயினர். அதனால் ஆங்காங்கு வசித்து வந்தவர்களுக்கு வழிகாட்டிகளாக ஆங்காங்கு பற்பல ஆசாரியர்களும் தோன்றலாயினர். அவரவரைப் பின்பற்றும் உட்பிரிவுகளும் ஏற்பட்டன.

வடகலை வழிவந்தோரின் ஓர் உட் பிரிவு முனித்திரய பரம்பரை எனப்படுவது. இந்த முனித்திரய பரம்பரை ஆசாரியர்களில் ஒருவர் ஸ்ரீமத் ஆண்டவன் என்பார்.

ஸ்ரீ நாதமுனிகள், ஸ்ரீ யாமுன முனிகள், ஸ்ரீ ராமாநுஜ முனிகள் என்னும் மூம் முனிவர்கள் வகுத்த வழியைக் கடைப் பிடித்தொழுகும் ஒரு குழுவினருக்கு முனித்திரய பரம்பரை என்ற சிறப்புப் பெயரேற் படலாயிற்று என்பது ஒருசிலரின் கருத்து.

கி. பி. 18ம் நூற்றாண்டில் திருக்குடந்தை ஸ்ரீ தேசிகன் என்றழைக்கப்பட்ட ஸ்ரீ கோபாலார்ய மகாதேசிகன் என்ற ஓர் ஆசார்யர் கும்பகோணத்தில் இருந்தார். அவரை மூன்று ஸந்நியாசிகள் ஆசாரியனாக ஏற்று ஸ்ரீ பகவத் ராமாநுஜ ஸித்தாந்தங்களைக் கற்க நேரிட்டது. இம்மூன்று முனிவர்களின் சிஷ்ய கோடிகளின் பரம்பரையைத்தான் முனித்திரய பரம்பரை என்று அழைக்கிறோம் என்பது வேறு சிலர் கருத்து. இவ் வழி வந்து "ஆண்டவன்" என்னும் ஆசார்யர்களின் தலைமை நிலையம் எனத் தக்க வகையில், "பெரிய ஆசிரமம்" என்னும் ஒரு ஸ்தாபனம் ஸ்ரீரங்கத்தில் நசிப்

ஸ்ரீரங்கம் கோயில் - ராயகோபுரம் - பிரதான நுழைவாயில்



புறத்துக்கு வெளியே கொள்ளிடத்தின் தென் கரையில் — ஒரு பர்ணசாலை போல் அமைந்துள்ளது.

எளிமை, ஆயினும் ஒரு மன நிறைவு. பற்றற்ற துறவறம், ஆயினும் பிறரிடம் ஒரு கனிவு. தன்னடக்கம் ஆயினும் ஆசார்யனென்ற முறையில் தலைமை தாங்கும் திறமை. கடுமையான அநுஷ்டானம் ஆனால் அது காரணமாகப் பிறருக்கு ஒருவிதக் கஷ்டமுமின்மை. தன்வழிப் போக்கு ஆனால் பிறர் வழியில் குறுக்கிடாமை என்றிப்படி பற்பல அரிய ஆன்ம குணங்களே ஒன்று இரண்டு தோற்றம் பெற்றனவோ என்னும் வகைத்தான பெரியோர்களே மேற் சொன்ன ஆதினத்தின் தலைமை தாங்கி ஆசாரியர்களாய் இதுவரை வந்துள்ளனர்.

''ஸ்ரீ ரங்கநாத திவ்ய மணி பாதுகா பரிசர்யா துரந்தரர்'' என்னும் விருதுடன் இவ்வழி வந்த ஆசாரியர்களை அழைப்பது வழக்கம். ஆசாரிய பதவியிலிருப்போரின் ஜன்ம ஸ்தலத்தின் பெயருடன் 'ஆண்டவன்' என்னும் பதவிப் பெயரையும் கூட்டிக் குறிப்பிட்ட ஆசார்யரை அழைப்பது வழக்கம்.

தென்பரை ஆண்டவன் என்பார் கடைசியாக இந்தப் பரம்பரையிலிருந்தவர். அவரிடமிருந்து 1963ம் வருஷத்தில் காஷாயம் பெற்று ஆதினத்தின் தலைமைப் பதவியையும் ஏற்றவர் இன்று மூர்த்தாபிஷிக்தராயிருக்கும் திருக்குடந்தை ஆண்டவன் என்பவராவர்.

தென்பரை ஆண்டவன் ஸ்வாமியின் மிக மிக மிக வயோதிக காலத்தில் ஏதோ சிறிய தேஹயாபாதைக்காகக் கொஞ்சம் சுக்கு திப்பிலி என்பன போன்றவைகளை உதவிடும் தொண்டு அடியேனுக்கு ஏற்பட்டது. இதைச் சில அன்பர்கள் ''திருக்குடந்தை ஆண்டவன் பட்டத்துக்கு வருவது இரண்டு வருஷ காலம் தாமதமாயிற்று; அதற்கு ஸ்ரீஹரி தான் காரணம்'' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இவ்வாசாரிய பரம்பரையில் இன்று தலைமைப் பதவியிலிருக்கும் ஸ்ரீ திருக்குடந்தை ஆண்டவனுக்கு ஸ்ரீ வேதாந்த ராமானுஜ மகா தேசிகர் என்பது துறவறத் திருநாமம். இவர் பிறந்தது திருக்குடந்தை— கும்பகோணம் என்னுமிடம். இவருடைய பிதா உபய வேதாந்தாசார்யரான ஸ்ரீ பத்மநாபாசார்ய ஸ்வாமி என்பவராவார். ஸ்வாமிகளின் அவதாரம் பராபவ (1907) வருஷம் பங்குனி புஷ்ய நக்ஷத்திரத்தன்று. பூர்வாசிரமத் திருநாமம் ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ராகவாசார்யன்.

கும்பகோணத்தில் ஸ்ரீ ஆராவமுதனின் திருக்கோயிலின் வெகு அண்மையில்தான் ஸ்ரீ பத்மநாபாசார்யரின் திருமாளிகை. இதனால் திருக் குமாரரான ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ராகவாச்சார்யருக்குப் பால்யம் முதலே ஸ்ரீ ஆராவமுதனிடம் அளவு கடந்த ஈடுபாடு. ஆராவமுதாழ்வான் என்று விருது பெற்ற அவ்வெம்பெருமானுக்கு இந்த ஸ்வாமியின் பால் அன்யாதிருச்யமான அனுகம்பை ஏற்பட்டது இயல்புதானே! அதனால், ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளான தமிழ் மறைகளில் இந்த ஸ்வாமிக்கு மிகச் சிறப்பான பாண்டித்தியம் ஏற்பட்டது. வேதோபநிஷதங்களிலும், ஸ்ரீ பாஷ்யம், கீதாபாஷ்யம் போன்ற ஸம்பிரதாய திவ்விய ஸூக்திகளிலும் விசேஷ அதிகாரி என்று மஹா பண்டிதர்களும் ஏற்கத்தக்க பாண்டித்தியம் பெற்ற இந்த ஸ்வாமி தர்க்கம் வியாகரணம் என்னும் இரண்டு சாஸ்திரங்களிலும் மிகத் தேர்ந்தவராயும் பால்யத்திலேயே விளங்கலானார்.

ஸ்ரீ ஆராவமுதன் ஸந்நிதியில் ''அத்யாபகம்'' என்னும் தமிழ்மறை ஓதும் கைங்கரியத்தையும் ஏற்றுத் திறமையுடன் நிர்வகித்து வந்தார்.

காலக்கிரமத்தில் 'நம்மாண்டவன்' என்று பிரஸித்தரான தேரழுந்தூர் ஆண்டவன் [ஸ்ரீ வேதாந்த ராமாநுஜ மஹாதேசிகன்] என்பாரைத் தமக்கு ஆசார்யனாய் ஏற்று, குரு பரம்பரை அன்வயத்தையும் பெற்றார். ''ஆமுதல்வன் இவன்'' என்று அவ்வாசார்யனால் ஆசி பெற்றார்.

சுமார் தமது இருபதாவது வயதிலிருந்தே ஆஸேது ஹிமாசலம் ஆஸ்திக பரமான உபந்நியாஸங்களைக் கோடை மழையெனப் பொழிந்து தம்மைத் தேடி வந்த பெரும் புகழுக்கு உறைவிடமாய் நின்ற இந்த ஸ்வாமியைத் திருக்குடந்தை ஸ்ரீ கண்ணன் ஸ்வாமி என்றுதான் உலகம் அழைத்து வந்தது.

காலக்கிரமத்தில் இவர் துறவறமேற்றதும் முனித்திரய ஸம்பிரதாயத்தின் தலைமை ஆசார்யப் பதவியிலிருந்து நிர்வகித்து வர நேரிட்டதும் அந்த ஸம்பிரதாயத்தின[illegible]யன்றிப் பொதுவாக உலகமும் — வைஷ்ணவ ஸம்பிரதாயமும் செய்த பாக்கியமாகும்.

இப்படித் தலைமைப் பதவி ஏற்ற பிறகு பாத யாத்திரையாகவே தென்னாடு முழுதும் ஸ்ரீ ஆண்டவன் ஸ்வாமிகளின் ஸஞ்சாரம் பூர்த்தியாயுள்ளது. சென்றவிடத்திலெல்லாம் உபந்நியாஸங்கள். தினே தினே அவற்றின் தரமும், சுவையும் இனிமையும் பெருகிக் கொண்டே வர சிஷ்ய கோடிகளும் பெருகிக் கொண்டே வருகின்றனர்.

ஸஞ்சார காலத்தில் திருநீர்மலை போன்ற சிலவிடங்களில் இப் பரம்பரையினருக்கு — மடங்கள் கட்டவேணுமென்றும் திருவுள்ளம் ஏற்பட்டுள்ளது.

இவருடைய சிஷ்யர்களுக்கும் இந்த ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களுக்கும் இவரிடமுள்ள பக்தி, இமயத்தினும் பெரிது. மற்றும் ஆங்காங்கு பண்டித பரிஷத்துகளை நடத்தி, பண்டிதர்களுக்குப் பரிசளித்து ஆதரித்தும் வருவதால் பொதுவாக ஆஸ்திகர்களுக்கும் — சிறப்பாகப் பண்டித ஜனங்களுக்கும் இவரிடம் மகத்தான ஈடுபாடு உண்டு.

தற்போது இவருடைய ஷஷ்டியப்த பூர்த்தி விழா மஹோத்சவமாக 29-3-67 முதல் பலவிடங்களில் சிஷ்யகோடிகளால் நடத்தப்பட்டு வருகிறது. ஸ்ரீரங்கத்தில் நடந்து வரும் விழாவில் நாளது 18–4–67 தினம் ஒரு மணி விழா மலரும் பிரசுரமாகிக் கிரயம் இல்லாமலே இலவசமாக வழங்கப்படவிருக்கிறது.

மரம் பழுத்தால் வௌவாலை 'வா வா' என்றழைக்க வேணுமா? ஆஸ்திக மக்களெல்லாம் இவ்விழாவில் அவரவருக்குத் தக்க முறையில் அன்வயப்படுவது திண்ணம்.

### வெள்ளி விழா மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்



## அத்தியாயம் 1

எத்தனையோ மாதங்களாக ஜானு கண்டுகொண்டிருந்த கனவு அன்று பலிதமாகி விட்டது. அவள் ஒரு கைக் கடிகாரம் வாங்கி விட்டாள்! அதுவும் அவள் தானே சம்பாதித்து, மாதா மாதம் அம்மாவுக்கும் அக்காவுக்கும் தெரியாமல் சேர்த்து வைத்த பணத்திலிருந்து! அவளுடைய அழகையும் நிறத்தையும் ஊரார் புகழ்வதை அவள் அறியாதவளா என்ன? தங்க வளையல்களும் நெக்லஸும் இருக்க வேண்டிய இடங்களைக் கண்ணாடி வளையல்களும் தங்க முலாம் பூசிய வெள்ளிச் சங்கிலியும் நிரப்பி அவள் மனத்தை நோகச் செய்வதை அவளால் இப்போது நிவர்த்தி பண்ண முடியாது. ஆனால் கண்களுக்கு ரம்மியமான ஒரு பதினைந்து காரட் கடிகாரத்தை இருநூறு ரூபாய்க்கு வாங்கும் சக்தி அவளுக்கு இருக்கிறதே!

இடது கையிலிருந்த வளையலை வலது கைக்கு மாற்றி விட்டுக் கடிகாரத்தைக் கட்டிக் கொண்டாள் அவள்.

**பி.வி.ஆர்**

அதைப் பார்த்த போஸ்ட்மாஸ்டர் சிதம்பரம் இலே சாகச் சிரித்தார்.

''ஏன் சார் சிரிக்கிறீர்கள்?'' மகிழ்ச்சியின் நடுவிலும் ஜானுவுக்குக் கோபம் வந்தது.

''இல்லேம்மா.... ஆக்கப் பொறுத்தவள் ஆறப் பொறுக்காமல் இருக்கிறாயேன்னு நெனைச்சேன். சிரிப்பு வந்தது!''

''இது என் வாட்சு.... நான் வாங்கினேன்....!''

''யாரும் இல்லேன்னு சொல்லலியே? இதையே இப்படியே வீட்டுக்குக் கொண்டு போய் அம்மா



கிட்டே கொடுத்து அவன் கையிலிருந்து வாங்கிக் — ''

''எனக்குத் தெரியும், சார்!''

''கோபிச்சுக்காதே, ஜானு! ஏதோ என் மனசிலே பட்டதைச் சொன்னேன். அவ்வளவுதான்.....!''

''சார்! இன்னமே உங்களுக்கு என்னைப் பத்தி என்ன தோணினாலும் என்ன பட்டாலும் அதை உங்க மனசுக் குள்ளேயே வைச்சுக்குங்க. என்ன தெரிஞ்சுதா?''

''சரி அம்மா! ஏதோ வயசானவன்.''

''அது எனக்குத் தெரியாதா? இளம் வயசுக்காரனாக இருந்தா நான் சொல்ற பதிலே வேறேயாக இருந்திருக்கும். நான் வரேன் சார்... ஆமாம், உங்க பொண்ணு சீமந்தம் என்னிக்கு?''

''தை மாசம் மூணும் தேதி.''

''இங்கிலீஷ் தேதியிலே சொல்லுங்க சார்....!''

''ஜனவரிபதினாறும்தேதி.''



''அடுத்த ஞாயிற்றுக்கிழமை?''

''ஆமாம்....''

''என்னைக் கூப்பிடுவீங்க, இல்லியா?''

''ஏம்மா, இப்படிக் கேட்கிறே?''

''இப்பத்தானே நான் உங்க மேலே 'சள்'னு விழுந்தேன்?''

''நீ என்னிக்கு யார்மேலே சள்ளு விழல்லே?''

சிதம்பரம் வாய் விட்டுச் சிரித்தார்.

''எம்பேர்லே கோபமா?''

''சேச்சே, அதெல்லாம் இல்லேம்மா! உம்பேர்லே யாருக்காவது கோபம் வந்தா அவன் ரசிகனே இல்லேம்மா!''

''தாங்யூ ஸார். இந்த வாட்சு நன்னாயிருக்கு இல்லே!''

''ரொம்ப நன்னாயிருக்கு.''

''என் கைக்குப் பாந்தமா இருக்கு, இல்லியா?''

''ரொம்பப் பாந்தமா இருக்கு!''

''என்ன சார், என்னைத் திருப்திப் படுத்தணும்னு பேசற பேச்சாப் பேசறேளே சார்!''

''அதெல்லாம் இல்லே. உண்மையாகவே நன்றாக இருக்கு.''

''ரொம்ப தாங்க்ஸ் சார், ஏன் சார் உங்க பெண் பர்வதத்துக்குக் கடிகாரம் இருக்கிறதா?''

''இல்லே......!''

''நீங்க வாங்கிப் போடலேயா?''

''ஊஹூம்.....!''

''அப்போ அவளுடைய கணவராவது வாங்கிக் கொடுக்க வேண்டாமோ?''

''ஏன் கொடுக்கலேன்னு தெரியாது, ஜானு?''

''ஒரு வேளை நீங்க மாப்பிள்ளைக்குத் தலைதீபாவளிக்குக் கடிகாரம் வாங்கிக் கொடுக்கலியோ....?''

''அதுதான் காரணமா இருக்குமோ என்னமோ? இன்னிக்குப் பர்வதத்திடமே கேட்டு நாளைக்கு உனக்குப் பதில் சொல்றேன்......''

''சரி, சார்! நான் வரேன். மணி ஆர்டர் லெட்ஜரிலே ஒரு கையெழுத்தைப் போட்டு விடுங்கள்.''

''சரி......!''

ஜானு சென்ற பிறகும் சிதம்பரம் வெகு நேரம் அவளைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தார். இருபத்திரண்டு வயதிலே அவள் இன்னும் சிறு பெண் போல அல்லவா நடந்து கொள்கிறாள்? பெண்களுக்கே ஆடை அலங்காரங்களில், நகைநட்டுக்களில் ஆசையும் மோகமும் அதிகம்தான். ஆனால் ஜானுவைப் போல் அவர் பார்த்த

இல்லை. தான் ஓர் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவள், மற்ற எத்தனையோ பெண்களைப் போலத் தன்னால் இருக்க முடியாது என்ற எண்ணமே அவளுக்கு இல்லையே? இதே வயதில் ஒரு பிள்ளையானால், ஊரார் அவனைப் பொறுப்பற்றவன், ஊதாரி என்றெல்லாம் பேசுவார்கள். ஓரளவுக்கு ஜானுவையும் அந்த நிலையில் தான் சொல்ல வேண்டும். கிடைக்கிற சம்பளத்தில் வீட்டுச் செலவுக்கு அம்மாவிடம் என்ன கொடுக்கிறாளோ என்று சிதம்பரம் தம்முள் கேட்டுக் கொண்டார். அவள் தினம் தினம் உடுத்திக் கொண்டு வரும் விதம் விதமான நைலக்ஸ், நைலான், பட்டுப் புடவைகளைப் பார்த்தால் அரிசிக்கும் பருப்புக்கும் பாலுக்கும் ஜானுவால் எப்படிக் கொடுக்க முடியும்? என்ன கொடுக்க முடியும்?

ஆனால் இவ்வளவிருந்தும் தன் அழகில் தானே மயங்கி, அலங்காரப் பொருள்களில் மோகங் கொண்டிருக்கும் ஜானுவின் உள்ளம் மாற்றுக் குறையாத தங்கம் என்று அவருக்குத் தெரியும். அவளுடைய நேர்மையும், தூய்மையும் யாருக்குமே இருக்க முடியாது. படபடவென்று பேசி, மனத்தில் உள்ளதை அப்படியே கொட்டி விடும் அவள் தான் அப்படிப் பேசுவதால் எதிராளிகள் என்ன நினைப்பார்கள் என்ற கவலையே கொள்ளாமல் இருக்கிறாள். அதனாலேயே அவளை எத்தனையோ பேர்கள் வெறுக்கும் அளவுக்கு அவள் தன்னைத் தானே தாழ்த்திக் கொண்டிருக்கிறாள். ஆனால் அவளுடைய உண்மை சுபாவத்தை அறிந்தவர்கள் மட்டும், ஜானு லட்சத்தில் ஒருத்தி என்றே எடை போட்டிருக்கிறார்கள்.

திடீரென்று ஒரு தந்திச் சேவகன், சிதம்பரத்துக்கு முன்னால் வந்து நிற்கவே, அவருடைய சிந்தனை தடைப்பட்டது. அவர் ஜானுவை மறந்தார்.

ஜானுவின் திருப்தியும் மகிழ்ச்சியும் அவளுடைய நடையில் பிரதிபலித்தன. காந்திநகர் தபால் நிலையத்திலிருந்து வெளியேறிய அவள், மயிலாப்பூர் பஸ்ஸைப் பிடிக்க நடந்தாள் என்று சொல்லுவதைவிட ஓடினாள் என்றே சொல்ல வேண்டும். எதிர் வீட்டுக் கற்பகம், இன்ஷ்யூரன்ஸ் கோமதி, டீச்சர் விசாலம் எல்லாருக்கும் புதிதாக வாங்கிய கைக் கடிகாரத்தைக் காட்டியாக வேண்டும். முதலில் விசாலத்திடம் காட்டி, சாவியை முன்னுக்கும் பின்னுக்குமாய் ஓட்ட வேண்டுமா அல்லது ஒரே சீராக முன்னுக்கியே கொடுக்க வேண்டுமா என்று கேட்க வேண்டும். கடிகாரத்தைப் பொறுத்த வரையில் விசாலத்துக்கு இதெல்லாம் தண்ணீர் பட்ட பாடு! எத்தனை கடிகாரங்களை அவள் இதுவரை மாற்றியிருக்கிறாள்?

ஜானுவுக்குத் திடீரென்று சிரிப்பு வந்தது. தெருவில் நடந்து செல்பவர்களில் ஓரிருவர் அவள் தனக்குத் தானே சிரித்துக் கொள்வதைப் பார்த்ததை உணர்ந்தும், அவள் உடனேயே சிரிப்பை அடக்கிக் கொள்ளவில்லை. எத்தனையோ விதமான கைக் கடிகாரங்களை யெல்லாம் கட்டிப் பார்த்து விட்டு, விசாலம் கடைசியாக ஆண்கள் கட்டும் பெரிய சதுரமான கடிகாரத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறாள்! அது அவளுக்கு நன்றாகவே இல்லை! இரண்டு மூன்று தடவைகளுக்கு மேல் ஜானு கேலி செய்தாகி விட்டது. ஆனால் யார் என்ன கேலி செய்தாலும், விசாலத்துக்குத்தான் கோபமே வராதே!

விசாலத்தைப் பற்றி எண்ணியபோது உண்டான சிரிப்பு அம்மாவையும் அக்காவையும் நினைத்தபோது, திடீரென்று மறைந்தது. ஒருவித பயமும் சங்கடமும்கூட உண்டாயின. அக்காவாவது ஓரிரு வார்த்தைகளில் சாட்டை அடிப்பது போல் அடித்து விட்டுப் போய் விடுவாள். ஆனால் அம்மா இந்தக் கடிகாரம் ஓடி ஓடி ஓய்ந்து ரிப்பேருக்குப் போய்க் கடைசியில் கிடைத்த விலைக்கு விற்கிற நாள் வரை ஓயாது திட்டிக் கொண்டேயிருப்பாள். இது அம்மாவின் குணம் என்று விட்டு விடவும் ஜானுவால் முடியாது.

அம்மாவை எப்படிச் சமாளிப்பது என்ற யோசனையுடன்தான் அவள் பஸ்ஸில் ஏறினாள். இடையிடையே தங்கை கமலாவின் நினைவும் வேறு வரவே, அவளுடைய முகத்தின் ஒளியே மறைந்து விட்டது. பிரகாசமாக இருந்த வானத்தில் திடீரென்று கரு மேகங்கள் சூழ்ந்து விட்டன.

அரிசிக்காரன் தெருவில் ஒரு வீடு. கம்பி அழியிட்ட, மங்களூர் ஓடு வேய்ந்த வீடு. சின்னஞ் சிறு திண்ணையைத் தாண்டினால் குறுகலான ஒரு ரேழி. ரேழியின் வலது புறத்தில், திண்ணைக்கும் கூடத்துக்கும் நடுவே ஒரு சிறு அறை. இந்த அறையிலிருந்து கூடத்துக்கும் வழி இருந்தது.

அச்சிறிய வீட்டுக்கு, கூடம் சற்றுப் பெரிது என்றே சொல்லலாம். ரேழிக்கு நேர் எதிரே நாலடிச் சதுரத்துக்கு ஒரு முற்றம். கூடத்தில் அதிக

சாமான்கள் இல்லை. ஒரு சிறு மேஜை. அதன் மேல் எப்போதோ வாங்கிய ரேடியோ. மேஜைக்கு முன்னால் ஒரு மூக்காலி. மூலையில், சுருட்டி வைக்கப்பட்ட இரண்டு பாய்கள். வீட்டின் முன் பக்கத்து அறையைப் போலவே, ஆனால் அதைக் காட்டிலும் இரு மடங்கு பெரிதாக இன்னோர் அறை கூடத்துக்கு அப்பால் இருந்தது. படுக்கை அறையாகப் பயன்பட்ட அதில் படுக்கைகளைத் தவிர, பெட்டிகளும் இருந்தன. ஒரு கொடியில் புடவைகளும் ரவிக்கைகளும், பெண்களின் மற்ற ஆடைகளும் தாறுமாறாகக் கிடந்தன.

வீட்டின் பின்புறத்தில், சமையலறையும் பூஜை அறையும் இருந்தன. தாழ்வாரத்தில் அரைப்பதற்கும் ஆட்டுவதற்கும் அம்மியும் ஆட்டுக் கல்லும் பதித்திருந்தார்கள். தாழ்வாரத்திலிருந்து சரசர வென்று இறங்கிய ஒரு சிறு கொல்லையில் கிணறும் அதன் அருகே துணி துவைக்கும் கல்லும் காணப்பட்டன. கிணற்றுக்கு இடதுபுறமாய், தெருவிலிருந்தே நேராகப் பார்த்தால் தெரியக்கூடிய ஒரு துளசி மாடம், தன் வெண்ணிறப் பூச்சை இழந்து, செங்கல்லின் சிவப்பு பழுப்பாக மாறிக் கொண்டிருக்கும் அலங்கோலத்தில் காட்சி அளித்தது.

கொல்லையில் இரண்டு தென்னை மரங்களையும், ஒரு மாமரத்தையும் தவிர வேறு மரங்கள் கிடையா.

**ச**மையலறையிலிருந்து வந்த பாகீரதி கூடத்தை அடைந்ததும் நின்றாள்.

முற்றத்துத் தூணில் சாய்ந்தவளாய், கமலா ஏதோ ஒரு பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தாள்.

''ஏண்டி கமலா! பரீட்சைக்கு இன்னும் இரண்டு மாசம்தானே இருக்கு?''

பெண் பதில் சொல்லவில்லை.

''ஏண்டி, நான் ஒருத்தி கேட்கிறேன். இப்படி அலட்சியமா நீ உன் பாட்டுக்கு....'' பாகீரதிக்கு மூச்சு வாங்கியது.

படித்துக் கொண்டிருந்த பக்கத்தில், அடையாளத்துக்கு ஒரு விரலைச்சொருகி, பத்திரிகையை மூடின கமலா, அம்மாவை ஏறிட்டுப் பார்த்தாள்.

''என்ன கேட்டேம்மா, பரீட்சையா?''

''ஆமாண்டீ! பரீட்சைதான். அதுக்குத்தான் இதைப் படிக்கிறியா ?''

''இப்போ மணி என்ன ஆகிறது பார்த்தியா ?''

''என்னம்மா சொல்றே ?''

''சாயங்கால வேளையிலே யாரும்மா படிப்பா....? அப்படிப் படிச்சாத்தான் எப்படி ஏறும்?''



''உன் மண்டையிலே ஏறுதுடீ.... ஏறுது. ஏழடிச்சா சாப்பிட உட்காருவே. அப்புறம் படுக்கையை உதறிப் போடக்கூடக் கையாலாகாமல் விரிச்சுப் படுப்பே. தூங்கினா, ராட்சஸி மாதிரி ஒரு தூக்கம். எழுந்தால் கேட்கவே வேண்டாம். ஒரு சோம்பல். பொண்ணாப் பொறந்தவளுக்குக் காலங்காத்தாலே உடம்பெல்லாம் சோம்பலாயிருந்தால், அவள் குடியும் குடித்தனமுமா எப்படி இருப்பாள்? காப்பி சாப்பிடத் தெரிகிறது நன்னா. அப்புறம் பேப்பர்... வெய்யில் ஏற ஏற, மண்டையிலும் ஒண்ணும் ஏறுது என்கிற வாதம். உம்...உம்.... எப்படியோ போ !''

கமலா அலுத்துக் கொண்டாள்.

''நீ உன் காரியத்தைப் போய்ப் பாரேன்.....அக்காவும் ஜானுவும் வர்ற நேரம்......''

''அப்போ, நான் என்ன சுத்தினாலும் நீ இப்படித்தான் இருப்பியா ? எல்லாரையும்விட உன்னைச் செல்லமா வளர்த்தேன் பாரு, என்னைச் சொல்லணும்......!''

''நீ அந்த மாதிரி வளர்த்தது தப்பு.''

''ஓகோ... அதனால்தான் பி.ஏ.யிலே இரண்டு வருஷம் பெயிலாப் போனியாக்கும்......''

''நான் படிக்க வைன்னு சொல்லலியே ! அக்காவுக்குத் தானும் எஸ்.எஸ்.எல்.ஸி., ஜானுவும் அதுக்கு மேலே போகலே, கடைசித் தங்கையாவது பட்டதாரியாகப் பிரகாசிக்கட்டும்னு ஆசை. அதனாலே என்னைக் காலேஜிலே சேர்த்தா......!''

''ஓகோ....''

கமலா தனக்கே உரித்தான அலட்சியத்துடன் பத்திரிகையில் கண்களைச் செலுத்தினாள்.

பாரதியின் ரத்தம் கொதித்தது.

''நீ எப்படியோ நாசமாய்ப் போ. நான் இதோ கோயிலுக்குப் போகிறேன். ஸ்டவ்விலே சாதம் வேகறது. பார்த்து இறக்கி வை. அதையாவது செய்......''

கமலாவின் பதிலுக்கும் காத்திராமல் பாரதி வெளியேறினாள்.

பாரதி சென்ற சில நிமிடங்களுக்கெல்லாம் ஜானு திரும்பினாள். கமலா படிப்பில் மூழ்கியிருப்பதைக் கண்ட அவள் சந்தடி செய்யாமல் படுக்கை அறைக்குள் நுழைந்து, கைக் கடிகாரப் பெட்டியைத் திறந்து கடிகாரத்தை அதில் வைத்து, பெட்டியில் இருந்த புடவைகளின் நடுவே மறைந்தாள்.

திரும்பி வந்ததும், ''அம்மா எங்கே கமலா.....?'' என்று வினவினாள்.

''கோவில்.''

''எப்போ போனாள்?''

''இப்பத்தான். சும்மா கேள்வி கேட்டுத் துளைக்காதே....!''

''அடே அப்பா ! காதல் கதை அவ்வளவு இண்டரஸ்டிங்கா இருக்கா?''

''ஆமாம்.... உன் மாதிரி ஒரு கதாபாத்திரம்.....!''

ஜானு கிணற்றை நோக்கி நடந்தாள். கைகால் கழுவிக் கொண்டு சமையலறைக்கு வந்த போது, சாதம் வெந்து கொண்டிருந்தது. அதை இறக்கி வைத்து விட்டுக் காப்பியைக் கலந்து கொண்டாள்.

காப்பியைச் சாப்பிட்டுவிட்டு அவள் கூடத்துக்குத் திரும்பிய போது, சோம்பல் முறித்துக் கொண்டே கமலா எழுந்தாள்.

''ஏண்டி, ஜானு சாதம் வெந்தாகி விட்டதா ?''

''ஸ்டவ்விலே சாதம் இருக்கா?''

''ஏன் நீ காப்பி கலந்துக்க, அதை இறக்கி வைக்கல்லியா?''

''ஏதோ ஒரு வெண்கலப் பாத்திரத்திலே தண்ணியிலே ஏதோ வெள்ளையா யிருந்தது. அதுதான் சாதமா ?''

ஜானுவின் நையாண்டி கமலாவையா பணிய வைக்கும் ?

''ஐ ஆம் ஸாரி, ஜானு ! அங்கே வேகிறது அரிசின்னு நெனைச்சுக் கேட்டுட்டேன். என்னை மன்னிச்சுடு. அது உன் மூளை. கார்த்தாலே போட்டது இன்னும் வேகலை போலிருக்கு!''

''தாங்க்ஸ். உனக்கு அதுதான் மூளைன்னு தெரிஞ்சுதா? எப்படி?''

இவர்களுடைய ஆரவாரமான யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் திடீரென்று கதவைத் திறந்து கொண்டு யாரோ வருவது தெரிந்தது.

சந்தானம்தான் வந்தான்.

''நீங்க இரண்டு பேரும் வீட்டிலே இருக்கிறீர்கள் என்று தெருவிலேயே தெரிந்து விட்டது.....!''

''அங்கேயே நின்னு கேட்டிருக்கிறது தானே ?'' என்றாள் ஜானு.

''இன்னும் அதுக்கு மனசு பக்குவமாகவில்லை. கமலா, ஜானு என்ன சொல்லுகிறாள்?''

''ஏன் மூட்டிவிடப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டாள் கமலா.

''நீங்க சும்மா மூட்டி விடுங்கள் சார் ! கமலா அசைய மாட்டாள். சொரணை என்கிற உணர்ச்சியே...!''

''ஜானுவுக்குத்தான் உடம்பெல்லாம் இருக்கு'' என்று முடித்தாள் கமலா.

## லிப்கோ

பெருமையுடன்

அளிக்கும்



ஸ்ரீமதி ரங்கநாயகி ரங்கராஜன் அவர்களின்

# “குழந்தை வளர்ப்புக் கலை”

குழந்தைகளைத் திடம்பட வளர்ப்பதற்கு அவசியமான நுட்பங்கள் அனுபவத்திற்கேற்ப எளிய நடையில் எல்லோர் மனத்தையும் கவரத்தக்க முறையில் தரப்பட்டுள்ளன. பருவத்துக்குத் தக்கவாறு ஒவ்வொரு பருவத்திலும் குழந்தைகளைப் பாதுகாத்துச் சான்றோராக்க அறிவூட்டும் குறிப்புக்கள் நிறைந்துள்ளன. நூற்றுக்கணக்கான படங்கள் இந்நூலை அலங்கரிக்கின்றன.

**2-ஆம் பதிப்பு : 200 பக்கங்கள் – விலை ரூ. 2.60; தபாலில் ரூ. 3.45**

பிற லிப்கோ வெளியீடுகள் :

| | | | |
|---|---|---|---|
| குடித்தனப் பாங்கு | – ஸ்ரீமதி ப்ருந்தா வரதராஜன் | .. | ரூ. 2.00 |
| இயற்கை தரும் இன் மருந்துகள் | | .. | ரூ. 4.00 |
| ஸ்ரீ மஹா பக்த விஜயம் | – ஸங்கரதற பஜனாவளியுடன் | ... | ரூ. 3.50 |
| ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் | – மூலம் மட்டும் | ... | ரூ. 2.60 |



தி லிட்டில் ப்ளவர் கம்பெனி (லிப்கோ), சென்னை-17; எம். தாமோதரம் & கம்பெனி, c/o M. D. நாகபூஷணம், 108, கார்ப்பொரேஷன் பழக் கடை, சென்னை-1 ; ஹிக்கின்பாதம்ஸ், சுதேசமித்திரன் ரெயில்வே ஸ்டால்கள்.

NALIN

---

*

# சுத்தமான தேன்!

நூற்றுக்கு நூறு சுத்தமான குடகுத் தேன். 450 கிராம், 225 கிராம் பாட்டில்களில் கிடைக்கும். சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட அக்மார்க் முத்திரையுடன் ஸ்பென்ஸர் கம்பெனியாரால் பாக் செய்யப்பட்டது.

**ஸ்பென்ஸர் & கம்பெனி லிமிடெட்**

153, மவுண்ட் ரோடு, மதருஸ்-2.




Spencers3/SCL/39RATAM

---




பயிர் பாதுகாப்பு, வீடுகளில்பூச்சிகளின்மேல் தெளிக்கும் மருந்துகளை உபயோகிக்கவும்

பயிர் பாதுகாப்பிற்கு :

| | |
|---|---|
| பாராமார் - 50 (பராத்யான் 50% E. C) | நெல், கரும்பு, பருத்தி, வேர்க்கடலை மற்றும் இதர பயிர்களில் விழும் பூச்சிகளை கட்டுப்படுத்த உபயோகிக்கக்கூடியது |

வீடுகளில் காணும் பூச்சிகளுக்கு :

| | |
|---|---|
| 2 × ஸ்ப்ரே<br>ரோச்மார்<br>டை - ப்ளை<br>பக் - மார்<br>ஹெக்ஸா க்ளோர் | வீடுகளில், கொசு, ஈ, கரப்பான் பூச்சி மற்றும் ஜமக்காளம் கம்பளி முதலியவைகளில் காணும் வண்டுகளைக்கட்டுப்படுத்தச் சிறந்தது. |

## பாரத் பல்வரைசிங் மில்ஸ்

(பிரைவேட்) லிமிடெட்;

‘ஹெக்ஸாமார் நூதஸ்’

| | |
|---|---|
| 1074, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, மதராஸ்-19 | 28, சயானி ரோடு பம்பாய் - 28 |

''சரி, சரி! நான் வேணும்னு போயிடறேன். அப்பப்பா! என்ன சத்தம்! இரைச்சல்.....''

''அப்போ வேறே அறை பார்த்துண்டு போங்கள். நாங்க இருக்கிற வரைக்கும் இந்தச் சத்தம் இருக்கத்தான் இருக்கும்!'' — கமலா.

''அதைப் பத்தித்தான் யோசனை பண்ணிண்டே வந்தேன்....'' என்ற சந்தானம், ''ஜானு! நான் கொஞ்சம் வெளியே போகவேண்டியிருக்கு. ஒரு வேளை ராத்திரி பன்னிரண்டு மணி ஆனாலும் ஆகும். அம்மாகிட்டே சொல்லு!'' என்றான்.

''சரி....'' என்ற ஜானுவுக்கு அப்போதே கடிகாரத்தை அவனிடம் காட்ட வேண்டும் என்று மனம் துடித்தது. ஆனால் கமலா இருக்கிறாளே? கோபத்தில் பேசக்கூட மாட்டாள். மேலும் அம்மாவுக்கும் அக்காவுக்கும் முதலில் அவள் வாங்கிய விவரத்தைச் சொல்ல வேண்டும். அவர்கள் என்ன சொன்னாலும் அதையெல்லாம் கேட்டுக் கொண்டாக வேண்டும்.

சந்தானம் சென்றபின், கமலா ரேடியோவைத் திருப்பிக் கொண்டிருக்கும் ஜானுவை ஓரக் கண்ணால் பார்த்தவளாய்ச் சமையல் அறையை நோக்கி நடந்தாள். டன் பிறந்த சோம்பல் உடம்பெல்லாம் வியாபிக்க, சதை பெருகின அவளுடைய உடல் தள்ளாடியது.

திரும்பி வரும்போது ரேடியோவின் பாட்டுக்குத் தாளம் போட்டுக் கொண்டிருந்தாள் ஜானு. மீண்டும் பத்திரிகையை எடுத்து, முற்றத்துத் தூணில் சாய்ந்தவளாய்க் கமலா படிக்கலானாள்.

''ஏண்டி, இந்தக் கண்ட கண்ட புத்தகங்களைப் படிக்கிறே....?''

''நீ கண்ட கண்ட சினிமாப் பாட்டைக் கேட்கலாம் இல்லியா?''

''எனக்கு ஒன்றும் மார்ச்சு மாசம் பரிட்சை இல்லே.....''

''பாட்டுப் போட்டியும் தாளப் போட்டியும் இருக்காக்கும்......''

''அது சரி! நீ எதுக்கு என் புடவையைக் கட்டிண்டிருக்கே?'' அப்போது தான் ஜானு, தன் பச்சை நிற நைலான் புடவையை அவள் கட்டிக் கொண்டிருப்பதைக் கவனித்தாள்.

''எனக்குப் புடவையில்லே....!''

''அதுக்கு?''

''யார்கிட்டே நிறையப் புடவையிருக்கோ, அவா புடவையைக் கட்டிண்டேன்......!''

''இப்போ அதை முதலிலே அவிழ்த்துத் தண்ணியிலே போடு....!''

''முடியாது!''

''உன் புடவையைக் கட்டிக்கொள்.''

''கட்டிக் கொள்ளும்படியா நல்ல புடவை இல்லே....!''

''அக்காவின் புடவையை எடுத்துக் கொள்ளேன்.''

''நீயும் அக்காதானே!''

''அந்த உரிமையை இந்தப் புடவை விஷயத்தில் மட்டும் கொண்டாடறதுக்கு உனக்கு வெட்கமாயில்லே?''

''இருந்தால் போயும் போயும் உன் புடவையை எடுப்பேனா?''

''நேத்துத்தான் நான் அதைத் துவைச்சு இஸ்திரி போட்டு வைச்சேன்......''

''அதுதான் பார்த்து இதை எடுத்துண்டேன்.....!''

''இப்போ அவிழ்த்து வைக்கப் போறியா, இல்லியா?''

''சும்மா அலட்டிக்காதேயம்மா....! நாளைக் கார்த்தாலே நானே 'வாஷ்' பண்ணி, காய வைத்து இஸ்திரி போட்டு வைக்கிறேன்!''

''இதை முதலிலேயே சொல்லியிருக்கலாமோ இல்லியோ!''

''அப்பா..... ஒவ்வொருத்தர் என்னென்ன தியாகமெல்லாம் செய்யறா. இவ புடவையைக் கூட உடன்பிறந்த தங்கைக்கு இரவல் தர மாட்டாள்!''

ஜானு அமைதியாகி விட்டாள். அக்கா பேசாமல் இருப்பதைக் கண்ட கமலாவும் மேலே படிக்கலானாள்.

அடுத்த நிமிஷம் சீதா வீட்டினுள் பிரவேசித்தாள்.

## அத்தியாயம் 2

மணி சரியாக ஆறு.

சீதா மேஜையின்மீது இருந்த காகிதக் கட்டுகளையும் பைல்களின் குவியலையும் ஒரு தடவை பார்த்துவிட்டு எழுந்தாள். நீண்ட பெருமூச்சு ஒன்று வெளிவந்தது. எழுந்த அவள் மெதுவாக மூக்குக் கண்ணாடியை எடுத்து, புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டே ரூப்பரண்டெண்டு இருக்கும் இடத்தை நோக்கி நடந்தாள்.

''சார்! ஏதோ தஞ்சாவூர் மிராசுதார் ஒருவருடைய கேஸ் பார்க்கணும்னு சொன்னீங்களே? தருகிறீர்களா?'' என்று கேட்டாள் அவள்.

மார்க்கசகாயம் ஒரு தடவை அவளை ஏறிட்டுப் பார்த்தார். இந்தப் பெண்



ளுக்கும் அவருடைய மகளுக்கும் ஏறத்தாழ ஒரே வயது தான். சீதா ஆபீசில் பைல்களுடன் போராடித் தன் ஜீவனத்துக்காகப் பாடுபடுகிறாள். அவருடைய பெண்ணோ ஓர் உதவி எஞ்சினீயருக்கு வாழ்க்கைப்பட்டு, மூன்றாவது குழந்தையை மடியில் வைத்துச் சீராட்டுகிறாள். என்றுமே சீதா என்றால், பொறுமையும் அடக்கமும் நிதானமும் நிறைந்த ஓர் ஏழைப் பெண், வெகுளி என்றெல்லாம் அவள்மீது அவருக்குப் பரிவும் கருணையும் உண்டு. தம் மனத்தில் ஓடிய எண்ணங்களை ஒருவாறு மறக்க முயன்ற அவர் —

''மணிதான் ஆறு ஆயிடிச்சே, சீதா! திங்கட்கிழமை பார்த்துக் கொள்ளலாம். நீ வீட்டுக்குப் போ அம்மா!''

''பைலைக் கொடுங்க சார்! இன்னிக்கும் நாளைக்குமா வீட்டிலே படிச்சு நோட் எழுதிடறேன்....!''

இப்போது மார்க்கசகாயத்தின் கண்கள், தம் முன் நீண்டு பரந்த செக்ஷனைத் துழாவின. அவரையும் சீதாவையும் தவிர யாருமே இல்லை. பாதிப் பேருக்குமேல், ஐந்து எப்படா அடிக்கும் என்று காத்திருந்து விட்டு மறைந்து விட்டார்கள். சிலர் ஐந்தரை மணிக்குச் சென்றார்கள். அவருக்குக் கோபம் வந்தது. குமாஸ்தாக்கள் எல்லோரும் இருக்கிற வரையில் அவர்கள் மீது கோபப்படவோ, வெளிப்படையாகக் கண்டிக்கவோ தைரியமும் தெம்பும் இல்லாத அவர் இப்போது இரைந்தார்.

''பாரும்மா, ஒரு பயலாவது இல்லை. எல்லாம் பொறுப்பற்ற பையன்கள். ஒவ்வொருத்தன் சீட்டிலேயும் அரியர்ஸ் ஏகப்பட்டதா குமிஞ்சு கிடக்கு. எவன் க்ளியர் பண்றது.... டெட்டுடி கேட்டா எவன் பதில் சொல்றது?''

சீதாவுக்குத் தெரியும், பிள்ளையவர்கள் எல்லார் தலைகளும் மறைந்த பின் தினம் தினம் பாடும் பல்லவியைத்தான் இன்றும் பாட ஆரம்பிக்கிறார் என்று. இன்று அவளுக்கு ஏனோ அமர்ந்து கேட்கப் பொறுமை இல்லை.

''சார்... அந்தத் தஞ்சாவூர் பைல்!''

''நீமட்டும் ஏம்மா, வேலை செய்யறே? நீ போம்மா வீட்டுக்கு. நானும் கிளம்பப் போறேன்....''

''ரொம்ப அர்ஜண்டுன்னு சொன்னீங்களே, சார்!''

''சரிதான். கிடக்கட்டும் கழுதை. அர்ஜண்டு அர்ஜண்டுன்னு ஆயிரம் பைல்களையும் கேஸ்களையும் முப்பது வருஷமா போட்டுப் போட்டு இன்னிக்கு எனக்கு என்ன கிடைச்சுட்டது? பிளட் பிரஷரும் வயிற்றுவலியும்தான். இன்னிக்கு எண்ணெயும் நெய்யும் விற்கிற விலையிலே கொடுக்கறது இருநூற்றெழுபது ரூபாய். நாளைக்கு அம்பத்தஞ்சு வயசிலே போடான்னு சொல்லப் போறான். அப்புறம் என்னம்மா இருக்கு? டெம்ப்ரரி ஸர்வீஸையெல்லாம் கழிச்சு இருபது வருஷ பர்மெனெண்ட் சர்வீசுக்கு 'இந்தா எண்பத்தெட்டுரூவா பென்ஷன்'னு தரப் போறான். பைலும் வேண்டாம், கேசும் வேண்டாம். நீ திங்கட்கிழமை வா, சீதா பார்த்துக்கலாம்.... நானும் போறேன்...''

சேப்பாக்கத்திலிருந்து மெரினாவுக்கு வந்த சீதா அலுத்துக் கொண்டாள். தான் வேலை செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டதை நினைத்தோ, தான் ஓர் ஏழை என்பதை எண்ணியோ அவள் மனம் அலுக்கவில்லை. இதெல்லாம் விதி வகுத்த வழி. அவளுடைய அலுப்புக்குக் காரணம், வீட்டை அடைந்ததும் அடையாததுமாய் அம்மா கலியாணப் பேச்சை ஆரம்பித்துவிடுவாளே என்ற எண்ணம்தான்.

பஸ் ஸ்டாண்டுக்கு அருகே அவள் ஒரு சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டாள். அவள் முன்னே ஒரு தம்பதியும் ஒரு நான்கு வயதுக் குழந்தையும் நின்று கொண்டிருந்தார்கள். புருஷன் பாண்டும் ஸ்லாக்குமாக ரோட்டில் இறங்கி நிற்க, மனைவி பட்டுப் புடவையும், தலை நிறையப் பூவுமாகக் குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு காட்சியளித்தாள்.

இவர்களைப் போல் அவள் என்றோ நின்றிருக்க வேண்டும். அன்று அவள்

# மோதிரம் திருடிய காக்காய்

ஆதாரம்: சோவியத் யூனியன்

தகவல்: க. ஸ்ரீதரன்



ஒரு வீட்டில் கழற்றி வைத்திருந்த மோதிரம் காணாமல் போய் விட்டது. ஆனால் மனிதர்கள் யாரும் திருடவில்லை என நிச்சயமாகத் தெரிந்தது. மறு நாள் பக்கத்து வீட்டில் மற்றொரு மோதிரம் காணாமல் போய் விட்டது. அப்பொழுதுதான் காக்காய் மீது சந்தேகம் ஏற்பட்டது. உடனே அதைக் கண்டு பிடிக்க வீட்டு ஜன்னலில் ஒரு கலர் பொத்தானை வைத்துவிட்டுக் காத்திருந்தனர். காக்காயும் வந்தது. பொத்தானை எடுத்துச் சென்று ஒரு கிணற்றில் போட்டது. அதைப் பின்பற்றி வந்தவர்கள் இதைக் கண்டு அந்தக் கிணற்றில் இறங்கித் தேடினர். இரண்டு மோதிரங்களும் அகப்பட்டு விட்டன. இது நடந்தது ருஷ்யாவில்.

---

ஆர்வமும் ஆவலுமாக நின்றபோது விதி, 'இந்த ஆசை உனக்குக் கூடாது' என்று மண்டையில் ஓங்கி அடித்து விட்டது. அன்று அடித்த அடி இடி போலத்தான் இருந்தது. இன்று அடியின் வலி மறைந்து போய் ஒரு வடு மட்டும் எஞ்சி யிருக்கிறது. அம்மா அதை மீண்டும் குத்திப் பார்க்கிறாள்.

அவளுக்கு வயது இருபத்தேழு ஆகி விட்டது. இனிமேல் மலர்வதற்கோ, வாழ்வதற்கோ என்ன இருக்கிறது? ஒன்பது வருடங்களாக, அவள் இரவும் பகலுமாக உழைத்து உழைத்து அந்த உழைப்பின் கடுமைக்குத் தன்னைப் பலியாக்கிக் கொண்டு விட்டாள். இது அவளுக்கு ஒரு விதத்தில் நன்மையைத் தான் கொடுத்தது. அவளுடைய சின்ன வயதில் சம்பவித்த நிகழ்ச்சிக்குப் பின் அவள் மட்டும் வீட்டில் தனிமையில் புழுங்கிப் போயிருந்தாளானால், இத்தனை நாளில் ஒரு பைத்தியக்கார விடுதிக்குத்தான் போயிருப்பாள். அவளைச் சுற்றி ஓயாமல், ஒழியாமல் இயங்கும் உலகத்தை அவள் மறந்து தன் உலகத்துக்குள்ளேயே ஒண்டி உறைந்து கிடந்திருந்தால் அவள் இப்போது நோயில் கிடக்கும் கட்டையாகப் போயிருந்திருப்பாள். நல்ல வேளை, குடும்ப பாரமும் பொறுப்பும் அவள் தலையில் விழுந்து, ஒரு வேலைக்கு அவளை விரட்டின. தாயாரின் அமங்கலக்கோலமும், வீட்டின் ஏழைமையும் அவளைத் தூங்க இருந்த ஒரு பெரும் தூக்கத்திலிருந்தும் எழுப்பின. அவளும் எப்படியோ எழுந்து தன்னால் இயன்றவரைக்கும் பாடுபட்டு இப்போது காற்றில் செல்லும் சருகு போலாகி விட்டாள்.

இந்தச் சருகை மீண்டும் தளிர்க்க வைக்க வேண்டும் என்று அம்மா துடி துடிக்கிறாள்.

சீதா, தூரத்தே வரும் பஸ்ஸைப் பார்த்துவிட்டு மெள்ள எழுந்தாள்.

கலியாணம் அவளுக்கும் தேவை என்று ஓரோர் சமயங்களில் உள் மனம் சொல்லுவதை அவள் கேட்டிருக்கிறாள். அப்போதெல்லாம் அவளுடைய பருவ காலத்தில் கற்பனை செய்து பார்த்திருந்த மணக் கோலம் கண் முன் எழும். ஆனால் அடுத்த கணமே அதே பருவ காலத்தில் உருத் தெரியாமல் சிதைந்துபோன அதே மணக் கோலமும், உதிர்ந்து வாடிக் கருகிய மலர்களும் பயங்கரமாகத் தோன்றும்.

அவளுக்குத் தெரியும், உள்ளூறக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை தனக்கு உண்டு என்று. ஆனால் ஆசைப்பட்டதற்கே தண்டனை பெற்றவள் அவள். ஆசை பூர்த்தியானால் இன்னும் என்ன பெரிய கொடிய தண்டனை கிடைக்குமோ? இந்தப் பயமும், பருவத்தின் அஸ்தமன நிலையும் சேர்ந்து அவளுடைய ஆசையையே அடக்கின.

பஸ் வரவும் சீதா ஏறிக் கொண்டாள். அவளுக்கு முன்னால் ஏறிவிட்ட நான்கு வயதுக் குழந்தையின் மகிழ்ச்சியும், ஆர்வாரமும் நிறைந்த முகமும் கண்களும் அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன.

சரியாகப் பத்து ஆண்டுகளுக்கு முன்னால் தை மாதத்தில் சென்னை செக்ரடேரியட்டில் வேலை பார்த்து வந்த அவளுடைய ஒன்றுவிட்ட மாமா பிள்ளைக்கு அவளைக் கல்யாணம் செய்து கொடுப்பதாகத் தீர்மானித்தார்கள்.

இந்த நிச்சயதார்த்தத்துக்குக் காரணமே பாகீரதிதான். தன் அண்ணாவின் பிள்ளை, பெண்ணுக்கு ஏற்ற கணவன் என்று ஏற்கனவே தீர்மானித்து, கடைசியில் அது கை நழுவிப் போய் விடக் கூடாதே என்ற பயத்தில் தன் புருஷனின் காலில் விழுந்து கெஞ்சிச் சம்மதிக்க வைத்தாள். சீதாவுக்கு வயது பதினேழுதான். கலியாணத்துக்கு வயது ஒன்றும் ஆகிவிடவில்லை என்றே பாகீரதியின் கணவர் வாதித்தார். இருந்தாலும் கடைசியில் எப்படியோ ஒப்புக் கொண்டார். **(தொடரும்)**



# அத்வைத ஆலயம்

சைலம் என்றால் மலை. ஸ்ரீசைலம் என்றே ஒரு தலம் பெயர் பற்றுள்ளதெனில் அதை மலைகளின் மன்னனாகக் கருதலாம். திருப் பருப்பதம் என்று தேவாரங்கள் நாவாரப் பாடும் பதியும் இதுவே. திரிலிங்க நாடு என்ற தெலுங்குச் சீமை, அப்பெயர் பெறக் காரணமாயுள்ள மூன்று லிங்கங்களில் ஒன்று ஸ்ரீசைலத்தில் உறையும் மல்லிகார்ஜுன மகாலிங்கம். மருத மரத்தைத் தல விருட்சமாகக் கொண்ட மகா க்ஷேத்திரங்கள் மூன்றில் ஒன்று ஸ்ரீசைலம்.

கைலைக்குச் சமமான சைலத்தில் அத்வைதமெனும் ஞான பருவதமாகிய சித்தாந்தத்துக்கு அழியாததொரு சின்னம் இருப்பது பொருத்தமேயன்றோ? மேலும் ஸ்ரீ ஆதிசங்கரரே தமது சிவானந்தலஹரியிலும் மற்றத் துதிகளிலும் குறிப்பிடும் தலம் இது என்பதால் இங்கு அவருக்கு ஓர் ஆலயம் இருப்பது அவசியமல்லவா?







ஸ்ரீ காமகோடி பெரியவர்கள் ஸ்ரீசைலத்தில் சங்கர மடம் நிர்மாணிக்க எண்ணியதைச் செயலாக்கித் தரும் பாக்கியம் நெல்லூர் மாவட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி ரேபால சுஜாதம்மாளுக்குக் கிடைத்தது. அறுபதினாயிரம் ரூபாய்க்கு மேல் செலவிட்டு அவ்வம்மையார் ஸ்ரீசைலத்தில் கட்டித் தந்த மடத்துக்கு மார்ச் 22ந் தேதியன்று ஸ்ரீ காமகோடி பெரியவர்களின் திருமுன்னர் கும்பாபிஷேகம் நடைபெற்றது. மடத்தின் மத்தியஸ்தம்ப உச்சியில் ஆதிசங்கரரும் அவரது நான்கு பிரதம சீடர்களும் சலவைக் கல் பிம்பங்களாகத் தரிசனம் தருகின்றனர். அடியில் ஸ்ரீ பெரியவர்கள் ஆசாரிய பாதுகைகளை ஸ்தாபித்து நூற்றெட்டு தங்க பில்வங்களால் அதனை அர்ச்சித்தார். அத்வைத தத்துவமும் காமகோடியின் கருணையும் இனி விசால ஆந்திராவில் குன்றின் மேலிட்ட விளக்காகக் குன்றாது பிரகாசிக்கும் என்பதில் ஐயமில்லை.



# புவனேசுவரம் காணும் புது ஆட்சி

(நமது நிருபர்)

**"பு**வனேசுவரத்துக்கா? காரிலா? என்ன ஸார் விளையாடுகிறீர்களா? போக வர இரண்டாயிரம் மைல்கள் ஆகும், தெரியுமல்லவா?" என்று பயமுறுத்தினர்கள் பலர்.

"இருக்கட்டுமே ஐயா, மனுஷன் ராக்கெட்டில் ஏறி விண்வெளியில் உலகைச் சுற்றி வருகிற காலம் இது. நம்முடைய வீர உணர்ச்சியெல்லாம் எங்கே போயிற்று?" என்று பதிலுக்குக் கேட்டுவிட்டுக் காரில் ஏறிக் கிளம்பியும் விட்டோம்.

வழியில் நமது வீர உணர்ச்சியைக் காட்டக் கூடிய சந்தர்ப்பம் ஏதேனும் நேராதா என்று ஓர் ஏக்கத்துடனேயேதான் பயணமானேம். ஆனல் என்ன ஏமாற்றம்! சோதனை என்ற அளவில் ஒரு சிறு தடங்கலும் இன்றிக் கார் போய்க் கொண்டிருந்தது. மோட்டாரின் மின்சார அமைப்பில் ஏற்பட்ட சிறு கோளாறுகளும் கூட நெல்லூரிலும் விசாகப் பட்டினத்திலும் 'மெக்கானிக்கு'களைக் கண்டதும் சூரியனைக் கண்ட பனித் துளி போல—சே, என்ன பழைய உபமானம் வேண்டிக் கிடக்கிறது — நட்சத்திரச் சின்னத்தைப் பதவியில் கண்டதும் ஓட்டமெடுக்கும் லஞ்ச ஊழலைப் போல் நீங்கி விட்டன!

ஒரு நாள் முழுதும் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டே கழித்து விட்டோம். இரவு கோவூரில் தங்கி மறுநாள் அதிகாலையில் கோதாவரியைக் கடந்து ராஜமந்திரிக்கும் அதற்கு மேலேயும் போகவேண்டும். கோதாவரியைக் கடக்க நல்ல பாலம் தற்போது அமைத்து வருகிறார்கள். அது கட்டி முடிக்கப் பெறும்வரை வாகனங்களைப் படகிலேற்றி அக்கரை கொண்டு சேர்ப்பார்கள் என்று எங்களுக்கு முன்கூட்டியே தகவல் கிடைத்திருந்தது. இந்நிலையில் கோவூரில் அன்று இரவு சரியான தூக்கம் எப்படி வரும்? இதோ நமது வீரத்தைக் காட்ட ஒரு சந்தர்ப்பம்! கோதாவரி வெள்ளத்தில் கவிழ்ந்த படகுகள் பற்றி எத்தனை செய்திகள் பத்திரிகைகளில் படித்திருக்கிறோம்! இந்த லட்சணத்தில் எனக்கும் எங்களில் இன்னொருவருக்கும் நீந்தக்கூடத் தெரியாதே! என் துணிச்சலைப் பாராட்டி என்னை நானே முதுகில் தட்டிக் கொடுத்துக் கொண்டேன். ஆனல் அன்னை கோதாவரி எங்களை ஏமாற்றிவிட்டாள். வெள்ளப் பெருக்கின்றிச் சலசலத்து ஓடிய நதியில் குறுக்கே சிறிய



உதயகிரி குன்றின்மேலிருந்து பார்க்கையில் உதயகிரி ஜைனர்களின் குகைகளும் கண்டகிரி ஜைனக் கோயிலும் அளிக்கும் தோற்றம்.



அணைக்கட்டு ஒன்று உள்ளது. இந்த அணைக்கட்டு மீதாகக் கார் போகவே அனுமதிக்கிறார்கள், வெள்ளம் இல்லாத நாட்களில். இரண்டு ரூபாய் நோட்டைக் கொடுத்து விட்டுக் காரிலிருந்து இறங்காமலேயே கோதாவரியைக் கடந்து விட்டோம். அன்னை கோதாவரியின் அமைதியான சலசலப்பு எங்களைப் பார்த்து அவள் கேலியாகச் சிரிப்பது போலவே ஒலித்தது.

இரண்டாம் நாள் பயணம் 'போர்' அடிக்கத் தொடங்கும்போல் தோன்றியது. முதல் நாள் முழுதும் பேசக் கூடிய பல விஷயங்களைப் பேசித் தீர்த்து விட்டதால் வாயைத் திறந்ததுமே எல்லாம் பழைய ஹாஸ்யங்களாக உதிர ஆரம்பித்தன. நல்ல வேளையாக ரொம்பவும் அலுப்பு ஏற்பட்டுவிடாதபடி ஆந்திர மக்கள் கவனித்துக் கொண்டார்கள். அன்று பண்டிகை தினம். ஆங்காங்கே கிராம மக்கள் கறுசுறுப்பாகச் சாலையில் நடந்தும், மாட்டு வண்டிகளில் அமர்ந்தும் அக்கம் பக்கத்துக் கிராமங்களுக்குச் சென்று கொண் டிருந்தார்கள். இளம் பெண்கள் எழிலார்ந்த தோற்றத்துடன் தளுக்கும் குலுக்குமாக ஒய்யாரம் காட்டி நடந்தார்கள். இதெல்லாம் வேடிக்கை பார்க்க சுவாரஸ்யமாக இருந்த போதிலும் காரின் வேகம் வெகுவாகக் குறைந்து விட்டது. ஆங்காங்கே நின்று நிதானித்து ஹாரன் அடித்து வழி ஏற்படுத்திக் கொண்டு போக வேண்டி யிருந்தது.

ஆனாலும் அது குறித்து அலுத்துக்கொள்ள எங்களுக்கு மனம் வரவில்லை. ஏனெனில் அத்தனைபேரும் வலதுசாரிகளாகி யிருந்தார்கள்.

தேர்தலுக்கு அப்புறம் நாடே வலதுசாரிப்பக்கம் சரிந்திருக்கும்போது இந்தக் கிராம மக்கள் வலதுசாரிகளாக விளங்க விரும்புவதை எப்படி ஆட்சேபிப்பது? அவர்களது சைக்கிளோ மாட்டு வண்டிகளோ எல்லாம் சாலையின் வலப்புறம்தான் சென்றன! எங்கள் கார் டிரைவரைத் திணற அடித்தன.

விசால ஆந்திரம் என்று பிரகாசம்காரு சும்மாவா சொன்னார்! முதல் நாள் காலை ஒன்பது மணிக்குத் தமிழக எல்லையை விட்டு ஆந்திரத்துக்குள் நுழைந்தவர்கள் மறுநாள் மாலை ஏழு மணிக்குப் பின்னர்தான் ஆந்திர எல்லையைக் கடந்து ஒரிஸ்ஸாவுக்குள் புக முடிந்தது. அப்படி நுழைந்த உடனேயே உடம்பில் ஒரு சிலிர்ப்பு உண்டாயிற்றே, அது சிலுசிலுப்பான காற்றினால் ஏற்பட்டதா அல்லது பலே கைகாரரான பட்நாயக்கையே நினைத்து, சுதந்திரக் கட்சியின் ஆட்சிக்கு அடிகோலியிருக்கும் முதல் ராஜ்யத்துக்குள் நுழைகிறோம் என்பதனால் உண்டான உள்ளக் கிளர்ச்சியின் விளைவா? அது எனக்கே புரியவில்லை. கார் மேலும் விரைந்து எங்களை பெர்ஹாம்பூர் கொண்டு சேர்த்தது. இரவு அங்கு வசதியான பிரயாணிகள் விடுதியில் தங்கி, அதிகாலையில் குளித்து, புத்துடை அணிந்து புது உற்சாகத்துடன் புவனேசுவரம் நோக்கிப் பயணத்தைத் தொடங்கினோம்.

பழைய புவனேசுவரம் இன்று ஒரு பெரிய கிராமம் போலத்தான் தோற்றமளிக்கிறது. என்றாலும் அதன் பழம் பெருமையைப் பறை சாற்றும் அற்புதமான கலை அழகுடன் கூடிய புராதனமான கோயில்கள் உள்ளன. ஒரிஸ்ஸாவின் இன்றையத் தலைநகரம் புதிய புவனேசுவரம். முழுக்க முழுக்கச் சமீப காலத்தில் திட்டமிட்டு நிர்மாணிக்கப்பட்டது.

திட்டமிட்டு நிர்மாணிக்கப்பட்ட நகருக்கும் தன்னாலேயே வளர்ந்த நகருக்கும் எப்போதுமே வித்தியாசம் பளிச்சென்று தெரியும். சிறு நகரானாலும் சுயமாக வளர்ந்த நகரில் உள்ள கலகலப்பும் பரபரப்பும் நிர்மாணிக்கப்பட்ட நகரங்களில் காணப்படுவதில்லை.

ஹோலிப் பண்டிகைக் கோலாகலத்தில் ஈடுபட்ட இளைஞர்களுடன் நாங்கள்



பம்பாய்க்கும் புதுதில்லிக்கும் சென்னைக்கும் நெய்வேலி டவுனுக்கும் உள்ள வித்தியாசம்தான் எத்தனை!

புவனேசுவரம் நகரும் இதே முறையில் கொஞ்சம் அழுது வடிவதாகத் தோன்றினாலும் இங்கு பிரம்மாண்டமான காரியாலயக் கட்டிடங்கள், சட்ட சபை மன்றம், சர்க்காரின் 'செக்ரடரியேட்' கட்டிடம் ரயில் நிலையம் ஆகியவற்றுக்குக் குறைவில்லை. வரிசை வரிசையான அகலமான சாலைகள்; அவற்றின் இரு மருங்கிலும் பெட்டி பெட்டியாக வீடுகள்.



ஒரிஸ்ஸா முதன் மந்திரியுடன் ஆலோசனை நடத்த வந்த ஸ்ரீ ராதா மோகன் மிஸ்ரா, சர்க்கார் பிரதம கொறடா அச்சுதாநந்த் மகாநந்த், மந்திரி திரு தயாநிதி நாயக்

ஒரிஸ்ஸா ராஜ்யம் அமைக்கப்பட்டபோது கட்டாக் அதன் இயற்கையான தலைநகராக அமைந்திருக்க வேண்டும். ஆனால் அது இரு நதிகளுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டிருப்பதால் விரிவடைய வசதி இன்றி ரொம்பவும் நெருக்கமான ஊராகி விட்டது. இதனாலேயே புதிய தலைநகர் உருவாக வேண்டிய அவசியச் சூழ்நிலை ஏற்பட்டது. அதற்குச் சரித்திரப் பிரசித்தி பெற்ற புவனேசுவரத்தைவிடத் தகுதியான வேறிடம் ஏது?

புவனேசுவரத்தை வந்தடைந்த அன்றைக்கு மாலை முதல் மந்திரி ஸ்ரீ சிங் தேவ் அவர்களின் அந்தரங்கக் காரியதரிசி, ஒரு தமிழர் என்று கேள்விப்பட்டோம். உடனே அவரைப் போய்ச் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படாது போகுமா?

இரவு சுமார் எட்டு மணிக்கு அவர் வீட்டை நெருங்கியபோது அப்போதுதான் ஸ்ரீ ராமச்சந்திரன் வீடு திரும்பிக்கொண்டிருந்தார். அறிமுகமெல்லாம் ஆன பிறகு "இது என்ன இவ்வளவு தாமதமாக வீடு திரும்புகிறீர்களே!" என்று கேட்டோம்.

"இன்றைக்கு முதன் மந்திரி ஊரில் இல்லை. அதனால் சீக்கிரம் திரும்பி வந்துவிட முடிந்தது" என்றார் அவர் அமைதியாக.

"இந்த ரீதியில் போனால் சீக்கிரமே வேலையில் அலுப்புத் தட்டிவிடுமே!" என்றேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை ஸார்! எப்போதுமே இந்த நேரத்துக்குத்தான் வீடு திரும்பிக் கொண்டிருக்கிறேன்; என்னவாகி விட்டது எனக்கு? இதுவரை நாலு முதன் மந்திரிகளுக்கு அந்தரங்கக் காரியதரிசியாகப் பணியாற்றிவிட்டேன். அலுப்பு சலிப்பு ஒன்றும் உண்டாகவில்லையே!" என்று அவர் சாவதானமாகச் சொன்னார்.

நாங்கள் பிரமித்துப் போனோம். நாலு முதன் மந்திரிகளைக் கண்டவரா இவர்?

"என்ன திகைக்கிறீர்கள்? ஒரிஸ்ஸாவில் மாறி மாறிப் பதவிக்கு வந்த முதல் மந்திரிகள் அனைவரும் என்னையே அந்தரங்கக் காரியதரிசியாகத் தொடர்ந்து நீடிக்குமாறு



புவனேச்வர் - ரயில்வே ஸ்டேஷன்

கேட்டுக் கொண்டார்கள். நானும் சரி என்றேன். நமக்கு மேலே இருப்பவர் யாராயிருந்தால் என்ன? கொள்கைகள் எப்படி இருந்தால் என்ன? நான் சர்க்கார் ஊழியன். என் கடமைகளைச் செய்து கொண்டு போகிறேன்."

இருந்தாலும் அடுத்தடுத்து நாலு முதல் மந்திரிகளின் நம்பிக்கையைப் பெறும் திறமை கொண்டவராக விளங்குவதே ஒரு சாதனைதான் என்பதை யாரும் ஒப்புக் கொண்டுதானே ஆக வேண்டும்?



புதிய புவனேசுவரத்தில் உள்ள செக்ரடேரியட் கட்டிடம்

மாலை ஏழு மணிக்கு முதல் மந்திரியைச் சந்தித்து ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

ஆண்டுதோறும் கல்கி தீபாவளி மலர் பற்றி விவாதிக்கத் தொடங்கிய போதெல்லாம் கொனாரக் சென்று அங்குள்ள சூரியதேவன் கோயிலைப் பார்த்து வண்ண ஓவியங்கள் தீட்டி மலரில் இடம் பெறச் செய்ய வேண்டும் என்று யோசனைகள் தெரிவிக்கப்பட்டதுண்டு. ஆனாலும் ஏதேதோ காரணங்களால் இந்த எண்ணம் நிறைவேறாமல் ஒத்திப் போய்க் கொண்டே வந்தது.

இந்த ஆண்டுதேர்தல் முடிந்து ஒரிஸ்ஸாவில் சுதந்திரக் கட்சித் தலைவர் ஸ்ரீ ஆர். என். சிங்தேவ் அவர்களை முதல் மந்திரியாகக் கொண்ட புதிய மந்திரி சபை அமைக்கப்பட்டதும் சுதந்திரத் தலைநகரைப் பார்க்க வேண்டும் என்ற அவாவும் கூடச் சேர்ந்து கொண்டது. ஆக, புவனேசுவரத்தையும் அதையொட்டியுள்ள கொனாரக், புரி ஆகியவற்றையும் பார்த்து அங்கெல்லாம் உள்ள கலைச் செல்வங்களை இவ்வாண்டு கல்கி தீபாவளி மலரில் வடித்துத் தருவது என்று தீர்மானித்தோம் — இதைக் கூறிவிட்டுச் சென்ற ஆண்டு தீபாவளி மலர் ஒன்றையும் முதல் மந்திரியின் பார்வைக்கு வைத்தோம்.

புவனேசுவரத்தில் உள்ள (டூரிஸ்ட்) பிரயாணிகள் இலாகா எங்களுக்கு முடிந்த அளவுக்கு உதவும் என்றார் அவர்.

நாங்கள் விடைபெற்றுக் கொண்டு கிளம்பும்போது "நாளை மாலை முதல் மந்திரியை நீங்கள் பார்ப்பதாக ஏற்பாடாகி இருக்கிறது. காலை நேரத்தில் எங்கும் வெளியே கிளம்பாதீர்கள். ஹோலி பண்டிகை. மேலே எல்லாம் வர்ண நீரை அடித்து விடுவார்கள்" என்றார் ஸ்ரீ ராமச்சந்திரன்.

"ஆகா, எங்கள் வீரத்தைக் காண்பித்துக் கொள்ளக் கடைசியில் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தே விட்டது!" என்று ஆனந்த பரவசமாக நான் கூறியதைப் புரிந்துகொள்வது ஸ்ரீ ராமச்சந்திரனுக்குச் சற்று சிரமமாகத்தான் இருந்திருக்கும்.

ஹோலிப் பண்டிகையன்று காலை புவனேசுவரத்தில் ஆள் நடமாட்டமே இல்லை என்றால் அது நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது சதவீதம் உண்மை. அந்த ஒரு சதவீதத்தில் சென்னையிலிருந்து வந்திருந்த நாங்களும் இரண்டு மூன்று போலீஸ்காரர்களும் அடக்கம். வர்ண நீரைப் பீச்சாங்குழல் மூலமும் 'பிஸ்கா' என்று இவர்கள் கூறும் பிளாஸ்டிக் டப்பிகள் மூலமும் பீய்ச்சி அடிக்கச் சில இளைஞர்களும், சிறுவர்களும் தெருவில் திரிந்து கொண்டிருந்தார்கள். காரில் வருவோர் முன்னேற முடியாதபடி தெருவில் கற்களை வைத்துத் தடுத்தார்கள். பல வர்ண நீரைப் பீய்ச்சினார்கள். வண்ண வண்ணப் பொடிகளைத் தூவினார்கள்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு, வீரத்துடன் வெளியே சென்றோம் என்ற பெருமையும் பாழாகிப் போன வேஷ்டி சட்டைகளுமே எங்களுக்கு எஞ்சி இருந்தன. அந்த வேஷ்டி சட்டைகளை ஃப்பிரேம் போட்டு ஓவியக் கண்காட்சியில் வைத்தால் ஒவ்வொன்றும் ஆயிரம் ரூபாய்க்கு விலை போகும் — மாடர்ன் ஆர்ட் என்கிற முறையில்!



புவனேசுவரத்திலுள்ள பிரசித்தி பெற்ற ராஜா ராணி ஆலயம்

தீபாவளி மலரிலிருந்து அரசியலுக்குத் திரும்பி, "சுதந்திரக் கட்சிக் காரியாலயம் இப்போது சிங்கத்தின் குகைக்கே சென்று அதனை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளது போலிருக்கிறதே?" என்றேன்.

சிங்தேவ் இலேசாகச் சிரித்தார். "தேர்தல் முடியும்வரை என் வீட்டிலேயே கட்சிக் காரியாலயமும் இருந்தது. அதன் பிறகு இதுவரை பட்நாயக் அவர்களின் இல்லமாக இருந்த இடத்துக்குக் கட்சிக் காரியாலயம் மாறியிருக்கிறது" என்றார்.

'என்ன அப்பனே! பட்நாயக்—வேலை செய்ய ஆரம்பித்து விட்டாயா?' என்று தமிழகத்தில் இறங்குபவர்களைப் பார்த்துக் கேட்கும் அளவுக்கு அவர் புகழ் தென்னகத்தின் மூலை முடுக்குகளில் கூடப் பரவி இருப்பதைச் சொன்னேன்.

"பட்நாயக் ரொம்பவும் திறமைசாலி தான்; அவர் ஒரிஸ்ஸாவுக்குச் செய்துள்ள நல்ல காரியங்கள் பல. ஆனால் அவர் திறமையெல்லாம் பல தருணங்களில் கோணல் வழியில் செயல்பட ஆரம்பித்ததனால்தான் கேடு விளைந்தது" என்றார் சுதந்திரக் கட்சியைச் சேர்ந்த பண்பாளரான முதன் மந்திரி. "தேர்தலின் போது காங்கிரஸ் ஆட்சியில் காணப்பட்ட லஞ்ச ஊழல் தவிர, உணவுப் பிரச்னைதான் முக்கியமானதாக விளங்கியது. ஒரிஸ்ஸா உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்ற ராஜ்யம் எனினும் அதன் சுற்று வட்டாரத்தில் பல பற்றாக்குறை ராஜ்யங்கள் உள்ளன. ஆகவே இங்கிருந்து கள்ளக் கடத்தலில் நிறைய உணவு தானியங்கள் அங்கெல்லாம் சென்று பல சிக்கல்களை உருவாக்குகிறது" என்றும் கூறினார்.

"புதிதாக வந்திருக்கும் மந்திரி சபையிடம் மக்கள் எதை எதிர்பார்க்கிறார்கள்?"

"அவர்கள் நாங்கள் அற்புதங்கள் நிகழ்த்த வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்!" என்று கூறிக் கலகலப்புடன் சிரித்த முதல் மந்திரி, "உடனடியாக எங்கள் கவனத்தைக் கவர்வது லஞ்ச ஊழல், பிளாக் மார்க்கெட் இவற்றை ஒழிப்பதுதான். அடுத்தாற்போல் விலைவாசிகள் குறையத் தேவையான நடவடிக்கைகள் எடுப்பதில் முழு மூச்சுடன் முனைவோம்" என்றார்.

"ஒரிஸ்ஸாவில் ஏராளமான இயற்கை வளங்கள் இருந்தும் கூடத் தொழில் துறையில் இந்த ராஜ்யம் அதிகமாக முன்னேறவில்லை என்கிறார்களே?"

"அது உண்மைதான். அதற்குக் காரணம் போக்குவரத்துத் துறை — முக்கியமாக ரயில்வே—இங்கு அபிவிருத்தி அடையாததே. பிரிட்டிஷாரின் காலனி ஆட்சி காலத்தில் முக்கிய நகரங்களான கல்கத்தாவையும் சென்னையையும் இணைத்துக் கொண்டார்கள். அந்த ரயில்பாதை ஒரிஸ்ஸாவின் கிழக்கு எல்லையோடு சென்றது. அதே போல் டில்லி கல்கத்தா இணைக்கப்பட்டபோதும் ஒரிஸ்ஸாவின் வடக்கு எல்லையோடு ரயில் பாதை சென்றது. இப்படியே ராஜ்யத்தின் உட்பகுதிகளில் ரயில் போக்குவரத்து இன்றி எல்லைப்புறங்கள் மட்டும் ரயில் பாதை பெற்றன. உள்நாட்டில் கிடைக்கும் இரும்புக் கனிப் பொருளை ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்ய வசதியாக பரதீப் துறைமுகத்தை ரயில் பாதைகளால் இணைக்கும் வேலைகள் நடந்து வருகின்றன. பரதீப் துறைமுகம் மிகப் பெரிய ஒன்று. சென்னை கல்கத்தா போன்ற துறைமுகங்களில் ஒதுங்க முடியாத அளவுக்கு மிகப் பெரிதாக உள்ள கப்பல்களெல்லாம் கூட பரதீப் துறைமுகத்துக்குள் வரமுடியும். ஆரம்பத்தில் குடிநீர் வசதிக்கு வேண்டியேனும் அவை இங்கு வரும். பிறகு படிப்படியாக வாணிபமும் பெருக வேண்டியதுதானே!"

"காங்கிரஸ் அல்லாத சர்க்கார் அமைத்திருக்கும் ஒரு ராஜ்யத்தின் தலைவர் என்ற முறையில் மற்றொரு காங்கிரஸல்லாத சர்க்கார் அமைத்திருக்கும் தமிழக மக்களுக்கு நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?"

"ஒரிஸ்ஸாவிலிருக்கும் நாங்கள் மேற்கு வங்காளம், பீகார் போன்ற அண்டை ராஜ்யங்களுடன் தொடர்பு கொள்ளும் அளவுக்குத் தமிழ் நாட்டுடன் தொடர்பு கொள்வதற்கான பிரமேயம் ஏற்படாது. எனினும் ராஜ்யங்களுக்கு அதிக சுதந்திரம் தரப்பட வேண்டும் என்ற அளவில் காங்கிரஸ் அல்லாத சர்க்கார்கள் ஒன்றாக இணைந்து மத்திய ஆட்சியுடன் போராடி வெற்றி பெற இயலும். மத்திய அரசினரின் தேவை இல்லாத குறுக்கீடு இல்லாதிருந்திருந்தால் ஒரிஸ்ஸா இன்னும் வேகமாகவே முன்னேறி இருக்கும். உதாரணமாக இரும்புக் கனிப் பொருள்களை வாங்க முன்வந்த ஜப்பான் தன் சொந்தச் செலவிலேயே பரதீப் துறைமுகம்வரை அதற்கான ரயில்பாதைகளை அமைத்துத் தரத் தானாகவே முன்வந்தது. ஆனால் ஜப்பானுடன் நாங்கள் இப்படி நேரடி ஒப்பந்தம் செய்துகொள்ள மத்திய ஆட்சியின் கட்டுப்பாடுகள் அனுமதிக்கவில்லை. இதுபோன்ற விஷயங்களில் காங்கிரஸ் அல்லாத சர்க்கார்கள் பல ராஜ்யங்களில் ஏற்பட்டிருப்பதால் இனி கொள்கை மாறுதல்கள் ஏற்பட்டேயாக வேண்டும். தமிழக மக்களும் ஒரிஸ்ஸா மக்களும் இம்முறையில் ஒன்றுபட்டுச் செயலாற்றி முன்னேற்றம் காண முடியும்."

அந்தரங்கக் காரியதரிசி ஸ்ரீ ராமச்சந்திரன் இந்தச் சமயத்தில் மறுநாள் சட்டசபையில் விவாதத்துக்கு வரும் சில விஷயங்கள் பற்றிய ஃபைல் கட்டுகளுடன் வந்தார். வேறு சில மந்திரிகளும் முதல் மந்திரியுடன் ஆலோசனை நடத்த வந்தனர்.

நாங்கள் விடைபெற்றுக்கொள்ள எழுந்தோம். ஓவியர் வினு இதற்குள் தாம் வரைந்து விட்டிருந்த ஸ்ரீ ஆர். என். சிங் தேவ் அவர்களின் படத்தை அவர் பார்வைக்கு நீட்டினார்.

"வெகு சீக்கிரம் வரைந்துவிட்டீர்களே!" என்று உற்சாகமாகக் கூறிக் கையெழுத்துப் போட்டுத் தந்த முதல் மந்திரி, "நீங்கள் சென்னை திரும்பு முன்னர் தீபாவளி மலருக்குத் தீட்டும் ஓவியங்களை எனக்குக் காண்பிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

அவருக்குள்ள எத்தனையோ குணநலன்களுடன் கலையுள்ளம் படைத்தவர் என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பது எங்களுக்குப் பளிச்சென்று விளங்கியது.

# மருத்துவ சிகிச்சைக்கு இயந்திர மனிதன்!

**படத்தில் நீங்கள் காண்பது** உயிருள்ள மனிதனல்ல. படுக்கையில் சிகிச்சை பெறும் அம்மனிதன் ஓர் 'இயந்திர மனிதன்.'

இந்த இயந்திர மனிதனைக் கலிபோர்னியாவைச் சேர்ந்த, ''ஏரோ – ஜெட் ஜெனரல் கார்ப்பொரேஷன்'' ஸ்தாபனத்தினர்தான் கண்டு பிடித்தனர். இந்த 'இயந்திர மனிதன்' நம்மைப்போலவே சுவாசிக்கிறான், இருதயத் துடிப்பு, நாடித் துடிப்பு முதலியவை உள்ளன. அது மட்டுமல்ல வாயைத் திறக்கும், கண்ணை உருட்டும், நாக்கை வெளியே நீட்டும், புருவத்தை அசைக்கும், இருமவும் செய்யும், மற்றும் மனிதர்கள் என்ன செய்வார்களோ அத்தனையும் செய்யும்—சாப்பிடுவதைத் தவிர.

இதைக் கண்டு பிடித்ததன் நோக்கம் மருத்துவ மாணவர்களுக்கு 'ஆபரேஷன்' முதலியவற்றை நடைமுறையில் செய்து காட்டவே! இதற்கு நம்மைப் போலவே தசை முதலியவை உள்ளதால், இதற்கு 'ஆபரேஷன்' செய்வதும் மனிதனுக்குச் செய்வதும் ஒன்றுதான். உதாரணமாக, ஒரு நோயாளிக்குத் தொண்டைக்கும் நுரையீரலுக்கும் இடையே உள்ள மூச்சுக் குழலுக்குப் பதில், செயற்கை மூச்சுக் குழல் ஒன்று செருக வேண்டுமானால் அதற்கு டாக்டர் எடுத்துக் [கொள்ள வேண்டிய அதிகப்படியான நேரம் நாற்பது செகண்டுகள். ஏனெனில், அதற்குமேல் நோயாளியின் மூச்சை நிறுத்த முடியாது. இதை எப்படி மாணவர்கள் நடைமுறையில் சோதித்துப் பார்க்க முடியும்? இப்படிப்பட்ட சிக்கலான பிரச்னைகளை நடைமுறையில் செய்து பார்க்கவே இந்த 'இயந்திர மனிதன்' பயன்படுகிறான்.



இந்த இயந்திர மனிதனின் விலை என்ன தெரியுமா? சுமார் இருபத்திரண்டு லட்சம் ரூபாய். நமக்குத் தேவையான நோய்களை இந்த 'இயந்திர மனித'னுக்கு வரவழைத்து, அதன்பின் அதைக் குணமாக்க வழியும் கண்டு பிடிக்கலாம். ஆகையால் இந்த 'இயந்திர மனிதன்' விலை மதிப்பில்லாதது!

ஆதாரம்: ''டிட்பிட்ஸ்'' — தகவல்: வி. சம்பத்குமார்

# ஒளிதரும் மின்மினி!

மின்மினி ஒரு வண்டு. வேலிகளிலும் செடி கொடிகளிலும் வசிக்கும். இருட்டு நேரத்தில், மஞ்சளும் பச்சையும் கலந்த ஒளியோடு மின்னிக் கொண்டிருக்கும். பெண் மின்மினிக்குச் சிறகு கிடையாது. ஆணுக்குத் தான் உண்டு.

அமெரிக்காவில் மின்மினி கூட்டம் கூட்டமாகச் சஞ்சரிக்கும். சில காடுகளில் இரவு நேரங்களில் ஒரே ஜோதி மயமாகத் தெரியுமாம். கியூபா என்ற தீவில் வசிக்கும் பழங்குடியினர் இந்த மின்மினிகளைத் தங்கள் வாழ்க்கையின் இன்றியமையாப் பொருளாகப் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள்: இரவு நேரத்து இருளை அகற்றுவதற்கு மின்மினி பெரிதும் உபயோகமாயிருந்திருக்கின்றன. அது எப்படி யென்கிறீர்களா? அவர்கள் பாட்டிலில் மின்மினிகளை அடைத்து வைத்துத் தங்கள் வீட்டில் விளக்கேற்றி வைப்பார்களாம்.



கண்ணாடிச் சீசாவில் அடைத்த மின்மினிகளின் வெளிச்சத்தில் கார்காஸ் என்னும் கீர்த்திபெற்ற வைத்திய நிபுணர் நோயாளி ஒருவருக்கு ஆப்பரேஷன் செய்திருக்கின்றார். மின்மினியின் உடலில் பாஸ்பரஸ் போன்றவை ஏதுமில்லை. அவ்வொளி ஒருவித 'எக்ஸ்ரே' போன்றதுதான் என அண்மையில் இந்திய விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ளனர். மின்மினிபோல் ஒளிவிடும் பூச்சிகள் பல உள்ளன. கடலில் வாழும் மீன்கள் சில இவைகளைவிட அதிகப் பிரகாசமான ஒளியைச் சிந்துகின்றனவாம்!

ஆதாரம்: 'ஸயன்ஸ் டுடே'
தகவல்: என். முனாக்



பாற்கடலைக் கடைந்தபோது அமுதமும் ஆலகாலமும் கிடைத்தன அல்லவா? அணுவைப் பிளந்தபோதும் ஏறக்குறைய இதே மாதிரிதான் நேர்ந்தது. உலகில் மானிட வர்க்கமே பூண்டற்றுப் போய் விடும்படியாக நாசம் விளைவிக்கக் கூடிய அணுகுண்டுகள் வெளிவந்தன; அதே சமயம் மக்களுக்குப் பயன் தரும் வகையில் பல நல்ல கண்டுபிடிப்புகளும் தோன்றின. அவற்றில் ஒன்றுதான் 'ரேடியோ ஐஸோ டோப்'கள்.

'ரேடியோ ஐஸோ டோப்' என்றால் என்ன? அவற்றுக்கு ஏன் அந்தப் பெயர் வந்தது? அவற்றை எப்படித் தயாரிக்கிறார்கள் என்றெல்லாம் தெரிந்துகொள்ள ஆசை தோன்றினால் அந்த ஆசையை முளையிலேயே கிள்ளி எறிந்து விடுவது நல்லது. ஏனென்றால் முழுக்க முழுக்க விஞ்ஞான பாஷையில் அமைந்த விளக்கங்களைக் கேட்டால் இருக்கிற மூளையும் குழம்பிப் போகும்!... எனவே இந்த 'ஐஸோ டோப்'களால் என்ன பலன் என்று மட்டும் தெரிந்து கொள்வோம்.

'ரேடியோ ஐஸோ டோப்'களின் கதிரியக்கத்தினால் உணவு உற்பத்தியை அதிகரிக்கலாம். பாசுமதி என்கிற வகை நெல்தான் அதிக விளைச்சலுக்குப் பெயர் பெற்றது. அந்தப் பாசுமதியைக் காட்டிலும் கதிரியக்கம் பெற்ற ஒரு வகை நெற்பயிர், பதினேழு சதவிகிதம் அதிகம் பலன் தருகிறது. என்று மைசூரில் பரிசோதனை மூலம் கண்டு பிடித்திருக்கிறார்கள். இன்னொரு வகை நெல் அறுபது சதவிகிதம் அதிக விளைச்சல் கொடுக்கிறதாம் 'ஐஸோ டோப்' பிரயோகத்தின் மூலம்.



ஓப்பன் ஹீமர்

என்னதான் அமோகமாக விளைந்தாலும் பூச்சிகளால் பெருமளவுக்குச் சேதம் ஏற்படுகிறது அல்லவா? காப்ரா என்று ஒரு வகை வண்டு. அதை எந்தப் பூச்சி நாசினியாலும் கொல்ல முடியாது. பூச்சி நாசினியையே ஆகாரமாகச் சாப்பிட்டுக் கொழுக்கிற இந்த காப்ராவைக்கூட 'ஐஸோ டோப்'பின் உதவியால்—தொடர்ந்து காமா கதிர்களைப் பாய்ச்சுவதன் மூலம் கொன்றுவிட முடியும்.

அது சரி, உணவுத் தானியமாகட்டும், பழம், காய்கறிகள்தானாகட்டும். ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மேல் அவற்றைக் கெட்டுப் போகாமல் வைத்துக் கொண்டிருக்கமுடியாதல்லவா? இதற்கும் 'ஐஸோ டோப்' உதவுகிறது. குறைந்த அளவில் காமா கதிர்களைப் பாய்ச்சினால் எந்த உணவுப் பொருளையும் நீண்ட நாள் அப்படியே புத்தம் புதிதாக வைத்திருக்க முடியுமாம். 'பம்பாய் வாத்து' என்று ஒருவகை மீனுக்குப் பெயர். அதைக் 'குளுகுளு' அறையில் வைத்திருந்தால் கூட விரைவில் கெட்டுவிடுமாம். அந்த மீனைக்கூடக் கெட்டுப் போகாமல் மூன்றுவார காலம் வரை வைத்திருக்கக் கூடும். 'ஐஸோ டோப்'களின் துணையினால்.

வேளாண்மைத் துறையில் மட்டும்தான் 'ஐஸோ டோப்'களுக்கு வேலை என்று நினைத்து விடாதீர்கள். மருத்துவம், தொழில், விஞ்ஞானம் ஆகிய துறைகளிலும் இவை ஒரு சஞ்சீவிபோல் பயன்பட்டு வருகின்றன.

அணுவைத் தனக்கு அடிமையாக்கிக் கொள்ள மனிதன் முயன்று அதில் வெற்றியும் கண்டு இருப்பதற்கு ஒரு சிகரம் போல் அமைந்தி



பாபா

ருப்பது அணு சக்தியைக் கொண்டு மின்சாரம் உற்பத்தி செய்யலாம் என்று கண்டு பிடித்திருப்பதாகும்.

அனல், புனல், ஆவி — இம் மூன்றையும் கொண்டுதான் மின்சாரம் உற்பத்தி செய்கிறார்கள். பொதுவாக எல்லா நாடுகளிலுமே. பிரிட்டன், அமெரிக்கா, ஸ்வீடன் போன்ற மேலை நாடுகள் அணு சக்தியைக் கொண்டு மின்சார உற்பத்தி செய்வதில் முனைந்து வெற்றியும் கண்டிருக்கின்றன.

எல்லாம் கிடக்கப் பொல்லாத அணுவைப் பயன்படுத்துவானேன் என்கிறீர்களா? எல்லா நாடுகளிலுமே நீர் வளம் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. எனவே நீர் வளத்தில் பின்தங்கிய நாடுகள் அனல் மின்சாரத்தைத்தான் நாட வேண்டியிருக்கிறது. இதற்கு நிலக்கரி நிறையத் தேவைப்படும். நிலக்கரியை ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்கு கொண்டு போவதென்றால் செலவு நிறைய ஆகும். எனவே நிலக்கரி வளம் அதிகமாக உள்ள இடத்தில்தான் அனல் மின் நிலையங்களை நிறுவ முடியும். ஏதேனும் ஓர் அனல் மின் நிலையத்துக்குள் நுழைந்து பாருங்கள். எங்கும் ஒரே புகை, கரி மயம்தான்! அணுமின் நிலையம் என்றால் இந்தத் தொல்லையெல்லாம் கிடையவே கிடையாது. அணு 'ரியாக்டர்'களை எங்கே வேண்டுமானாலும் நிறுவலாம். நிலையத்துக்குள் ஒரு துப்பு

தாக இராஜ. ஆஸ்பத்திரி மாதிரி (நம்மூர் ஆஸ்பத்திரி அல்ல!) பளிச்சென்று துப்புரவாகவும், நாசூக்காகவும் காட்சி அளிக்கும். எல்லாவற்றையும் விட முக்கியமானது, அணுமின் நிலையத்துக்கு எரிபொருள் அதிகம் தேவைப்படாது. முப்பது லட்சம் ராத்தல் நிலக்கரியை வைத்துக் கொண்டு உற்பத்தி செய்யக் கூடிய மின் சக்தியை ஒரே ஒரு ராத்தல் யுரேனியத்தை வைத்துக் கொண்டு உற்பத்தி செய்துவிட முடியும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

'அணு' என்றாலே அலறி நடுங்குகிறவர்கள் 'அணுமின் நிலையங்களிலும் ஆபத்து ஏதுமில்லையா?' என்று கேட்கலாம். அணுகுண்டுக்கும் அணுமின் நிலையத்துக்கும் ஸ்நானப் பிராப்தி கூடக் கிடையாது. ஓர் அணுகுண்டில் வெடித்துச் சிதறக் கூடிய எரிபொருட் கரு தொண்ணூறு சதவிகிதம்; அணுமின் நிலையத்திலோ இத்தகைய எரிபொருள் மிகக் குறைந்த அளவுதான் பயன்படுத்தப்படுகிறது. அதுமட்டுமல்ல; அணுகுண்டைப் போல வெடித்துச் சிதற வகையில்லாதபடியே மின் நிலையம் அமைக்கப்படுகிறது. பெரிய காங்கிரீட் 'ஷெல்' ஒன்று; அதற்குள்ளே ஒரு காங்கிரீட் சுற்றுச் சுவர்; அதற்குள்ளே கனமான இரும்புச் சுவர்;

தலைப்பில்: அமெரிக்காவின் மாசாசு செட்டில் உள்ள அணுமின் நிலையத்தின் தூரத்தோற்றம்.

கீழே: அமெரிக்க, இடாஹோ, அணுமின் நிலையத்தில் கதிரியக்கப் பணியில் ஈடுபட்டிருக்கும் இரு ஆராய்ச்சியாளர்கள்.



அதற்கும் உள்ளேதான் 'ரியாக்டர்'ரின் மூலக் கரு அமைந்திருக்கிறது. எனவே, அணுச் சிதறல் ஏற்படுவதற்கு வழியே கிடையாது.

நம் நாட்டில்தான் அணு ஆராய்ச்சிக்கு வேண்டிய மூலப் பொருளான யுரேனியம் நிறையக் கிடைக்கிறதே; எனவே நாமும் ஒரு அணு மின் நிலையம் அமைத்துக் கொண்டால் என்ன என்று தோன்றியது. அதன் விளைவாகத்தான் பம்பாய்க்கு அருகில் தாராப்பூர் என்னுமிடத்தில் ஓர் அணுமின் நிலையமும் ராஜஸ்தானில் ராணா பிரதாப் சாகர் என்னுமிடத்தில் இன்னொரு நிலையமும் நிறுவப்பட்டு வருகின்றன.

தென்னகத்தில் இத்தகைய அணுமின் நிலையம் — குறிப்பாகத் தமிழ் நாட்டில் உருவாக இருக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். சென்னையிலிருந்து நாற்பத்திரண்டு மைல் தொலைவில் உள்ள கல்பாக்கம் என்னும் பொட்டல்காட்டைத்தான் இதற்கெனத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். சுற்று வட்டாரத்தில் ஜனநெருக்கம் அதிகமாக இல்லாமையும், தண்ணீர் வசதி நிறைந்திருப்பதும்தான் இந்த இடத்தைத் தேடிப் பிடித்ததற்கான காரணங்களாம்.

இந்தக் கல்பாக்க மின் நிலையத்தில் 200 மெகாவாட் கொண்ட இரண்டு யூனிட்டுகளை நிறுவப் போகிறார்கள். முதலாவது யூனிட் 1971–72ல் நிறுவப்படும். இரண்டாவது அதற்கு அடுத்த இரண்டு வருடங்களில் நிறுவப்படும். ஹைதராபாத்துக்கு அருகே துடுடா என்கிற இடத்தில் யுரேனியச் சுரங்கம் இருக்கிறதாம். அங்கிருந்து கிடைக்கும் யுரேனியத்தை வைத்துக்கொண்டுதான் இங்கே மின்சாரம் உற்பத்தி செய்யப் போகிறார்களாம்.

இத்திட்டத்துக்கும் ஆகிற செலவு நூறு கோடி ரூபாய்! செலவு கிடக்கட்டும். கல்பாக்கம் மின்நிலையத்தைப் பற்றி நாம் பெருமைப்பட இன்னொரு விஷயம் இருக்கிறது. தாராப்பூரிலும், ராணா பிரதாப் நகரிலும் மின் நிலையங்களை அமெரிக்க — கனடிய விஞ்ஞானிகளின் உதவியுடன்தான் நிறுவியிருக்கிறார்கள். கல்பாக்கத்தில் அதுதான் கிடையாது. முழுக்க முழுக்க இந்திய விஞ்ஞானிகளே நிறுவப் போகிறார்கள் இதை.

மேல் நாட்டு விஞ்ஞானிகள் அணு சக்தியைப் பற்றிக் கேள்விப்பட்டதென்னவோ, சென்ற நூற்றாண்டில்தான். நாம் அப்படியில்லையே! 'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகுத்தி' என்று அந்தக் காலத்துப் புலவர்கள் பாடியிருக்கிறார்கள்; அணுவைத் துளைப்பது பற்றி. 'அணுவைச் சத கூறிட்ட' என்று கம்பர் அணுவைப் பிளப்பது பற்றிச் சொல்லியிருக்கிறார். அத்தகைய தீர்க்க தரிசிகளின் வழித்தோன்றல்களான நம்மால், ஒரு அணு மின் நிலையத்தையா நிறுவ முடியாது?

## கேள்வியும்....

காந்திஜி புது தில்லியில் இருக்கும் போது யாரோ ஒருவர் ஐந்து ராத்தல் கோதுமை மாவை ஒரு சமயம் அனுப்பியிருந்தார். அனுப்பியதோடு, "சொந்த உபயோகத்துக்காக!" என்றும் குறிப்பிட்டிருந்தார். காந்திஜி அந்த மாவையும் பொதுக்கூட்டத்தில் ஏலம்விட ஆரம்பித்தார். ஸ்ரீமதி பிரிஜ்லால் நேரு நாற்பது ரூபாய்க்கு அந்த மாவை ஏலத்தில் எடுத்தார். பிறகு காந்திஜியிடம், "இதை என்ன செய்ய?" என்றார்.



அருகில் இருந்தார் பிர்லா அப்போது. உடனே அவர், "ரொட்டி செய்து பாபுவுக்கு அனுப்புங்கள்; அவருக்காக வந்த மாவு தானே?" என்றார்.

"காந்திஜி ரொட்டியைச் சாப்பிட்டால் மாவு அனுப்பியவரும் மகிழ்ச்சி அடைவார்; நானும் திருப்தி அடைவேன். ஆனால் இவர் ஒரு 'பனியா' ஆயிற்றே! ரொட்டிகளையும் ஏலம் கூற ஆரம்பித்து விடுவாரே!"

ஆதாரம்: "கலைமாலை விருந்து"

அனுப்புநர்: கோவை த. மணிவாசகம்

## ....பதிலும்

அமெரிக்க ஜனாதிபதிக்கான தேர்தல் 1912ல் நடந்தது. தியோடர் ரூஸ்வெல்ட்டும் போட்டியிட்டார். பொதுக் கூட்டமொன்றில் பேசும் போது ஜனநாயகக் கட்சியின் கொள்கைகளைக் கண்டித்தார். அவர் பேச்சை முடிக்கப் போகும் சமயத்தில் ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஒருவர் எழுந்து தியோடர் ரூஸ்வெல்ட் கூறிய குற்றச்சாட்டுகளை மறுத்துவிட்டு, "மிஸ்டர் ரூஸ்வெல்ட்! ஏன் நீங்கள் ஒரு குடியரசுக் கட்சிக்காரராக இருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

உடனே ரூஸ்வெல்ட், "என் அப்பனும் பாட்டனும் அந்தக் கட்சியில் இருந்ததினால்" என்றார். "உங்கள் அப்பனும் பாட்டனும் குதிரைத் திருடர்களாயிருந்தால் நீங்கள் யாராக இருப்பீர்கள்?" என்று கேட்டார் ஜனநாயகக் கட்சிக்காரர். "அப்பொழுது நிச்சயமாக ஜனநாயகக் கட்சிக்காரனாக இருப்பேன்" என்றார் ரூஸ்வெல்ட். — த. விந்தன்

★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

பெர்னாட் ஷாவின் தொண்ணூற்றாவது பிறந்த நாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அனேகர் பாராட்டினர். அவர்களில் தையற்காரர் ஒருவரும் பாராட்டினார். 'உங்களுடைய நூறாவது பிறந்த நாளுக்கு உடை தைக்கும் பேறு எனக்குக் கிடைக்க வேண்டும்' என்று வாழ்த்தினார்.

"அந்தப் பாக்கியம் உங்களுக்குக் கிடைக்கும் என்றே நினைக்கிறேன். பார்வைக்கு நீங்கள் ஆரோக்கியமாகத்தான் காணப்படுகிறீர்கள்" என்றார் ஷா.

அரக்கோணம் த. ச. பாண்டியன்




கவலையோடு இருந்த பத்மாவைக் காண வருகிறாள் எதிர்வீட்டு கீதா.















# தர்மத்தின் குரல்

தனக்கு ஏற்பட்டிருக்கிற பிரச்னையை எண்ணிப் பார்த்த போது வேதாசலத்துக்கு மலைப்புத் தட்டியது. இந்த இக்கட்டிலிருந்து எப்படி மீண்டு வருவது?

யாரிடம் போய்க் கேட்பது? யார் கொடுப்பார்கள்? சாதாரணத் தொகையாக இருந்தால்கூட யாரிடமேனும் கேட்டு வாங்கிச் சரி செய்யலாம். ஐந்நூறு ரூபாய் வேண்டுமே!

மலைப்பின் நிழலடியில் மூச்சுத் திணறினார் வேதாசலம்.

''என்ன யோசனை? ராசிபுரம் செட்டியார் சொன்னதுதானே?'' — கேள்வியைக் கேட்டுவிட்டு நின்ற மனைவி அம்முவைப் பார்த்தார். பார்வை முகத்தை விட்டுக் கழுத்துக்கு இறங்கியது. வெறுமையோடிய அந்த இடத்தில் தாலிச் சரட்டைத் தவிர வேறொன்றுமில்லை. அலுப்போடும் வேதனையோடும் பதிலொன்றும் கூறாமல் கட்டிலைவிட்டு எழுந்தார். கதவின் மேல் போட்டிருந்த துண்டை எடுத்து மேலே போட்டுக் கொண்டு வெளியே புறப்பட்டார்.

தேவையின் அவசியத்தையும், அவசரத்தையும் உணர்ந்து இவ்வளவு சீக்கிரத்தில் நமக்கு யார் உதவப் போகிறார்கள்?

அவரைப் பொறுத்தவரையில் அவர் இந்த மாதிரி இக்கட்டில் மாட்டிக்கொண்டதில்லை. மனைவியின் கழுத்தில் சரம் சரமாகத் தங்க நகைகள் கிடந்த போது அவருடைய அவசரங்கள் எல்லாம் எந்தவிதத் தடங்கலுமில்லாமல் நிறைவேற்றப்பட்டன.

'' எல்லாம் குடும்பத்துக்குத்தானே !'' பாவம் அவர் தமக்கென என்ன செய்து கொண்டார் ? எப்பொழுதும் அவருக்குக் குடும்பம்! குடும்பம்! அவருக்குத் தம் தேவைகளைவிடத் தம் குடும்பத்தின் தேவைதானே என்றுமே முக்கியமாகப் பட்டிருக்கிறது. அதிலே அவருக்கு ஒரு நிறைவு ! குடும்பத்தின் தேவை நிறைவெய்திவிட்டால் அவர் ஆத்மா நிறைந்துவிடுமே. பிறர் நிறைவைக் கண்டு நிறைகிற நெஞ்சம் அது.

மஹரிஷி

விஜயா

அவருக்கு இப்பொழுது ஓர் இக்கட்டு. ஐந்நூறு ரூபாய் வேண்டும்.

அதை உடனே தேடியாக வேண்டும். இல்லையென்றால் பத்துப் பவுன் நகையை இழக்க வேண்டியதுதான்! செட்டியார் வீட்டில் கண்டிப்பாகச் சொல்லி விட்டார். ''இதைப் பாருங்க, ஐயரே! பொதன்கிழமை நாங்க போறோம். இதோட உங்களுக்கு ஆயிரம்வாட்டி சொல்லியாச்சு. மூணு மாசமா சொல்றேன். அப்புறம் செட்டியாரு நகையைத் தூக்கிக்கிட்டுப் போயிட்டாருன்னு பேசப்படாது. உங்க கஷ்டத்தைப் பார்த்துத்தான் வட்டி தள்ளி அசலை மட்டும் கொடுத்துட்டு நகையை வாங்கிக்கிடுங்க என்கிறேன்.''

செட்டியார் குடும்பம் ஊரை விட்டுப் போகிறது. அங்கே அடகு வைத்திருக்கும் பத்து பவுன் நகைகளைத் திருப்பியாக வேண்டும்.

நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துண்டால் ஒற்றி எடுத்தார். இரண்டுசாரி வீடுகளையும் மாறி மாறிப் பார்த்தார். எந்த வீட்டினுள் நுழைந்தால் பணம் பெயரும். அவ்வளவு நெருக்கமானவர்கள் இங்கே யார் இருக்கிறார்கள்? நெருங்கியவர்கள் என்று நினைக்கிற இரண்டொருவருடைய நிலை அவருக்குத் தெரியும். கேட்ட மாத்திரத்தில் 'இந்தா, உன் முடையைத் தீர்த்துக் கொண்டு பிறகு கொடு என்று சொல்லக்கூடிய அளவுக்கு 'பலம்' பெற்றவர்கள் அல்லர்.



பிராகு கப்புசேஷன் வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தார் வேதாசலம். தூரத்தில் வரும் போதே பிராகு கப்புசேஷன் வீட்டிலிருந்து வெளியே வந்து மேற்கில் போய்க்கொண்டிருந்தார்.

சேஷனிடம் கேட்கலாம். அவரிடம் எப்பொழுதும் பணமிருக்கும். நல்ல ஸ்திரமான இடரில்லாது வாழும் மனிதராயிற்றே!

வேதாசலம் மனத்தில் எண்ணம் ஒரு முதிர்ச்சியை அடையாத நிலையில், கால்கள் அவரை நோக்கி இழுத்தன. மனத்தின் இழுப்பைத்தானே கால்கள் செயல்படுத்துகின்றன!

கப்புசேஷன் எங்கே போகிறார்! கொஞ்சம் தயக்கம், அரைகுறையாக எழுந்த நம்பிக்கையின் வேகம் இவைகளோடு அவரை நெருங்குகிற தறுவாயில் அவர் ஊர் எல்லையைக் கடந்து தம் காட்டுக் கொட்டகைக்குள் நுழைந்தார்.

விஷயம் பேசச் சரியான தனிமைதான். அதோடு அவரிடம் இதற்குமுன் இந்த மாதிரி விஷயங்களுக்கு அணுகியதேயில்லை. நல்ல பழக்கம் உண்டு. ஆத்மார்த்தமாகப் பேசும் சந்தர்ப்பங்களும் உண்டு. குடும்ப விவகாரம் ஊர்ப் பொது விஷயங்களைப் பற்றி என்று எத்தனையோ சந்தர்ப்பங்கள் அவர்களைக் கூட்டி வைத்திருக்கின்றன.

கப்புசேஷன் காட்டுக் கொட்டகைக்குள் மறைந்தவுடன் மெதுவாக வேதாசலம் உள்ளே நுழைந்தார்.

''நமஸ்காரம்.''

''நமஸ்காரம் வாங்கோ.... எங்கே இவ்வளவு தூரம்....?''

''சும்மாத்தான். உங்களைப் பாத்துட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''உக்காருங்கோ.....'' தாம் உட்கார்ந்திருந்த கட்டிலைக் காண்பித்தார் கப்பு செ‌ஷையர்.

வேதாசலம் அமர்ந்தார். விஷயமான முறையில் வருகிற ஆரம்ப உரைகள் அவர் மனத்திலே நம்பிக்கையை இலேசாக வளர விட்டன.

தயக்கப்பட வேண்டிய நிலை ஏற்படவில்லை வேதாசலத்துக்கு. அரைகுறையாக இருந்த முதிர்ச்சி பெற்ற சிந்தனையெல்லாம் முடிவுபெற்றுவிட்ட நிலையில்தான் கப்பு செ‌ஷையரிடமே கேட்டு விடுவோம் என்ற தீர்மானத்துக்கு அவருடைய அவசரம் அவரைப் பிடரியைப் பிடித்துத் தள்ளிக்கொண்டிருந்த போது கொஞ்சநஞ்சமிருந்த தயக்கமும் போய் விட்டது.

தம் இக்கட்டை விவரித்தவர் முடிவில், ''ராசிபுரம் போய் அந்த நகைகளை உடனே திருப்பிண்டு அதை அப்படியே வேறே இடத்திலே வச்சு உங்க தொகையை நாளைக்குச் சாயங்காலம் நான் சேலம் திரும்பறச்சே கொண்டு வந்து கொடுத்துடறேன். செட்டியார் விட்டிலே ஊரைவிட்டுப் போறு. அதான் அவாளுக்கும் அவசரம்.....!''

கப்பு செ‌ஷையர் இரண்டு நிமிஷங்கள் யோசனை செய்தார். இல்லை என்று எடுத்த எடுப்பில் அவரால் சொல்லிவிட முடியாது. அதிலும் வேதாசலத்தைப் போன்ற கண்ணியமானவர்களுக்கு அந்தப் பதில் உகந்ததல்ல. அவருடைய செல்வாக்குக்கும் அது அழகல்ல. அவருடைய யோசனைக்குக் காரணம் பெரிய தொகையாக இருக்கிறதே என்பதுதான். சுலபமாக வேதாசலத்தால் அதைத் திருப்பித் தர முடியுமா என்பது பற்றித்தான். வெளிப் பார்வையிலேயும் சரி, அந்தத் தெருவில் அவருடைய குடும்ப நிலையைப் பற்றிக் கேள்விப்பட்டதிலேயும் சரி இப்போழுது அவர் கேட்கின்ற தொகை அவர் சக்திக்கு மீறினதுதான். ஆனால் அவருடைய இக்கட்டைப் பார்த்தால் அதை அவ்வளவு சுலபமாக உதாசீனப்படுத்தக் கூடியதாயுமில்லை.

வேதாசலம் ஏமாற்றுக்காரரல்ல என்பதை அவர் முகம் காட்டியது. அப்பாவித்தனமும் நேர்மையும் அந்த முகத்தில் பதிந்து உருவத்துக்கு ஓர் இரக்கத்தை இயல்பாக உண்டாக்கித் தந்தன.

''பத்து பவுன் நகையா அது?''

''ஆமாம், சுவாமிகளே!''

''அதை அங்கே மீட்டு எங்கே மறுபடியும் வைக்கப் போறேள்?''

''இடம் இனிமேதான் பார்க்கணும். இல்லேன்னு பாங்கு இருக்கு. அதுவுமில்லே, நீங்க சம்மதிச்சா.......''

கப்புசெ‌ஷையர் காதைப் பொத்திக் கொண்டார். ''வேண்டாம், ஐயா! உங்க முடிவுப்படியே செய்யும். அதையெல்லாம் கட்டிக் காக்க என்னாலாகாது. இந்தாங்கோ..... பிடியும்.... நாளை சாயங்காலம் சொன்ன பிரகாரம் தொகையைச் சுணக்கமில்லாமக் கொண்டு வந்து குடுத்துடுங்கோ. கண்டிப்பா பேசறேனேன்னு வித்தியாசமா நினைக்கக் கூடாது. ரொம்ப அவசரமாச்சேன்னு இதைத் தரேன். இதைப் போல நான் யாருக்கும் கொடுக்கறது இல்லே. நீங்க கேட்ட நேரம் நல்ல நேரம். வேற ஒரு காரியத்துக்காகக் கொண்டு வந்தேன். உம்மிடம் தரேன்.''

காட்டுக் கொட்டகையில் அவர்கள் இருவரைத் தவிர வேறு யாருமில்லை.

''ஓர் அடையாளத்துக்கு ஏதேனும் குறிப்பு எழுதிறேன் ஆட்சேபணையில்லாமல் கையெழுத்துப் போட்டுத் தரேன். நாளைக்கு என்றாலும் ஓர் இதுக்காகவேணும்.....''

''ஒண்ணும் வேண்டாம். இதை யார்கிட்டேயும் பிரஸ்தாபிக்காதேயும். காதும் காதும் வைச்ச மாதிரி நாளைக்கு இதே இடத்திலே.......

''அவசியம் சொன்னபடியே செய்வேன்.''

''சரி, போம்!.... காரியத்தைப் பாரும்.''

வேதாசலம் பணத்துடன் புறப்பட்டார், மனைவியிடம் சொல்லிவிட்டு ராசிபுரம் புறப்பட்டு விட்டார்.

❀ ❀ ❀

அடுத்தநாள். மாலை மணி ஆறு இருக்கும்.

ராசிபுரம் செட்டியாரிடம் பணத்தைக் கொடுத்து நகையைத் திருப்பி அதே கையோடு அதை வேறு ஓர் இடத்தில் வைத்துக் கப்புசெ‌ஷையரின் தொகையுடன் பஸ்ஸில் ஓமலூர் வந்து இறங்கும் போது நன்றாக அஸ்தமித்து விட்டது.

''யாரு வேதாசலமா... எங்கே போய்ட்டு வர்றே?''

''ராசிபுரம் வரையிலே ஜோலியாப் போனேன்.''

''விஷயம் தெரியுமா? கப்புசெ‌ஷையர்...''

வேதாசலத்துக்கு உடம்பு நடுங்கியது.

''கப்புசெ‌ஷையருக்கு என்ன?''

''இப்பவோ; எப்பவோன்னு கிடக்கார். நேத்திக்கு மாலை காட்டுக் கொட்டகைக்குப் போனாராம். மனுஷன் அங்கேயே மூர்ச்சையாகி விழுந்து விட்டார். வீட்டுக்குக்கொண்டு வந்து போடறதுக்குள்ளே பேச்சு மூச்சு இல்லே. டாக்டர்கள் பார்த்துக் கையை விரிச்சுட்டா! பந்துக்களுக்கு எல்லாம் சொல்லி அனுப்பி எல்லாரும் வந்துட்டா. ரெண்டு மகன்களுக்கும் தந்தி போயாச்சு. நிலைமை ரொம்ப சீரியஸ்....''

சட்டையின் உள் பையில் ஐந்நூறுரூபாய் நெஞ்சில் உரசிக் கொண்டிருந்தது. அது மட்டும்தானா? ''இதை யார்கிட்டேயும் பிரஸ்தாபிக்காதேயும். காதும் காதும் வச்ச மாதிரி நாளைக்கு இதே இடத்திலே....'' என்று கப்பு செ‌ஷையரின் வார்த்தையும் கூடத்தான். — வேதாசலத்தின் நினைவும் மனமும் இலேசாகக் கலங்கி அழுக்காகிக் கொண்டிருந்தன.

சபலத்தின் விளிம்பிலே நின்ற தம் உள் மனத்தின் இயக்கங்களைச் சம தளமான ஒரு சீர்ப்பட்ட நிலைக்குக் கொண்டு வர முயன்றார். அந்த முயற்சியைக்கூட அவர் அவ்வளவு ஈடுபாட்டோடு செய்தாரா என்பது அவ

# இந்தியாவிலேயே மிகவும் அதிகமாக விரும்பப்படுவதும், விற்பனையாவதுமான மோட்டார் ஸ்டார்ட்டர் இதுவே - காரணம்?



ஏனெனில், இந்த எல்டி-எல்கே ஸ்டார்ட்டர் கச்சிதமான அமைப்புடையது, எடுப்பான தோற்றம் கொண்டது, மோட்டாருக்கு முழுப் பாதுகாப்பை அளிக்கவல்லது. அது எப்படி? மிதமிஞ்சிய மின் அழுத்தம் (ஓவர்லோடிங்) அல்லது சிங்கிள் ஃபேஸிங் ஏற்படும்போது அல்லது சப்ளை வோல்டேஜ் குறைந்து விடும் போது, இந்த ஸ்டார்ட்டர் தவறாமல் இடறி, உடனடியாக, மோட்டாருக்கு மின்சார சப்ளையைத் தடுத்து, அது எரிந்து போகாமல் பாதுகாக்கும் என்பது நிச்சயம்.

எல்டி-எல்கே ஒருபோதும் தன் செயலில் தவற முடியாது என்பதற்குக் காரணமென்ன? ஓவர்லோடு ரிலே ஒவ்வொன்றும் சரிநுட்பமாகக் காலிப்ரேட் செய்யப்பட்டு, ஆடோமாடிக் டெஸ்ட் பெஞ்சில் தனித் தனியாகப் பரிசீலிக்கப்படுகிறது. அதுமட்டுமல்ல, இந்த ரிலே, ஓவர்லோடு ஏற்பட்டால், அதைத் தவறாமல் காட்டக்கூடிய, கையால் மாற்றியமைத்துக் கொள்ளக்கூடிய வகையைச் சேர்ந்ததாகும்:

ஐரோப்பியச் சந்தைகளில் இதர ஸ்டார்ட்டர்களுடன் வெற்றிகரமாகப் போட்டி யிட்டிருக்கும் இந்திய ஸ்டார்ட்டர் இது ஒன்றே




வலுவான கம்பிச்சுருள், எல்டி-எல்கே ஸ்டார்ட்டரின் மற்றொரு விசேஷ அம்சமாகும். எல்டி-எல்கே கம்பிச்சுருள் 'வேக்குவம் இம்ப்ரெக்னேட்' செய்யப்பட்டு, பேக் செய்யப்படுவதோடல்லாமல், 4000 வோல்ட்டுகளில் பரிசீலிக்கப்படுகிறது. வேறு எந்த ஸ்டார்ட்டரின் கம்பிச்சுருளும் இத்தகைய சோதனைக்குள்ளாவதில்லை.

எனவே, உங்கள் மோட்டார்களையும் இயந்திரக் கருவிகளையும் பாதுகாக்க, எல்டி-எல்கே ஸ்டார்ட்டர்களையே, வற்புறுத்திப் பெறுங்கள்— 7.5 ஹார்ஸ்பவர் வரையுள்ள மோட்டார்களுக்கு டைப் எம்கே1, நேரடியான இணைப்பு ரிவர்ஸிங் மற்றும் இரண்டு ஸ்பீட் ஸ்டார்ட்டர்களும், 15 ஹார்ஸ் பவர் வரையுள்ள மோட்டார்களுக்கு ஸ்டார் - டெல்டா ஸ்டார்ட்டர்களும் கிடைக்கின்றன.

ஸ்விட்ச் கியர் டிவிஷன்

## லார்ஸென் அண்ட் டூப்ரோ லிட்.

த.பெ. 278, பம்பாய் - த.பெ. 323, புது டெல்லி- த.பை. 5247, மதராஸ் - த. பெ. 619, கல்கத்தா

இதர இடங்கள்:

பெங்களூர், எர்ணாகுளம், அஹமதாபாத், லக்னோ, ஹைதராபாத், போபால், பாஞ்சிம் மற்றும் ரூர்கேலா.

SWT 026 TM

குடைய மனச்சாட்சிக்குத்தான் தெரியும். வெளிப்பூச்சுக்காகச் சில விஷயங்களுக்காக நடிக்க வேண்டி வருமே; அதைப் போலத் தன் மனச்சாட்சிக்காக அவர் கொஞ்சம் நடிக்கவேண்டியிருந்தது.

தெருவுக்குள் நுழைந்த போது சுப்பு சேஷையர் வீட்டு வாசலில் பரபரப்பு காணப்பட்டது. கடன் கேட்கத் தன்னிச்சையாக மனத்தின் செய்கையைக் கால்கள் ஏற்று அவரை நோக்கி விரைந்தது போல இப்பொழுது செய்ய வில்லை. இரண்டுக்கும் இடையே பெரிய போராட்டம் நடந்து கொண்டிருந்தது. மனம் அவரைச் சுப்பு சேஷையர் வீட்டுப் பக்கம் இழுத்தாலும் கால்கள் அதைச் செயல்படுத்த மறுத்தன. மனத்தின் மற்றொருபுறம் இலேசாக இருண்டு கொண்டு வந்தது.

'இந்த நிலையில் சுப்பு சேஷையரைப் பார்க்கவிட்டால் என்ன? மரணப் படுக்கையில் உயிர் இயக்கத்தை முடித்துக் கொள்ள வேண்டியவரை இப்பொழுது என்ன பார்வை!'

வேதாசலத்தின் வெள்ளை நெஞ்சம் விஷம் வியாபித்த நெஞ்சமாக மாறிக் கொண்டு வந்தது.

'போகாமல் இருக்கக் கூடாது. வீட்டில் மனைவி ஏதேனும் வித்தியாசமாக நினைத்துக் கொள்வாள்.'

"போன காரியம் என்ன ஆச்சு ?"

பணத்தைப் பீரோவில் வைத்துச் சாத்தி விட்டுத் திரும்பியவர், "என்னவோ ஆச்சு" என்று மனத்தின் நிலைப்பெயர்ச்சிக்கு ஒருவித அசுவாரசிய பாவத்தைப் போலித்தனமாக உதிர்த்துவிட்டு அப்பால் நகர்ந்தார்.

"சுப்பு சேஷையரைப் போய்ப் பார்த்துட்டு வாங்கோளேன். மனுஷன் ரொம்ப மோசமாகக் கிடக்கிறாராம். அப்பப்பா.... என்ன வாழ்வு ! நேத்திக்கு நன்னா இருந்த மனுஷனுக்கு இன்னிக்கு ஒரு நிலையா ? ஆபத்துத்தான் மனுஷாளுக்கு எவ்வளவு பக்கமாவே இருக்கு பாருங்கோ.... எதிரே வந்து நின்னு 'நான்தான் அடையாளம் புரியறதா?'ன்னு கேட்டா மலங்க மலங்க முழிக்கிறார். ஒரே நாளிலே இவ்வளவு அலங்கோலமா ?"

வேதாசலம் சேஷையரைப் பார்க்கப் புறப்பட்டார். போகும் போதே அவருடைய எண்ணங்களும் குரூரமாகச் செயல்படத் தொடங்கின.

சேஷையரின் திருஷ்டியில் படாதவாறு தலைமாட்டுக்குப் பின்புறம் போய் நிற்க வேண்டும். தான் வந்திருப்பது பிறருக்குத் தெரிந்தால் பரவாயில்லை. அவருக்குத்தான் தெரியக் கூடாது. அப்படித் தெரிந்தால்தான் என்ன, அவரால்தான் யாரையும் சரியாக அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லையாமே !

"காதும் காதும் வைத்தமாதிரி நாளைக்கு இதே இடத்திலே......"

வேதாசலத்தின் அரக்கு மனம் வஞ்சனையில் வெற்றிப் பெருமிதம் அடைந்தது.

## குடை பிடித்தவர் கெட்டிக்காரர்!

●

ஆதாரம் :
'மேதைகள் வாழ்விலே'

தகவல்:
காழி ஜெயா



1940ம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் ஒரு நாள். பம்பாய் ஆஸாத் மைதானத்தில் மாபெரும்பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. மௌலானா ஆசாத், புலாபாய் தேசாய், நேருஜி ஆகியோர் பேசினார்கள்.

நேருஜி பேசத் தொடங்கிய போது மழை கொட்டத் தொடங்கியது. கொட்டும் மழையில் அப்படியே லட்சக்கணக்கான மக்கள் அசையாமல் உட்கார்ந்து கொண்டு அவரது சொற்பொழிவைக் கேட்டார்கள்.

அப்போது ஒருவர் குடையொன்றை நேருஜியின் தலைக்கு மேலே பிடித்தார். நேருஜிக்குக் கோபம் வந்து விட்டது. "மக்கள் மழையில் நனையும் போது எனக்குக் குடை எதற்கு?" என்று சீறினார். பிறகு சினம் தணிந்து, "குடை எனக்காக அல்ல. மைக்கைப் பாதுகாக்கவே இந்த மனிதர் முயல்கிறார்" என்று சிரித்துக் கொண்டே அவர் கூறிய போது கூட்டத்தினர் குடை பிடித்தவரின் சாமர்த்தியத்தை உணர்ந்து மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்.

---

'யாருக்குத் தெரியும், நான் அவரிடம் வாங்கியதும், அவர் எனக்குக் கொடுத்ததும்.'

பணம் வாங்கச் சென்ற சூழ்நிலை, சேஷையரின் தனிமை எல்லாவற்றையும் மீண்டும் ஒரு முறை மனத் திரையில் ஆட விட்டுப் பார்த்துத் திருப்தி அடைந்தார்.

நல்ல நினைவோட சேஷையர் இருந்து கேட்டால்தான் உண்டு. அரைகுறை நினைவுகளோட கிடக்கிற அவர் கண்ணிலே படாட்டா என்ன? மத்தவா உட்கார்ந்திருக்கிற மாதிரி வாசலிலேயே உட்கார்ந்து விட்டால் போயிற்று.

நினைவுகள் தொட மெதுவாக நடந்து கொண்டிருந்தார்.

"எப்படியிருக்கு ?"

சுப்பு சேஷையர் வீட்டிலிருந்து எதிர்ப்பட்ட ஒருவரிடம் கேட்டார்.

"எல்லா ஏற்பாடுகளுக்கும் சொல்லியனுப்பியாச்சு."

உயிர்ச் சுருக்கத்துக்கு வரம்புகட்டிய வார்த்தைகள், அவர் மரண வாயிலை நெருங்கிக் கொண்டிருக்கிறார் என்பதைத் தெளிவுபடுத்தின.

அவர் வீட்டை நெருங்கினார். 'வீல்' என்று உள்ளிருந்து முதல் அழுகுரல் காதில் விழுந்தது !

அவர் போய் விட்டார் !

வேதாசலத்துக்கும் மனம் வலித்தது.

அழுக்கைச் சுமந்து கொண்டிருந்த இடம் ஏனோ வேதனையைப் பொறுத்தது. இரண்டு தடவை நெஞ்சைப் பிசைந்து கொண்டார்.



"நீயும் குழந்தையும் தானே ரயிலில் போகிறவர்கள்? அதற்கு எதற்கு ஆறு டிக்கெட் வாங்கணும் என்கிறாய்?"

"ஒன்று எனக்கு. மற்றவை அவன் தின்பதற்கு!"

---

உள்ளத்தின் உறுத்தல் இப்பொழுது உடல் வலியாக, அசதியாக உருமாறின.

அவர் போய் விட்டார்.

மனத்தின் ஒருபுறத்தில் இலேசான நிம்மதி படிந்தாலும் மறுபுறத்தில் அதை அடித்துச் சாய்த்துக் கொண்டு புறப்பட்ட குறுகுறுப்பின் நொடிப்பு மூச்சை அடைத்துக் கொண்டு கிளம்பிற்று.

தூர நின்று கூட்டத்துடன் கூட்டமாகப் பெஞ்சியில் கிடத்தப்பட்டிருந்த கப்பு சேஷையரின் உடம்பைத்தான் பார்த்தார். முகத்தைப் பார்க்க அவரது மனச்சாட்சி இடந்தரவில்லை.

அங்கே கூடியிருந்த தெரிந்த முகங்களைப் பார்த்தார். தன்னை நோக்குகிற யாருடைய பார்வையிலாவது உள் ரகசியம் பிரதிபலிக்கிறதா என்ற அச்சத்துடனேயே பார்த்தார். அதிக நேரம் அங்கே நிற்பதற்குக்கூட மனம் இடந்தரவில்லை. "நேத்திக்கு மாலே உங்ககிட்டே இவர் பணம் கொடுத்தாராமே. நீங்க இப்போ கொண்டு வந்து தாறதாகச் சொன்னேளாமே!" — தன்னைப் பார்க்கிற இரண்டொருவருடைய பார்வையில் இந்த அர்த்தம் உள்ளே இருக்குமோ? அவர் மனம் அச்சத்துடன் துணுக்குற்றது. ஓர் அந்தமான முடிவை எட்டிக் கொண்டிருக்கும் போதுதான் எத்தனை தடுப்புக்கள்!

தடுப்புகள் இருக்கட்டுமே, இனிமே அதைச் சுலபமாகத் தாண்டிவிடலாமே.

போலிச் சமாதானங்களும், குரூர முடிவுகளுமாக அங்கே பட்டும் படாமலுமாக— யாருடனும் அதிக வார்த்தைகளாடாமல் வெளியே வந்து ஓர் ஓரமாக அமர்ந்துவிட்டார் வேதாசலம்.

அவர் மனைவி அம்மூ வந்தாள். துக்கம் விசாரித்துவிட்டு அவருக்கு முன்பே போய் விட்டாள்.

அங்கு நடந்த எதிலும் அதிகம் கலந்து கொள்ளாதவராக மனோ வியாதியால் பாதிக்கப்பட்ட பலஹீனராக அவர் அமர்ந்திருந்தார். அடிக்கொரு முறை முகத்தை இரண்டு கைகளையும் குவித்து அழுத்தத் துடைத்துக் கொண்டது — எங்கோ படிந்த அழுக்கைத் துடைத்துக் கொள்வது பாவனைதான் தெரிந்தது.

அழுக்கு எங்கே, முகத்திலா இருக்கிறது? இல்லையே, அது நினைவைச் சார்ந்த மனத்திலே அல்லவா!

மறுநாள் பிற்பகல். திண்ணையில் அமர்ந்திருந்த கூட்டம் குபீரென்று எழுந்துநடந்தது.

சேஷையரின் இறுதி யாத்திரை!

உடம்போடு ஒட்டிக் கொண்டிருந்த ஈர வேஷ்டியை அவிழ்த்தார் வேதாசலம். வாசல் கொடியில் பிழிந்து உலர்த்திவிட்டுக் கோலவாசலில் வந்து நின்றார்.

"அம்மூ, செம்பிலே ஜலம் கொண்டா!"

அம்மூ செம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள்.

கொடியில் மடித்துப் போட்டிருந்த மடி வேஷ்டியைக் கச்சம் வைத்துக் கட்டிக் கொண்டார். கச்சத்தின் மடிப்புக்களைக்கூடச் சிந்தனையுடன்தான் எண்ணினார்.

அவர் நினைவெல்லாம் மாலையில் கொண்டு வந்து வைத்த பணத்தைப் பற்றியே சுற்றிக் கொண்டிருந்தது.

வெற்றி கொண்ட நெஞ்சமல்ல, அது பெருமைப்பட. வஞ்சனையின் வியாபிதத்திலே உழன்று கருமை கொண்ட நெஞ்சம். பின்ன மனமாகக் கருங்கிவிட்ட அந்த நீசமான இடத்திலே எங்கிருந்து தர்மத்தின் நினைக் குரல் கேட்கப் போகிறது?

நேற்றைய முன்தினம் வரை அந்த ஐந்நூறு ரூபாயைப் பெறும் வரை இருந்த நல்ல மனம் இன்று எங்கே என்கிற சம்வாதத்துக்கு அவரளவில் அங்கே மௌன வெளிதான் பதில்.

சூழ்நிலைகளின் மாறுதலால் மனிதன் மாறி விடுகிறான் என்ற வாதத்துக்கு வேதாசலம் ஒரு சாட்சிபூதமாக நின்றார். மன இயக்கத்தின் புனிதத் தன்மையைக்கூட இப்படி விஷமாகச் செய்துவிடக்கூடிய சக்தி மிக்கதா அது?

தான் செய்துவிட்ட அதர்மமான காரியத்துக்கு அவரளவில் எழுந்த ஆயிரம் குத்தல்களுக்கு அவர் கூறிக் கொண்ட சமாதானங்கள் எல்லாமே போலித்தனமானவை தாம்.

வேஷ்டியைச் சரி செய்து கட்டிக் கொண்டே பீரோ அருகில் வந்து நின்றவர் நடுங்கும் கரத்துடன் பீரோவின் கதவைத் திறந்தார்.

முழங்காலுக்குக் கீழே முட்டு நடுங்கியது. அவர் வைத்த இடத்தில் பணம் இல்லை! பீரோவின் கதவுகளைப் பிடித்துக் கொண்டிருந்த கரம் இரண்டும் நடுங்கியது.

பணம் எங்கே?

"என்ன பார்க்கிறேள்? பணத்தையா? அதை நான் போரச்சே கொண்டு போய்க் கொடுத்துட்டேன். கொடுக்கத்தானே வச்சிருந்தேள்?"

தர்மத்தின் குரல் பின்னும் கேட்டது.

## சமாதானப் புறாக்கள்



இரண்டு சமாதானப் புறாக்கள் வெவ்வேறு திசைகளிலிருந்து வந்து ஒரு மரக் கிளையில் அமர்ந்து இளைப்பாறின. கடல்கடந்த நாடுகளைச் சேர்ந்தவை அவை. இரண்டு புறாக்களும் அறிமுகம் செய்து கொண்டன. ஓரினமாக இருப்பதால் அவைகளுக்குத் தங்கள் நட்புறவில் ஒரே பெருமிதம். ஒன்றாகவே உணவுண்டு, ஒன்றாகவே உறங்கி, ஒன்றாகவே ஊர் சுற்றிப் பார்த்தன. களைப்புத் தீர்ந்து புத்துணர்வு பெற்றதும் இரண்டு புறாக்களும் அளவளாவத் தொடங்கின.

முதல் புறா பேச்சோடு பேச்சாக, "தம்பி, என் எஜமானருக்கு இருக்கிற படை பலம் உன் எஜமானரிடம் இருக்க முடியாது" என்றது. அதன் குரலில் ஒரு பெருமிதம்.

இதைக் கேட்டதும் இரண்டாவது புறாவுக்குக் கோபம் வந்து விட்டது. "நீ சொல்லுவது சுத்தப் பொய். என் எஜமானருடைய படை பலத்தில் பாதிகூட உன் எஜமானரிடம் இருக்க முடியாது" என்று கூறி அதை மட்டம் தட்டிப் பேசியது.

அவ்வளவுதான். மறுகணமே இரண்டு சமாதானப் புறாக்களுக்கும் சண்டை மூண்டது. குற்றுயிராய்க் கீழே சாயும் வரையில் இரண்டும் சண்டையிட்டன.

ஆதாரம்: கத்தோலிக் டைஜஸ்ட்

தகவல்: விஜயம்

## அப்பப்பா ! என்ன துணிச்சல் ?



அந்தப் படைத் தளபதியின் மகள் தந்தையிடம் சொன்னாள். "அப்பா! உங்கள் படையில் இருக்கும் லெப்டினண்ட் லட்சுமணன் என்னைத் திருமணம் செய்து கொள்வாயா என்று நேற்றுக் கேட்டார்! நீங்கள் எப்படியாவது அவருக்குப் பதவி உயர்வு தர வேண்டும்."

அதற்கு அந்தத் தந்தை பதில் சொன்னார்: "அது எப்படி அம்மா முடியும்? வேண்டுமானால் ஒன்று செய்யலாம். அசாதாரண தைரியச் செயலுக்காக அவருக்கு ஒரு விருது அளிக்கச் சொல்கிறேன்."

- ஏ. கே. கந்தசாமி

## குன்றக்குடி அடிகளார் கூறிய குட்டிக் கதை !



பழனியிலிருந்து நான்கு மைல் தூரத்தில் ஒரு சிற்றூர் இருந்தது. அங்கு ஒரு பண்ணையார் வாழ்ந்து வந்தார். அவருக்குப் பெரிய வாழைத் தோட்டம் இருந்தது. வாழைத் தோட்டத்தில் போடும் முதல் தாரை பழனியாண்டவருக்குப் படைத்து விடுவதாகப் பண்ணையார் மனத்துக்குள் நேர்ந்து கொண்டார்.

முதல் குலை போட்டுக் காய்த்துக் கனிந்தது. தனது பண்ணைக்காரன் மூலமாகப் பழனிக் கோவிலுக்கு அனுப்ப நினைத்தார். வாழைப் பழக் குலையில் நூறு பழங்கள் இருந்தன. ஆதலால் ஒரு கடிதத்தில், 'நூறு பழங்களடங்கிய வாழைத் தாரை ஆண்டவனுக்குப் படைக்கிறேன்'' என்று எழுதிக் கடிதத்தையும் வாழைத் தாரையும் பண்ணைக்காரன் மூலம் அனுப்பினார்.

பண்ணைக்காரனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆதலால் கடிதத்தில் உள்ளதை அவன் அறியவில்லை.

வழியில் அவனுக்கு நல்ல பசி. எதையும் வாங்கிச் சாப்பிடக் கையில் காசு இல்லை. பண்ணையாரும் அவனது வழிச் செலவுக்காகக் காசு கொடுத்து அனுப்பவில்லை. ஆதலால் வேறு வழி இல்லாததால், "இவ்வளவு பெரிய தாரில் நான்கு பழங்கள் எடுத்துத் தின்றால் யாருக்குத் தெரியும்?" என்று நினைத்து நான்கு பழங்களை எடுத்துத் தின்றுவிட்டான்.

கோவில் காரியக்காரரிடம் சென்று பண்ணையாள் பழத்தையும் கடிதத்தையும் கொடுத்தான். கடிதத்தில் உள்ளபடி பழங்கள் இல்லாததால், நான்கு குறையும் விவரத்தை எழுதி அந்தக் கடிதத்தைப் பண்ணையாரிடம் காரியக்காரர் கொடுத்து விட்டார்.

காரியக்காரர் வீட்டுக்கு விருந்தினர்கள் வந்திருந்தார்கள். பழம் தேவைப்பட்டது. ஆதலால், 'ஆண்டவனுக்கு வந்த ஆயிரக்கணக்கான பழக் குலைகளில் ஒன்றை எடுத்துக் கொண்டால் யாருக்குத் தெரியும்?'' என்று நினைத்துப் பண்ணையார் அனுப்பிய பழக் குலையைக் காரியக்காரர் எடுத்துக் கொண்டார்.

காரியக்காரர் அனுப்பிய கடிதத்திலிருந்து பண்ணைக்காரன் பழங்களை எடுத்து விட்டதையறிந்து, அபசாரம் நடந்து விட்டதாகக் கருதி அவனைப் பண்ணையார் அடி அடி யென்று அடித்து விட்டார். அவனும் உண்மையை ஒப்புக் கொண்டான்.

அன்றிரவு பண்ணையாரின் கனவில் பழனியாண்டவர் தோன்றி, "அப்பா, நீ அனுப்பிய பழங்களில் நான்கு எனக்குக் கிடைத்தது. மீதி காரியக்காரருக்குப் போய் விட்டது" என்றார்.

'பசித்தவனுக்குத் தருவது ஆண்டவனுக்குச் சேர்கிறது' என்ற உண்மையைப் பண்ணையார் உணர்ந்து கொண்டார்.

அனுப்பியவர்: மா. பா. குருசாமி

## 'ஹெட் - கிளார்க்' வார்த்தையிலே... அர்த்தமே வேறுதான்!

■ அடடே! இவ்வளவு சீக்கிரமாக இந்த 'ஸ்டேட்மெண்டை' முடித்துவிட்டீர்களா? பரவாயில்லையே!



■ இன்னும் சில 'ஸ்டேட்மெண்டு'களை நீர் செய்ய வேண்டும்!

■ நம் ஆபீஸில் பெருக்கு மரியாதை என்றால் என்னவென்றே தெரியவில்லை!



■ இன்று காலையில் மிஸ்டர்....... எனக்குக் குட்மார்னிங் கூறவில்லை!

■ கூடிய மட்டும் எல்லாரும் தவறுகள் நேராமல் வேலைகளைச் செய்யுங்கள்.

■ நான் ஒரு சிறு தவறுக்காக மானேஜரிடம் இப்பொழுதுதான் பேச்சு வாங்கினேன்!

■ மிஸ்டர் ............ உங்களைப் பற்றி மானேஜருக்கு நல்ல அபிப்பிராயம் இருப்பதாகத் தெரியவில்லை. கொஞ்சம் கவனமாக நடந்து கொள்ளுங்கள்.



■ நான் இப்பொழுதுதான் உங்களைப்பற்றி மானேஜரிடம் புகார் செய்துவிட்டு வருகிறேன்!

■ நான் இரண்டு நாட்கள் 'காஷுவல் லீவ்' எடுக்கப் போகிறேன்.



■ சில முக்கியமான பிரச்னைகளை இந்த இரண்டு நாட்களிலும் சமாளிக்க வேண்டியதாயிருக்கும்!

■ எல்லாரும் நம்முடன் வேலை செய்யும் மிஸ் .......வை சகோதரியாக நினைத்துப் பழக வேண்டும்.

■ மிஸ்...............விடம் என்னைத் தவிர வேறு யாரும் பல்லை இளிக்கக் கூடாது!

■ (காலையில் ஆபீஸ் பியூனிடம்) பென்சிலைக் கூர்மையாக்கச் சொன்னேன். செய்யவில்லை. இந்த டேபிளைச் சுத்தம் செய்யவில்லை. இந்தப் பைலை எடுத்துப் போகவில்லை. நீ என்னதான் செய்கிறாய்?



■ இன்று காலையில் என் மனைவி என்னை வாட்டு வாட்டு என்று வாட்டிவிட்டாள்!

கண்டுபிடித்தவர்: என்.எஸ். நாதன்

---

## கடலில் மூழ்கவில்லை!

ஹாலிவுட் நடிகர் ஜாக்கி கிளீசன் தாம் தங்கிய ஹோட்டலில் அறையின் வாடகையைக் கொடுக்காமல் ஏமாற்றியிருக்கிறார் ஒரு முறை. நியூ ஜெர்ஸி என்னும் ஊரில் ஹோட்டல் ஒன்றில் அறையெடுத்துத் தங்கியிருந்தார் கிளீசன். ஊருக்குக் கிளம்பும்பொழுது பார்த்தால் அறை வாடகை கொடுக்கப் பணம் இல்லை. உடனே ஒரு தந்திரம் செய்தார். தம் உடைமைகள் எல்லாவற்றையும் ஒரு ஸூட் கேஸில் போட்டு, அதை ஜன்னல் வழியாகக் கீழே தம் நண்பனிடம் போட்டுவிட்டார். உள் டிராயருடன் மட்டுமே கிளம்பிய அவர், ஓட்டல் நிர்வாகப் பெண்ணிடம், நான் கடலில் நீந்தி விட்டு வருகிறேன் என்று கூறிச் சென்றார். கடற்கரையில் உடைகளை மாற்றிக்கொண்டு பஸ் ஏறிவிட்டார் ஊருக்கு. மூன்று வருடங்கள் கழித்துத் தாம் ஏமாற்றிய வாடகைப் பணத்தைக் கொடுக்க அதே ஓட்டலுக்குத் திரும்பி வந்தார். வந்த இடத்தில் அப்பெண் கேட்ட கேள்வி இவரைத் திகைப்படையச் செய்தது. "ஓ, நீங்களா? கடலில் மூழ்கிவிட்டீர்கள் என்றல்லவா எண்ணியிருந்தேன்!" என்றாள் அவள்.



தகவல்: ஸ்ரீதரன்

ஆதாரம்: 'பேஜண்ட்'

# சிவனருட் செல்வர்*

## 49. சென்றவிடமெல்லாம் சிறப்பு

பாண்டி நாட்டிலேயுள்ள பிற தலங்களை வணங்க வேண்டும் என்று விரும்பிய திருஞான சம்பந்தர், ஆலவாய் அமர்ந்தருளும் நீலகண்டரைத் தொழுது ஆரா அன்புடன் புறப்பட்டார். பாண்டிய மன்னரும், அவர் தேவியாரும், அமைச்சரும் கண்ணீர் சொரிந்து, திருஞான சம்பந்தரைப் பிரிய மாட்டாதவர்களாய் உள்ளம் உருகினார்கள்.

இன்றைய மதுரை, ராமநாதபுரம், நெல்லை மாவட்டங்களிலுள்ள புனிதப் பதிகளையெல்லாம் வணங்கிப் பதிகம் பாடினார் பாலறுவாயர்.




இராமேசுவரத்தில் இருந்தபடியே ஈழ நாட்டில் உள்ள திரிகோணமலை, திருக்கேதீச்சுரம், என்ற தலங்களை உணர்வினால் கண்டு பணிந்து செந்தமிழ்ப் பதிகம் பாடிப் போற்றினார். குலச்சிறை நாயனார் அவதரித்த ஊராகிய மணமேற்குடி சென்றார்.

சிவபெருமான் திருவருளால் ஓடம் எதிர்க் கரையை அடைந்தது. அடியவர்களுடன் ஓடத்தை விட்டிறங்கிய ஆளுடைய பிள்ளையார், திருக்கொள்ளம்பூதூர் திருக்கோயிலுட் சென்று மதிவளர் சடையமலனை வணங்கினார்.

மதுரையில் அனல் வாதின்போது பாடிய பதிகம் நள்ளாற்றின் பதிகமாதலின் திருநள்ளாற்றுக்குச் சென்று வணங்கி, ''பாடகமெல்லாம்'' என்ற பைந்தமிழ்ப் பதிகம் பாடி வழிபட்டார்.

திருத்தெளிச்சேரி சென்று எந்தையார் இணையடியை வந்தித்துச் செல்லும்போது இடையில் பௌத்தர்கள் வாழும் நகரமாகிய ''போதி மங்கை'' எதிர்பட்டது. சின்னம், காளம் முதலியவைகள் ''பரசமய கோளரி வந்தார்'' என்று ஊதின. திருஞானசம்பந்தர் வரவையும், அதனால் உண்டாகும் ஆரவாரத்தையும் அறிந்து பௌத்தர்கள் அழுக்காறு கொண்டனர். தங்களுக்குள் கல்வியில் மிக்க புத்தநந்தி முதலியவர்களிடம் சினந்து செப்பினார்கள். புத்தநந்தி, பௌத்தர் குழாங்களுடன் சிவனடியார்களை நோக்கிச் சென்றான். ''எம்மை வாதில் வென்ற பின்னரன்றோ நீங்கள் சின்னங்கள் ஊத வேண்டும்?'' என்று அவர்களிடம் கொதித்துக் கூறி அவைகளை விலக்கினான். அடியார்கள் ஞானசம்பந்தரை வணங்கி நிகழ்ந்ததை விண்ணப்பித்துக் கொண்டார்கள். அதனைக் கேட்ட சம்பந்தர், ''புத்தநந்தி வாது செய்யப் புகும்போது அவனது பொய்ம்மை வெளியாகும்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

தேவாரத் திருப்பதிகங்களை யெல்லாம் எழுதுகின்ற சம்பந்த சரணாலயர் என்ற ஆளுடைய பிள்ளையாரின் அடியார் முன்னே சென்று,

புத்தர்சமண் கழுக்கையர் பொய் கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன அஞ்செ ழுத்துமே

ஞானசம்பந்தர் திருத்தொண்டர் குழாத்துடன் முத்துச் சிவிகையூர்ந்து பாண்டி நாட்டைக் கடந்து சோழ நாட்டை யடைந்தார். முள்ளிவாய்க் கரை என்ற ஊரின் ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது.

தேக்கும், சந்தனமும், அகிலும் அந்த வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன. ஓடக்கோல் நிலபெருமக்கள் ஓடங்களைக் கரையில் நிறுத்திவிட்டு ஓடக்காரர்கள் சென்றுவிட்டார்கள். மக்கள் அக்கரை கடந்து செல்ல முடியாமல் இருந்தனர். திருக்கொள்ளம் பூதூர் என்ற தலம் எதிரே தோன்ற அங்கு சென்று சிவபெருமானை வழிபட வேண்டும் என்று ஞானசம்பந்தர் எண்ணினார். உடனே ஓடத்தின் கட்டை விரைவாக அவிழ்த்து, சிவனடியார்களை அதிலே ஏற்றிக் கொண்டார். ஞானசம்பந்தரும் அத்தோணியில் ஏறி நற்றமிழ்ப் பதிகம் பாடினார்.

கொட்டமே கமழுங் கொள்ளம் பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்கச்
    செல்ல வுந்துக சிந்தையார்தொழ
    நல்கு மாறருள் நம்பனே
ஓடம் வந்தணையுங் கொள்ளம்பூதூர்
ஆடல் பேணிய அடிகளையுள்கச்
    செல்ல வுந்துக சிந்தையார்தொழ
    நல்கு மாறருள் நம்பனே

என்ற திருப்பாடலை ஓதி, "இப் புத்தனுடைய தலை உருண்டு விழும்படி இடிவிழக் கடவது" என்றார். நிறை மொழி மாந்தர் ஆணையிற் கூறியது மறை மொழியாம் ஆதலின், உடனே புத்தநந்தியின் தலையில் இடி விழுந்தது அவன் அழிந்தான். புத்தர் கூட்டம் அஞ்சி அகன்று ஓடியது.

இந்த அதிசயத்தை அடியார்கள் ஆளுடைப் பிள்ளையாரிடம் கூறினார்கள் "நிகழ்ந்தது சரி" என்று அடியார்களை "ஹர ஹர" என்று முழக்குவித்தருளினார். அஞ்சியகன்ற பௌத்தர்கள் மீண்டும் ஒருங்குகூடி, "இது வஞ்சனையோ? சைவ சமயத்து உண்மையோ?" என்று மருண்டு, "நீங்கள் எம்முடன் மந்திரவாதமின்றித் தருக்க வாதம் புரிய வம்மின்" என்று கூறிக் கொண்டு தங்களில் நன்கு கலை பயின்ற சாரி புத்தனை முன் கொண்டு வந்து எதிர்த்தார்கள்.

முன்பு புத்த நந்தியின் தலையை இடியினால் பொடி



படுத்திய சம்பந்த சரணாலயர் ஞானசம்பந்தரைத் தொழுது முன்சென்றார். சாரிபுத்தனுடன் தருக்க முறையில் வாதிட்டு அவனையும் அவனுடன் வந்த மற்ற புத்தர்களையும் வாதில் வென்றார். தோல்வி எய்திய சாரிபுத்தன் முதலிய பௌத்தர்கள் தமது சமயம் பொய்ம்மை என்று தெளிந்து, மெய்ம்மையாகிய சைவ நெறியினைச் சாரும் பொருட்டுத் திருஞான சம்பந்தருடைய திருவடிகளை வணங்கினார்கள். அத்தனை பேரும் சைவர்களாகி உய்வு பெற்றார்கள்.

திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் திருத்தொண்டு செய்து கொண்டு அமர்ந்திருப்பதை அறிந்தார் சம்பந்தர். திருப்பூந்துருத்திக்கு அருகில் வந்தருளினார். இங்கேதான் சம்பந்தர் அறியாமல் அப்பரே அவரது சிவிகையைத் தாங்கி வந்தார்.

பாண்டி நாட்டில் சைவம் மீண்டும் தழைத்ததைச் சம்பந்தர் கூறியருளினார். அப்பரடிகள் பெரிதும் மகிழ்ந்து சம்பந்தரின் பாதம் பணிந்து ''சைவம் என்னும் பயிர் தழைக்கத் தேவரீர் வெளியாக விளங்குகின்றீர்'' என்று புகழ்ந்தருளினார். சம்பந்தரோ மங்கையர்க்கரசியின் மாண்பும் அன்புமே இதற்குக் காரணம் என்றார். திருநாவுக்கரசர் மதுரைக்குப் புறப்பட்டார். சம்பந்தர் தோணியப்பரைக் காணும் காதலுடன் புறப்பட்டார்.

சைவத்தின் அருங் காவலராக வென்று வரும் தமது ஊர்ப் பிள்ளையைச் சீர்காழியில் உள்ள அன்பர்கள் அனைவரும் எதிர் கொண்டு போற்றினார்கள். சம்பந்தர் உடலும் உள்ளமும் உருகத் தன்னையாண்ட அன்னையும் அப்பனுமாகிய தோணியப்பரைத் தொழுது பாடினார்.

அப்பர் பெருமான் தொண்டை நாட்டில் உள்ள திருக்கச்சியம்பதியின் பெருமைகளைக் கூறியிருந்ததால் அங்கு சென்று இறைவனைத் தரிசிக்க வேண்டும் என்ற விருப்பம் சம்பந்தருக்கு எழுந்தது. தோணியப்பரைத் தொழுது விடை பெற்றார். தந்தையாரும் அவருடன் செல்லத் துணிந்தார். தாதையாரை நோக்கி, ''தாங்கள் இங்கேயே இருந்து சில வேள்வி செய்து கொண்டு, கழுமலக் கடவுளைக் கை தொழுதுகொண்டு இருங்கள்'' என்று கூறி விடை கொடுத்து, தொண்டை நன்னாட்டை நோக்கிப் புறப்பட்டார் ஆளுடைப்பிள்ளை.

வரும் வழியில் நினைக்க முக்தியளிக்கும் திருவண்ணாமலையைக் கண்டவுடன் சிவிகையினின்றும் இறங்கி, மண்மிசை வீழ்ந்து, பணிந்தார். விண்ணருவி எனக் கண்ணருவி பொழிந்து, மெய் சிலிர்த்து, உள்ளங் குழைந்து பாடினார்.

பின்னர் அண்ணாமலையாரிடம் விடை பெற்றுக் கொண்டு காடும் மலையும் கடந்து, தொண்டை நாட்டையடைந்தார். செய்யாற்றங்கரையில் உள்ள திருவோத்தூர் என்னும் திருத்தலத்தைச் சார்ந்தார். தேவர்கட்கும் முனிவர்கட்கும் ஒத்து எனும் வேதம் அளித்த பெரும் பதி அது.

அத்தலத்தில் திருஞான சம்பந்தர் அமர்ந்திருந்தபோது அமணர்களால் அலக்கணுற்ற ஒரு தொண்டர் வந்து பிள்ளையாரது திருவடிகளைப் பணிந்தார். ''வெம்பந்தமகற்றும் சம்பந்தப் பெருமானே! அரனார் பொருட்டு அடியேன் வைத்து வளர்த்த பனை மரங்கள் யாவும் ஆண் பனையாகவே யமைந்து காய்த்தல் இன்றி நிற்கின்றன. அது கண்டு அமணர்கள் அடியேனைப் பழித்து நகைக்கின்றார்கள். இந்த ஆண்பனை காய்க்கும் தன்மை உம்மால் நிகழுமோ?' என்று ஏளனம் செய்கிறார்கள். தேவரீர் இதற்கு ஓர் பரிகாரத்தைச் செய்தருள வேண்டும்'' என்று கூறினார்.

ஞானசம்பந்தர் உடனே எழுந்து, சிவபெருமான் திருக்கோயிலுள் சென்று திருப்பதிகம் பாடியருளினார்.

''குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர்
அரும்பு கொன்றை அடிகளைப்
பெரும்புகலியுள் ஞானசம்பந்தன் சொல்
விரும்பு வார்வினை வீடே''

அந்த ஆண் பனைகள் யாவும் பெண் பனைகளாகிப் பூத்துக் காய்த்துக் கனிகளை உதிர்த்தன. அதனைக் கண்டார் அனைவரும் அதிசயமடைந்தனர். தென்னாட்டிலேயே அமணர்களது குற்றத்தை அறுத்த புகலி வேந்தரது திருவருட் செயலைக் கண்ட அமணர்கள் அஞ்சி அந்நாட்டை விட்டு அகன்றார்கள். சில சமணர்கள் தங்கள் குண்டிகைகளை உடைத்தெறிந்துவிட்டுச் சைவ சமயம் சார்ந்து சிவபெருமானைப் போற்றி உய்ந்தார்கள். ஞான சம்பந்தர் திருவாக்கில் தொடர்பு பெற்ற தருவும் அப்பனைகளும் காலாந்தரத்தில் சிதைந்து சேர்ந்தன.

திருப்பதிகள் பல சென்று வணங்கித் திருக்கச்சியம்பதியை அடைந்தருளினார், பாலறாவாயர். காசியின் மீறிய காஞ்சி மாநகர வாசிகள் ஞானசம்பந்தரின் நல்வரவைக் கேட்டு உள்ளம் உவந்து உபசரித்தனர். மங்கல விளக்கு வைத்துப் பல்லியங்கள் முழங்க வந்து எதிர் கொண்டார்கள். ஆளுடைப் பிள்ளையார் முத்துச் சிவிகையினின்றும்

கீழிறங்கி, ஏகாம்பரநாதருடைய திருக் கோயிலினுட் சென்று தயாபரனைக் கண் ணுரைக் கண்டு களிகூர்ந்தார். கச்சித் தலத்திலேயே விளங்கும் திருக்கச்சி நெறிக்காரைக் காடு, திருஅநேகதங்கா வதம், திருக்கச்சிமேற்றளி என்னும் புண்ணியத் தலங்களை வணங்கினர். இவ்வாருகச் சில தினங்கள் கச்சியில் தங்கியிருந்தார். பின்னர் பாலாற்றின் வட கரை வழியாகப் பழையனூர்த் திருவாலங்காட்டுக்கு அருகிற் சென்று அத்திருத்தலம் இம்மையிலே யாவரும் காணக் காரைக்கால் அம்மையார் தலை யினுலே நடந்த திருத்தலம் ஆதலினும் ஞானசம்பந்தர் நமது காலால் மிதிக்க அஞ்சி, அதற்கு அருகில் உள்ள ஓர் ஊரிலே அன்றிரவு பள்ளி கொண் டருளினுர். திருஆலங்காட்டில் எழுந் தருளிய நீலகண்டப் பெருமான் நடு இரவில் ஞான சம்பந்தர் கனவின் தோன்றி, "நம்மைப் பாடுவதற்கு மறந்தனையோ?" என்று அருளிச் செய்தார். உடனே சம்பந்தர் விழித் தெழுந்து, இறைவருடைய இன்னரு ளைத் துதித்துப் பாடினர்.

துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய் நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரு முனைநட்பாய் வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட் டஞ்சும் பழையனூர் ஆலங்காட் டெம்மடிகளே

திருக்காளத்தியைச் சேர்ந்தார் திரு ஞானசம்பந்தர். காளத்தி மலையைக் கண்டவுடன் கண்ணப்ப நாயனுர் திருத் தொண்டு புரிந்த அரிய அன்பைப் புகழ்ந்து திருப்பதிகம் பாடினர். காளத்தியப்பரைக் கண்டு கண்களி கொண்டு கும்பிட்ட பயன் காண்பார் போல் கண்ணப்பரைத் தொழுதார்.

காலங்கள் தோறும் காளத்தியப் பரைத் தரிசித்துக் கொண்டு அங்கு எழுந்தருளி யிருக்கும்போது, வட திசையிலும், மேல் திசையிலும் தமிழ் வழக்கு இல்லாமையால் அங்கிருந்த படியே உத்தர கைலாசம், திருக்கே தாரம், திருக்கோகர்ணம், திருப்பருப் பதம், இந்திரநீல பருப்பதம் முதலிய அரிய தலங்களில் உள்ள இறைவரை அகக் கண்ணுல் கண்டு அருந்தமிழ் மாலை சாத்தினர். சிலநாள் தங்கி யிருந்த பின்னர் அங்கிருந்து புறப் பட்டுத் திருவேற்காடு, திருவலிதாயம் முதலிய தலங்களுக்குச் சென்று வணங் கிக்கொண்டு மிகவும் புனிதம் தங்கிய திருவொற்றியூரை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள எழுத்தறியும் பெரு மானைக் கண்ணுரக் கண்டு தலையாரக் கும்பிட்டு, வாயாரப் பாடி, பதிகம் கூறி எழுந்தருளியிருந்தார். (தொடரும்)

## ஜனுதிபதியான எழுத்தாளர்

☐ அமெரிக்காவின் ஜனுதிபதியாக இருந்த ரூஸ்வெல்ட் 1923ல் நியூயார்க் கம்பெனி ஒன்றில் பிரதான உத்தியோகஸ்தராக இருந்தார். அப்போது 'பாரமௌண்ட் பிக்சர்ஸ்' என்ற பிரபல சினிமா கம்பெனிக்கு ஒரு கதை எழுத வேண்டுமென்று தோன்றிற்று. அதன் முதலாளிக்கு ஒரு கடிதம் எழுதினர். மிஸ் ஜேன் வெஸ்ட் என்பவள்தான் இந்தமாதிரிக் கதைகளை அந்தக் கம்பெனியில் பரிசீலனை செய்வது வழக்கம். முதலாளி, "இப்பொழுது இதை எடுத்துக் கொள்ளச் சாத்தியமில்லை, ஜேன்! பெரிய இடத்தைச் சேர்ந்தவரானதால் ஏதாவது சாக்குபோக்கு சொல்லி விடுங்கள்" என்று கூறினர்.

முதல் தடவை ரூஸ்வெல்ட் ஜேனைப் பார்க்கப் போனபொழுது அவர் உற்சாகமாக 'என் கதை விஷயம் என்ன?' என்று விசாரித்தார். அதற்கு ஜேன் 'முன்னதாகவே இட்டம் போட்டு விடுகிறோம். அதை எப்போது எடுப்பது என்று யோசித்துத்தான் சொல்ல வேண்டும்' என்று மழுப்பினுள். மூன்று மாதம் இப்படி மழுப்பிய ஜேன், கடைசியில் ஒருநாள் உண்மையைச் சொல்லிவிட்டாள். ரூஸ்வெல்ட்டுக்கு ஒரே வருத்தம்.

பிறகு அமெரிக்க கப்பற்படை அதிகாரியான காப்டன் வால்டன் என்பவரை ஜேன் மணந்து கொண்டாள். 15 வருஷம் கழித்து ரூஸ்வெல்ட் இரண்டாம் முறையாக ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போது காப்டன் வால்டனைக் குடும்ப சகிதமாக ஒரு விருந்துக்கு அழைத்திருந்தார். அப்போது ஜேனை ரூஸ்வெல்ட் அடை யாளம் கண்டு கொண்டார். ரூஸ்வெல்ட் சிரித்தபடி, "அந்தக் கதையை எழுதிப் பெரிய எழுத்தாளனுக வேண்டுமென்று எனக்கு அப்போதே ஆசை. நீங்கள் அது வேண் டாம் என்று சொன்னபோது என் வாழ்வே இருண்டு விட்டதாகப் பட்டது" என்றுர்.

"ஆனல் அந்த சினிமாக் கம்பெனியார் அதை எடுத்துக் கொள்ளாமற் போனேமே என்று இப்போது மிகவும் வருத்தப்படுகிருர்கள்" என்றுர் ஜேன்.

"இருக்கலாம். ஆனுலும் அதிலிருந்து, நம் முயற்சி தோற்றுலும் அதோடு நம் வாழ்வு தீர்ந்துவிடப் போவதில்லை. போனதை மறந்து புதிய துறையில் வெற்றிபெறப் பின்னும் அதிகமாக ஊக்கம் செலுத்தத் தெரிந்து கொண்டேன். என் கதையை மட்டும் அவர்கள் எடுத்துக் கொண்டிருந்தால் இப்போது நானும், நீங்களும் அரசாங்க மாளிகை யில் இப்படிப் பேசிக்கொண்டிருக்க முடியுமா?" என்று சொல்லிச் சிரித்தார் ரூஸ்வெல்ட்.

ஆதாரம்: "காரொனெட்" தகவல்: ரமணன்



# அம்மா வென்றாள்!

ஸ்வாமிநாத ஆத்ரேயன்

விடியற்காலத்திலிருந்தே வீடு நிறைந்து கொண்டிருந்தது. மூன்றாவது பெண் மங்களம் புருஷனுடனும் குழந்தையுடனும் போட் மெயிலில் வந்து இறங்கினாள். இரண்டாவது பெண் சாவித்திரி திருச்சியிலிருந்து குழந்தைகளுடன் காரில் வந்து இறங்கினாள். அவள் புருஷனுக்கு ஓய்வு இல்லையாம். முதல் பெண் ஜானகி ஏழு, ஏழரைக்குள் வந்து விடுவாள் என்று எதிர்பார்க்கப்பட்டது.

இரண்டாவது பையன் சீனு திருச்சியில் விமானத்தில் வந்து இறங்கி அங்கிருந்து டாக்ஸியில் தஞ்சை வருவதாகத் தந்தி கொடுத்திருந்தான்.

மூத்தவர் ராமமூர்த்தி எல்லோரையும் வரவேற்று, ஒவ்வொருவருக்கும் தனித் தனியாக-அப்பாவுக்கு நேற்று

ஏற்பட்ட திடீர் இதயத் தாக்குதல்—அவரைப் புது மெடிகல் காலேஜ் ஆஸ்பத்திரியில் சேர்த்திருப்பது — டாக்டரது அபிப்பிராயம் — எல்லாவற்றையும் பொறுமையாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் மனைவி பால்காரனிடம் பாலை வாங்கிக் கொண்டே "இன்னும் நாலு லிட்டர் எப்படியாவது கொண்டு வந்து கொடு" என்று மன்றாடிக் கொண்டிருந்தாள்.

வந்தவர்கள் அவரவர் கஷ்டங்களையும் பெருமைகளையும் கலந்து கலந்து பரஸ்பரம் பரிமாறிக் கொண்டனர். ராமமூர்த்தியின் பெண் கல்யாணி அத்தைகளையும் சித்தியையும் பார்த்துப் பார்த்துப் பொருமிக் கொண்டிருந்தாள். அப்பாவிடம் சென்று "ஏதோ கல்யாணத்துக்கு வந்த மாதிரின்னு... அத்தைகளும் சித்தியும் பேசிக்கிறா..." என்றாள்.

"ஆமாம். ஆகவேண்டியது ஆச்சன்னு கல்யாணம்தான். தாத்தாவுக்கென்ன? கொஞ்ச வயதா? இந்த மாசிக்கு எண்பத்து மூன்று நிறைகிறது. எல்லாரும் நன்னு இருக்கறச்சே அவர் போறதுதானே அவருக்கும் தேவலே!"

மங்களம் உள்ளே வந்தாள்.

"அம்மா எங்கே மதனி!"

"அம்மா கோவிலுக்குப் போயிருக்கா."

"அப்பா ஆஸ்பத்திரியிலே கிடக்கார். இன்னிக்குக்கூடவா அம்மா கோவிலுக்குப் போயிட்டாள்?"

"அதென்னவோ! ஒருநாளைக்குக் கூட அம்மா கோவிலுக்குப் போகத் தவறுவதில்லை. உஷக்கால மணி அடித்த உடனே கோலப் பொடியை எடுத்துண்டு கோவிலுக்குப் போயிடுவார். கோவிலிலே சந்நிதிக் கதவு திறப்பதற்குள்ளே சந்நிதி யெல்லாம் துடைத்துக் கோலம் போட்டு விடுவாள். அத்தனை பேரும் ஸ்தோத்திரம் சொல்லிண்டே இருப்பா. அம்மா அவர்கள் வாயைப் பார்த்துண்டே இருப்பா. தீபாராதனை ஆனதும் தான் கொண்டுபோன பாலை அம்பாளுக்கு நிவேதனம் பண்ணச் சொல்லி எல்லோருக்கும் கொடுத்துவிட்டுத்தான் வருவார். இதற்காகவாவது அம்பாள் காமாட்சி அம்மா வயிற்றிலே பாலை வார்க்கணும்..."

"நானும் சொல்லிக் கொண்டுதான் இருந்தேன். ஒரு தடவை போய் அப்பா அம்மாவைப் பார்த்துவிட்டு வரணும்னு... இவருக்கு இப்போ பிரமோஷன் வந்திருக்கு. இவருக்கு மேலே நாலு பேரை ஒதுக்கிவிட்டு இரண்டு படி மேலே பிரமோஷன் கொடுத்திருக்காளாம். வேலை நெட்டி வாங்குகிறது."



"நீயானும் வந்துட்டுப் போகப்படாதோ?"

"அங்கே மாதர் சங்கத்திலே நான்தான் செகரடரி. நான் இல்லாட்டா ஒரு காரியம் நடக்காது.... எப்படிக் கிளம்பறது...?"

வெளியே மங்களத்தின் புருஷர் ராமமூர்த்தியுடன் பேசிக் கொண்டிருந்தார். பேச்சு அரசியலில் இறங்கி விட்டது.

மூதல் பெண் ஜானகி வந்து இறங்கினாள். அவள் புருஷன் ராகவன் வந்ததும் வராததுமாக "எல்லாம் சௌக்கியம்தானே?" என்று ஒரு வார்த்தையில் கேட்டார்.

"சௌக்கியம்தான்" என்றார் ராமமூர்த்தி.

"சரி. எல்லாம் காமாட்சி கிருபை. நான் ஸ்நானம் பண்ணி முதலிலே பூஜை பண்ணணும். அப்புறம் பேசிப்போம்..." என்று ராகவன் சட்டையைக் கழற்ற ஆரம்பித்தார். அவருக்கு எது எப்படிப் போனாலும் பூஜை நின்றுவிடக் கூடாது.

அம்மா கோவிலிலிருந்து வந்தாள். பேத்திகளும் பேரன்களும் 'பாட்டி பாட்டி' என்று கூச்சலிட்டுச் சுற்றிக் கொண்டனர்.

அம்மா கையில் கொண்டு வந்திருந்த காமாட்சி அம்பாள் குங்குமத்தைப் பெண்களுக்கும் மாற்றுப் பெண்களுக்கும் கொடுத்துவிட்டுக் கூடத்தில் உட்கார்ந்தாள்.

மூத்த பெண் அம்மாவிடம் வந்து உட்கார்ந்து கொண்டாள். — "என்னம்மா இது! அப்பாவுக்கு உடம்பு சரியில்லேன்னு முன்னாடியே அண்ணாவைக் கடிதம் எழுதச் சொல்லக் கூடாதா?" அவளுக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது.

மங்களம் வந்தாள். "நேற்று வரைக்கும் அப்பா

சிறப்புச் சிறுகதை

நன்றுத்தான் இருந்தாராம். நேற்று காலையில் பேப்பர்கூடப் பார்த்தாராம்.''

அம்மா கேட்டாள், ''ஏண்டி ஜானகி, உன் அகத்துக்காரர் ஸ்நானம் பண்ணிவிட்டார் போலிருக்கே! பூஜைக்கு எல்லாம் எடுத்து வையேன்.''

சாவித்திரி வந்தாள். ''அம்மா! இப்பவே நான் ஆஸ்பத்திரிக்குப் போய் அப்பாவைப் பார்க்கணும்.''

''பார்த்துட்டு வாயேன்.''

''நீ வரல்லியா அம்மா?''

''நானும் வரணும். நாலு வீட்டுக்குப் போயிட்டு வரணும். நீ போயிட்டு வா.''

''நாலு வீட்டுக்குப் போகப் போறியா? என்ன காரியம்?''

அம்மா பதில் சொல்லவில்லை.

''ஏண்டி ஜானகி, உன் புருஷன் காப்பி சாப்பிட்டாரா?''

''சாப்பிடுகிறார் அம்மா!''

மங்களம் சொன்னாள், ''நேற்று எதேச்சையாகத் திரட்டுப் பால் பண்ணினேன். தந்தி வந்தது. அப்படியே கொண்டு வந்துவிட்டேன். அப்பாவுக்குக் கொடுக்கப் போறேன்...''

'கொண்டு போய்க் கொடேன்.''

ராமமூர்த்தி குறுக்கிட்டார். ''எந்த ஆகாரத்தையும் டாக்டரைக் கேட்டுத்தான் அப்பாவுக்குக் கொடுக்கணும்.''

''சரி, அண்ணா.''

இரண்டாவது பையன் சீனுவும் அவன் மனைவியும் டாக்ஸியில் வந்து இறங்கினார்கள். டாக்ஸிக்காரன் ஸூட் கேஸையும் பிரம்புக் கூடையையும் கொண்டு வந்து வைத்துவிட்டு நோட்டுக்களை வாங்கிக் கொண்டு ஸலாம் போடாமலேயே போய்விட்டான். லலிதா—அவன் மனைவி — தோளில் மாட்டியிருந்த ட்ரான்ஸிஸ்டரைக் கழற்றி ஸூட் கேஸில் வைத்துப் பூட்டிவிட்டுத்தான் உள்ளே வந்தாள்.

என்னென்னவோ பேசினார்கள். அப்பாவின் உடம்பு நிலை பற்றி எல்லாரும் மறந்துகூடப் போய்விட்டார்கள்.

ராகவன் பூஜையை முடித்துப் பட்டை விரித்துப் போர்த்துக் கொண்டார்.

''நான் பங்காரு காமாட்சியைத் தரிசனம் பண்ணிவிட்டு வந்து விடுகிறேன். ஆஸ்பத்திரிக்கு எப்போப் போகணும்? எல்லோரும் போகணுமா?... போகலாமா....?''

ராமமூர்த்திக்குக் கோபம் வந்தது. ''காலையில் ஆஸ்பத்திரிக்குள் எல்லாரையும் விடமாட்டார்கள். என் பிள்ளை சேது அங்குதான் ராத்திரி தங்கியிருக்கிறான். ஏதோ ஸ்பெஷலாகப் பர்மிஷன் வாங்கி வருவதாகச் சொன்னான். அவன் வந்த பிறகுதான் தெரியும்.''

சீனு அதற்குள் தான் கொண்டு வந்திருந்த வெளி நாட்டுக் கம்பெனி காலண்டர்களை எடுத்து விரித்தான்.

''ஒரு காலண்டருக்குப் பத்து டாலர் ட்யூட்டி கட்டியாக்கும் கொண்டு வந்திருக்கிறேர்கள். எனக்கு நிறைய வந்தது. ஒரு காலண்டர் முப்பது ரூபாய் பெறும். எல்லா நண்பர்களுக்கும் கொடுத்தேன். அத்திம்பேரே! நீங்க ஏதாவது எடுத்துக்கொள்ளுங்களேன்.''

''ஏண்டா, ஏதாவது ராஜராஜேசுவரி போட்டது இருக்கா? இருந்தால் கொடு.''

''ஆமாம்! காலண்டரிலேகூட ராஜராஜேசுவரி வந்தா மரியாதைக் குறைச்சல் இல்லையோ?'' என்று கிண்டல் பண்ணினான் சீனு.

அம்மா தாம்பாளம் நிறையப் புஷ்பம், குங்குமம், சந்தனம் எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பினாள். யாருடனும் அவள் அதிகம் பேசவில்லை.

ராகவன் ராமமூர்த்தியைத் தனியாக அழைத்தார். ''ராமமூர்த்தி எது எப்படி ஆகுமோ, என்ன ஆகுமோ! எல்லாரும் ஒரு வாய் சாப்பிட்டுவிட்டுக் கிளம்பிவிட்டா இன்னிக்குக் கந்தாயம் தீர்ந்தது. ஆகையினாலே சீக்கிரம் சமையலைப் பண்ணச் சொல்லு...''

ராமமூர்த்தியும் அப்படியே தன் மனைவிக்கு ஆணையிட்டார்.

எல்லோரும் குளித்து டிரஸ் பண்ணிக் கொண்டு குழந்தைகளை அலங்கரித்து சாப்பிட்டு விட்டுக் கிளம்ப மணி பத்தரை ஆகிவிட்டது. அதற்குள் ஆஸ்பத்திரியில் இருந்து சேதுவும் வந்துவிட்டான்.

காலையிலே தாத்தா கலகலப்பாக இருந்ததாகவும் டாக்டர் அவரை அலட்டிக்கொள்ளாமல் ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொன்னதாகவும் ஆஸ்பத்திரிக்குள் எல்லோரும் போகப் பர்மிஷன் கிடைத்ததாகவும் சொன்னான். எல்லோரும் கிளம்பினார்கள்.

''அம்மா எங்கே?''

''பாட்டி அப்பவே ஆஸ்பத்திரிக்கு பஸ்ஸிலே போய்க் கொண்டிருந்தாளே!'' சேது சொன்னான்.

அவன் தாயார் சொன்னாள். ''அம்மா காலையிலே காபி சாப்பிட்டதோடு சரி! ஏதோ காசுக்கடைக்குப் போகணும்னு சொன்னார். போயிட்டு வந்து சாப்பிட்டுப் போவாராக்கும்னு நினைச்சேன்.''

ஃ ஃ ஃ

அம்மா நான்கு நந்து வீடுகளுக்குப் போய் விட்டு, காசுக்கடைக்குச் சென்றுவிட்டு பஸ் ஸ்டாண்டுக்குப் போய் ஆறும் நம்பரில் ஏறி ஆஸ்பத்திரிக்குப் போய்க் கொண்டிருந்தாள்.

அவளுக்குச் சஞ்சலமே இல்லை. இன்று காலை அவள் கோவிலுக்குச் சென்றபோது பங்காரு காமாட்சியின் திவ்விய தரிசனம்...

ஒரு பன்னிரண்டு வயதுப் பெண் புதிதாக மடிசார் வைத்துக் கட்டிக் கொண்டதால்—அது பிசகாமல் இருக்க — மடிப்புக் கலையாமல் இருக்க — மடிப்பை முறுக்கி முடிச்சுப் போட்டு அவிழ்த்துவிட்ட விசிறிப்பால் காலில் முன்புறம் அது விரிந்து நிற்க — இடுப்பில் ஒட்டியாணமும், மார்பில் ரத்தினங்களால் செவ்விங்கம் பதித்த திருமாங்கல்யமும் வலது கையில் கிளியும் இடது கை தொடையை அணைந்து அடக்கமாக நிற்கும் அழகும் வெள்ளியங்கிரி

லிருந்து அப்பொழுதுதான் அந்த வெள்ளி மண்டபத்தில் வந்து இறங்கினாற் போன்ற ஒரு பிரமையும் கழுத்தில் இருந்த ஒற்றைக் கதம்பச் சரத்தின் வாடாத நிலையும் — தீப கன்னிகைகளின் கைகளில் சுடர் விடாமல் நிலைத்து ஒளிரும் தீப ஒளியும்....

இதெல்லாம் பஸ்ஸில் போய்க் கொண் டிருந்த அம்மாவின் எதிரே தோன்றிக் கொண்டே இருந்தன.

'எட்டு லக்ஷ்மி'களுக்கு அப்பால் உண்டிய லின் பக்கத்தில் அவள் நமஸ்காரம் செய்து எழுந்தபோது சௌபாக்கிய லக்ஷ்மியின் அருகே தொங்கிக் கொண்டிருந்த கண்ணாடி குளோபில் வந்து காமாட்சி தன்னைக் கருணையுடன் பார்ப்பது போன்ற காட்சியும்...

அப்போது ஸ்தானிகர் சிவராம சாஸ்திரிகள் வந்து குங்குமப் பிரசாதம் கொடுத்துவிட்டு "மாமா வீட்டுக்கு வந்துவிட்டாரா?" என்று கேட்டதும் நினைவுக்கு வந்தன.

அதுவரை தோன்றாத ஒரு வேண்டுதல் மனத்தில் மின்னிற்று. அந்த வேண்டுதலை அன்றே நிறைவேற்றுவதாகத் தீர்மானம் செய்து கொண்டு கோவிலை விட்டுக் கிளம் பினாள்.

பஸ்ஸில் சென்று கொண்டிருந்தபோது அது இவ்வளவு சுலபமாக நிறைவேறிக்கொண் டிருப்பதை நிறைவோடு நினைத்தாள்.

அவளுக்குச் சஞ்சலமே இல்லை.

பிள்ளைகளும் பெண்களும் வீட்டில் கூடி விட்டார்கள். எதற்காக?

எத்தனையோ முறை அவர்களை ஆனந்த மாக வரவேற்று ஆசையோடு உபசாரம் செய்த அம்மாவுக்கு இந்தத் தடவை ஒரு பேருண்மை புரிந்தது.

தன் பிராணனிலிருந்து பிரிந்த அத்தனை பேர்களும் பிரிந்துதான் விட்டார்கள். தன் பிராணனுடன் பிணைந்தவர் புருஷன் ஒருவர்தான். அந்தப் பிணைப்புதான் இருவர் பிராணன்களையும் ஒன்றுக் கொன்று ஆதர வாகக் காத்து வருகிறது.

இந்தப் பேருண்மை அம்மாவின் பேதை உள்ளத்திலே தெளிவாக — ஆனால் மேலே சொன்ன சொற்களுக்கு அகப்படாமல் பிர காசித்தது.

"என்னவோ! அவா அவா புண்யம் அவா அவாளோடே" என்று முனு முனுத்தாள்.

ஆஸ்பத்திரி வந்துவிட்டது. பஸ்ஸை விட்டு இறங்கியதும் அங்கு பஸ்ஸுக்காகக் காத் திருந்த அடுத்த வீட்டு சுப்பையா பிள்ளை பேசினார்.

"வாங்க அம்மா! பெரியவங்களைப் பார்த்து விட்டுத்தான் வந்தேன். பிள்ளைங்களெல்லாம் வரலீங்களா?"

"எல்லாரும் வராங்க! அவங்க இருக்கிற வார்டுக்கு எப்படி போறது? ஏதோ ஸ்பெஷல் வார்டாமே!"

"வாங்கம்மா, நான் கொண்டு விடறேன்." மறுபடியும் அம்மாவுடன் ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தார் அவர்.

"அம்மாவை அழைச்சுகிட்டு வந்தேன்." பெரியவர் படுக்கையினின்று எழுந்தார்.

"நீ தனியேவா வந்தே...?"

"ஆமாம்!"

"ராமமூர்த்தி வரலியோ?"

"அவனும் வரான். சீனு, ஜானகி, மங்களம் எல்லோரும் வரான்."

"இங்கே என்ன கல்யாணமா?"

"என்னங்க அப்படிச் சொல்றீங்க? பார்க்க ணும்னு நெனைக்க மாட்டாங்களா? நேத்து எனக்கே ரொம்பப் பயமாப் போயிட்டுது. ஏதோ அம்மா காமாட்சி கோவில்லேயே தவங் கெடக்காங்க. அந்தப் புண்யம்தான் நேத்துக் கண்டத்திலிருந்து தப்பினீங்க..."

"ஆமாம் பின்னேவான்! தப்பியாச்சு. இப்போ என்ன? உடம்பிலே சக்தி இல்லே. எல்லாவற்றுக்கும் இவள் பிராணனைத்தான் வாங்க வேண்டியிருக்கு. காலா காலத்திலே போறதுதான் தேவலே..."

"ஆமாம். எப்போப் பார்த்தாலும் இப்படி ஒருபாட்டு. அப்புறம் என் கதி என்ன ஆகிறது?"

"பிள்ளைகள் இருக்கான்கள். பெண்கள் தாங்குவார்கள் ஜாம் ஜாம்னு...."

"போதும். பேசாதீங்கோ! டாக்டர் பேசப்படாதுன்னு சொல்லி இருக்காராம்."

"ஆமாங்க. நீங்க அதிகம் பேசப்படாது. நான் வரேனுங்க. ஜாக்கிரதையா இருங்க..."

சுப்பையா பிள்ளை கிளம்பினார். கிழவர் நிமிர்ந்து உட்கார்ந்தார். அம்மா வார்டின் கதவைச் சாத்திவிட்டுப் படுக்கைக்கு வந்தாள்.

"நீ ஏதாவது சாப்பிட்டாயா?"

"குழந்தைகளெல்லாம் வந்திருக்கு. அங்கே ஒரே அமர்க்களம். காப்பி சாப்பிட்டேன்."

"இப்படிப் பட்டினி கிடந்து நீயும் படுத்துக் கொண்டு விடு. அப்புறம் தான் நாறவேண்டி யதுதான்."

"அதெல்லாம் ஒன்றுமில்லே. தங்கம் தங்க மாக் குழந்தைகளைப் பெற்றுவிட்டு ஏன் இப்படிப் பேசறேள்?"

"தங்கமுமாச்சு, பித்தளையுமாச்சு."

அம்மா புடவைத் தலைப்பிலிருந்த முடிச்சை அவிழ்த்தாள். ஒரு சின்ன அட்டைப் பெட்டி; அதில் ஒரு மஞ்சள் கயிற்றில் கோத்த திரு மாங்கல்யமும் இரண்டு குண்டுகளும்.

"இது என்ன இது?"

---

"ஸ்கூட்டரை நான் சொன்ன மெக்கானிக் கிடம்தானே ரிப்பேர் செய்தாய்?"

"ஆமாம்."

"நான் அனுப்பியதாகச் சொன்னாயோ?"

"சொன்னேன்."

"என்ன சொன்னார் மெக்கானிக்?"

"ரிப்பேருக்கான தொகையை முதலிலேயே, கொடுத்துவிட வேண்டும் என்றார்."

—ஏ.கே. கந்தசாமி



''காமாட்சி உத்தரவு. காலையிலே பத்து சுமங்கலிகள் கிட்டே போய்த் தாலிப் பிச்சை வாங்கி இதை வாங்கிண்டு வந்தேன். இந்தாங்கோ! இதை உங்க கையாலே என் கழுத்திலே கட்டுங்கோ! அப்புறம் இந்தப் பழசைக் கொண்டு போய்க் காமாட்சி கழுத்திலே போடணும்.''

கிழவர் ஒரு தடவை பெருமூச்சு விட்டார். 'என்ன இப்படி?' என்று கேட்டாரே தவிர, பதிலை எதிர்பார்க்கவில்லை. அவருக்கு வேத மந்திரம் நினைவுக்கு வந்தது.

''ஏ சுமங்கலிகளே! இதோ புது மணப் பெண். இவளருகே வாருங்கள். இவளைக் கண்குளிரப் பாருங்கள். இவளுக்கு ஸௌபாக்யத்தை அளித்துவிட்டுச் செல்லுங்கள். (இவள் உங்கள் கூட்டத்தில் சேர்ந்து மங்களம் பெறுகிறாள்.) இவளிடம் விரோதம் பாராட்டாதீர்கள்''—என்பது மந்திரத்தின் கருத்து.

''இப்படிக் குற்றுயிரும் குலை உயிருமாக என்னை இன்னும் எத்தனை நாளைக்குக் காப்பாற்றப் போறே?''

''நான் காப்பாத்தறதாவது? எல்லாம் காமாட்சி இஷ்டம்.''

''ஆமாம்! பழைய தாலியை அம்பாளுக்குச் சாத்தலாமா?''

''அதுக்கென்ன? காமேசுவரன் மாதிரி நீங்கள் உங்கள் கையாலே கட்டின தாலிக்கு எத்தனையோ மஞ்சள் குங்குமம் இட்டிருக்கிறேன். அந்த அம்பாள் சந்தோஷமாகக் கட்டிப்பாள்... தாமியாச்சு... குழந்தைகள் எல்லாம் வந்திண்டிருக்கா. சீக்கிரம் கட்டுங்கோ...''

கிழவருக்கு மிகவும் தெம்பு வந்துவிட்டது. அம்மா அவர் மடியில் குனிந்தாள். உதரும் கைகளை ஸ்திரப்படுத்திக் கொண்டு அவள் கழுத்தில் தாலியைக் கட்டி மூன்று முடிச்சுகள் பொறுமையாகப் போட்டார். விம்மும் அவள் தோள்களை அழுத்திப் பிடித்துக் கொண்டார்.

கதவு திறந்தது. கலகலவென்று குழந்தைகளும் பெரியவர்களும் நுழைந்தார்கள்.

''அப்பா'' என்று வராத அழுகையை வரவழைத்துக் கொண்டு முன்வந்தாள் மூத்த பெண்.

அம்மா தலை நிமிர்ந்தாள்.

ராமமூர்த்தி எல்லாரையும் பதற்றப்படாமல் இருக்கும்படி சமாதானம் செய்தார்.

மங்களம் முன்வந்தாள்.

''அப்பா, உங்களுக்காகத் திரட்டுப் பால் கொண்டு வந்திருக்கிறேன்.''

''திரட்டுப் பாலா...?'' என்று சிரித்தார் கிழவர். ''சரியான சமயத்திலேதான் கொண்டு வந்திருக்கே!''

''அப்பா சாப்பிடலாமோ கூடாதோ...?'' என்றார் ராமமூர்த்தி.

''எல்லாம் சாப்பிடலாம்டா! எனக்கு ஒன்றும் இல்லை. கல்யாணப் பட்சணம் வந்திருக்கு. இந்தா மங்களம்! எனக்கு முதல்லே கொடு. அப்புறம் அம்மாவுக்குக் கொடு. அப்புறம் எல்லோருக்கும் கொடு.''

''அப்பா! அம்மா காலேலேருந்து ஒன்றுமே சாப்பிடல்லே.''

''அப்போ அவளுக்கு நிறையக் கொடு.''

டாக்டர் வந்தார். கிழவரைக் கவனித்தார்.

''பரவாயில்லை. ஆகாரங்களைக் கட்டுப்பாடாகக் கொடுக்கணும். நிறைய அவருக்கு ஓய்வு வேண்டும். அவ்வளவுதான். வீட்டுக்கே கூட அழைத்துப் போகலாம்'' என்றார்.

எல்லோருக்கும் சந்தோஷம்தான். ஆனால் அவ்வளவு ஸ்வாரஸ்யமாக இல்லை. அப்பாவை வீட்டுக்கு அழைத்துப் போக டாக்ஸி கொண்டு வரக் கிளம்பினான் சீனு.

''முதலிலே அம்மாவை வீட்டுக்கு அழைத்துப் போ. அவள் ஏதாவது சாப்பிடட்டும்.''

''ஆமாம்' உச்சிக்காலத்துக்குள்ளே அம்பாளுக்குத் தாலிக் காணிக்கை செலுத்தணும்... நான் கிளம்பறேன்.''

அம்மாவைப் பஸ்ஸில் ஏற்றிவிட்டு சீனு டாக்ஸி கொண்டு வரப் போனான். அம்மா நேரே காமாட்சி அம்மன் கோவிலில் வந்து பஸ்ஸை விட்டு இறங்கினாள். உச்சிக்கால தீபாராதனைக்குத் திரையிடப்பட்டிருந்தது.

சிவராம சாஸ்திரிகள், ''வாருங்கோ. உங்களை இன்னும் காணுமே என்று பார்த்தேன்.''

''என்னவோ, அம்பாள் இஷ்டம். நல்லபடியா மாமாவை அகத்துக்கு அழைத்து வருகிறாள். எனக்கும் தரிசனம் கொடுக்கிறாள். இந்தாங்கோ! இந்தத் தாலியை அம்பாள் கழுத்திலே சாத்துங்கோ!''

அர்ச்சகரும் அதை வாங்கிக் கொண்டு போய்ச் சாத்தினார். தீபாராதனை நடந்தது. ரத்தினச் சிவலிங்கம் பதித்த திருமாங்கல்யத்துக்கு மேலே அம்பாளின் மார்பின் மேல் சாய்ந்து அம்பாளின் முகத்தைப் பார்த்தது அம்மாவின் பழைய திருமாங்கல்யம்.

''தாயே....'' என்றாள். அவளுக்கு நெஞ்சை அடைத்தது. நமஸ்காரம் பண்ணத் தலை குனிந்தாள். தலை சுற்றியது. அப்படியே சாய்ந்தாள்....

பன்னிரண்டு நாட்கள் காரியம் நடந்தது. பதின்மூன்றும் நாள் எல்லாரும் புத்தாடை கட்டிக் கொண்டார்கள். ஒவ்வொருவராக ஊருக்குக் கிளம்பினர். பெரிய பெண் அப்பாவிடம் வந்தாள்.

''அப்பா! இனிமே நீங்கதான் உங்களைப் பார்த்துக்கணும்.'' உண்மையாகவே அவள் அழுது விட்டாள்.

''ஆமாம்! அவள் ஜயித்து விட்டாள். நான் தான் தோற்றுங்குளியாக உட்கார்ந்திருக்கேன். நீங்கள் எல்லோரும் எனக்காக உபதேசம் பண்ணுகிறீர்கள்.''

அவர் கண் கசிந்தது.

உள்ளே லலிதா தன் பெரிய ஓரகத்தியிடம் விடை பெற்றுக் கொண்டிருந்தாள்.

''இவ்வளவு கஷ்டப்பட்டு இவ்வளவு செலவழித்துக் கொண்டு இவ்வளவு தூரம் வந்ததற்கு ஒரு காரியம் ஆச்சு. இனிமேல் இப்போதைக்கு வரமுடியாது. அப்பாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்!''

சென்னை
பிளாசா
அகஸ்தியா
மேகலா
நூர்ஜஹான்
மற்றும் தென்னாடெங்கும்



ஏப்ரல்
14உ
முதல்...

வீனஸ் பிக்சர்ஸ் அளிக்கும்
சாரதா புரொடக்ஷன்ஸ்

# பட்டணத்தில் பூதம்

ஈஸ்ட்மென் கலர்
BY GEMINI LAB.

டைரக்ஷன் M.V.ராமன்
தயாரிப்பு T.கோவிந்தராஜன்

சனம்: ஜாவர்சீதாராமன் பாடல்கள்: கண்ணதாசன் இசை: கோவர்தனம் ஒளிப்பதிவு: ரவிகாந்த் நிகாய்ச்
கலை: கிருஷ்ணராவ் ஸ்டூடியோ: விஜயா

ATKVAM

# கல்லுக்குள் ஈரம்

ர. சு. நல்லபெருமாள்

## அத்தியாயம் பதினான்கு

## கள்ளுக்கடை வாசலில்

மத்தியானம் வெய்யில் கொளுத்தியது. அதைப் பொருட்படுத்தாமல் திரிவேணியும், ரங்கமணியும் தெருவில் உற்சாகமாகப் பேசிக் கொண்டே நடந்தார்கள். திரிவேணி வெய்யிலில் வாடுவது ரங்கமணிக்குச் சங்கடமாயிருந்தது.

'' ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு போவோமா ?'' — ரங்கமணி கேட்டான்.

''ஏன்? தீவிரவாதியினால் வெய்யிலின் தீவிரத்தைத் தாங்க முடியவில்லையோ?''

'' எனக்கில்லை. உனக்காகத்தான் சொன்னேன்'' என்றான் ரங்கமணி.

ஒரு கடிதத்தை ரங்கமணியிடம் நீட்டினாள் அவள்.

''என்ன இது?'' என்று முனகிக் கொண்டே கடிதத்தை வாங்கினான் ரங்கமணி.

''மகாத்மாவிடமிருந்து வந்த கடிதம்.''

''அவரே எழுதியிருக்கிறாரா?''

''இல்லை, அவர் சொல்லி, அவருடைய காரியதரிசி எழுதியிருக்கிறார்.''

''என்னவாம்?''

''படித்துப் பாருங்களேன்.''

''நீயே சொல்லிவிடு'' என்று கடிதத்தை அவள் கையில் திணித்தான்.

''அடேயப்பா, வார்தாவிலிருந்து வந்த கடிதத்தைத் தொட்டால்கூடத் தீவிரவாதத்துக்குப் பங்கம் வந்துவிடுமா என்ன?''— திரிவேணி சிரித்தாள்.

''என்ன எழுதியிருக்கிறது?''

''நாளை நடக்கப் போகும் மறியலுக்கு மகாத்மா ஆசி கூறியிருக்கிறார். அதோடு உங்களைப் பற்றியும் எழுதியிருக்கிறார். மகாத்மாவுக்கு உங்களைப் பற்றித் தீக்ஷிதர் எழுதி இருந்தாராம். தற்போது நீங்கள் என்னோடு இருப்பது தெரிந்து மகாத்மாவுக்கு மிகவும் மகிழ்ச்சியாம். நான் எப்படியும் உங்கள் உடலில் புகுந்திருக்கும் பலாத்கார விஷத்தை இறக்கிச் சாத்விகப் பாதையில் திருப்பி விடுவேன் என்று மகாத்மா நம்புகிறாராம்'' என்றாள் திரிவேணி. பதில் ஒன்றும் பேசாமல் நடந்தான் ரங்கமணி. அவள் முகத்தை அடிக்கடி ஓரக்கண்ணால் ஆவலோடு பார்த்துக் கொண்டே அவளும் நடந்தாள்.

ஜங்ஷன் லெவல்கிராஸிங் பக்கம் வந்த போது, ''திரிவேணி'' என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டு இருவரும் திரும்பினர். ஒரு வெற்றிலைப் பாக்குக் கடையில் சர்பத் சாப்பிட்டுக் கொண்டிருந்த வெங்கு, சர்பத் இருந்த தம்ளரை ஏந்திக் கொண்டே அவர்களை நோக்கி ஓடி வந்தான்.

''ஏய் பித்துக்குளி, இங்கே என்ன செய்கிறாய்?'' என்றாள் திரிவேணி.

''சர்பத் சாப்பிட்டேன்'' என்று குழைந்தான் வெங்கு.

''வேண்டாம்.... வேண்டாம்!'' என்றாள் திரிவேணி.

''என்ன வெங்கு, திரிவேணியை மட்டும் கேட்டாயே, எனக்கு சர்பத் வேண்டுமா என்று கேட்டாயா?'' என்றான் ரங்கமணி. வெங்கு அசடு வழியச் சிரித்துக் கொண்டு நின்றான்.

''ஹி..... ஹி..... சாப்பிடுங்களேன் '' என்று கூறிக் கொண்டே தம்ளரிலிருந்த மீதி சர்பத்தையும் வாயில் ஊற்றிக் கொண்டான்.

''வேண்டாம். நீயே சாப்பிடு. இங்கே என்ன செய்கிறாய்? இந்த வெய்யிலில்?'' என்று கேட்டான் ரங்கமணி.

''உங்கள் அச்சுக்கூடத்துக்குத்தான் புறப்பட்டேன். நீங்கள் எதிரே வந்து விட்டீர்கள். திருபர் சார், என் படத்தைக் கயேச்சைப் பத்திரிகையில் போட வேண்டும்'' என்றான் வெங்கு. திரிவேணி சிரித்தாள். ''சார் சார், திரிவேணியின் படத்தைப் போடும் போது என் படத்தையும் போட வேண்டும். படத்தைத் திரிவேணியிடம் கொடுத்திருக்கிறேன்'' என்றான் வெங்கு மீண்டும்.

''என்னத்துக்காகப் போட வேண்டும்?'' என்றாள் திரிவேணி.

''பார்த்தாயா, நீயே இப்படிச் சொன்னால்....? நீ சொல்கிற வேலையெல்லாம் நான் செய்யவில்லையா ? இதோ பாரு. உனக்காகத்தான் இப்போதும் வெய்யிலில் அலைகிறேன். நீ கொடுத்த கள்ளுக்கடை மறியலைப் பற்றிய நோட்டீஸ்களை எத்தனை பேருக்கு விநியோகம் செய்திருக்கிறேன் தெரியுமா ?'' என்றான் பெருமையுடன். கையில் மீதியிருந்த நோட்டீஸ்களைக் காட்டினான்.

''ஓ.... நீயும் இந்தக் கூட்டத்தில் சேர்ந்து விட்டாயா?'' என்றான் ரங்கமணி ஆச்சரியத்துடன்.

''சேர்ந்தால் என்னவாம்? அக்கா கோபிப்பாள் அவ்வளவுதானே?'' என்றான் வெங்கு அலட்சியமாக.

''யார் அக்கா?'' என்று திரிவேணியிடம் கேட்டான் ரங்கமணி.

''மிஸ்டர் சிவானந்தத்தின் மனைவி கமலாவைச் சொல்லுகிறான். அவளுக்கு இவன் தூரபந்து. அவர்களுடைய பராமரிப்பில்தான் இருக்கிறான்'' என்றாள் திரிவேணி. பரி

தாபத்துடன் வெங்குவைப் பார்த்தான் ரங்க மணி.

''வெங்கு, இப்படி யெல்லாம் நீ நடந்து கொண்டால் பிறகு அவர்களுக்கு உன் மீது கோபம் வராதா ?''

''வந்தால் என்னவாம்? எனக்கென்ன பயமா ?'' என்றான் வெங்கு சிறு குழந்தை யைப் போல். அவனுடைய வெகுளித் தனத்தை நினைத்துப் பரிதாபப்பட்டான் ரங்கமணி.

''இதெல்லாம் நீ இவனை இழுத்திருக்கவே கூடாது'' என்று திரிவேணியிடம் கூறினான் ரங்கமணி. பிறகு, ''சிவானந்தத்தின் மனைவி பொல்லாதவளாம். இவனை வீட்டை விட்டுக் கூடத் துரத்தி விடுவாள். இந்தப் பாவத்தை நீயேன் கட்டிக் கொள்கிறாய்?'' என்று ஆங் கிலத்தில் சொன்னான்.

''நானா இவனை இழுக்கிறேன்? அவன் தான் ஓடி ஓடி வருகிறான். வேண்டாம் என்றா லும் கேட்க மாட்டேன் என்கிறானே!''



''இப்போது என்னவாம்? திரிவேண
காக நான் எது வேண்டு மென்றாலு
செய்வேன். அது என் இஷ்டம்'' எ
றான் வெங்கு முறைப்பாக. அவனை
பார்க்கப் பரிதாபமாகவும் இருந்த
சிரிப்பாகவும் இருந்தது. இந்தச்
யத்தில் ஒரு கார் அவர்கள் பக்
தில் வந்து நின்றது. காரிலிருந்து சி
னந்தம் கம்பீரமாக இறங்கினான். .
னைப் பார்த்ததும் வெங்குவின் கை
யிருந்த நோட்டுகள் கட்டுக்களைத்
வேணி வெடுக்கென்று பறித்துக் கொ
டாள். நல்லவேளை, இதைச் சிவா
தம் கவனிக்கவில்லை.

''என்ன திருபார் சார், சந்தியாக்
கினை நடு ரோட்டிலேயே பே

ளாண்டிரீர்கள் போலிருக்கிறதே!'' என்றான் சிவானந்தம் சிரித்துக் கொண்டே.

''என்ன, நீங்கள் மறியலைப் பற்றி வேறு ஏதாவது முடிவு செய்திருக்கிறீர்களா? அல்லது....?'' என்று திரிவேணியைப் பார்த்துக் கேட்டான். அவள் சிரித்துக் கொண்டே தன் கையிலிருந்த நோட்டீஸ்களிலிருந்து ஒன்றை எடுத்து அவனிடம் நீட்டினாள். அதை வாசித்துவிட்டு, ''ஓ... நோட்டீஸ் விநியோகம் ஆகிறதா? எங்களுக்குத்தான் தொந்தரவு கொடுக்கிறீர்கள்!'' என்றான் சிவானந்தம். அவன் குரலில் சிறிது கோபம் தொனித்தது.

''உங்களுக்குத் தொந்தரவில்லை. கள்ளுப் பானைகளுக்குத்தான் தொந்தரவு'' என்றாள் திரிவேணி. பேச்சை அதிகம் வளர்க்க சிவானந்தம் விரும்பவில்லை. ஆகவே, பார்வையை வெங்குமீது செலுத்தினான்.

''நீ எங்கேடா இங்கு சுற்றிக் கொண்டிருக்கிறாய்?'' என்றான்.

''ஒரி.... ஒரி.... சும்மாத்தான் இந்தப் பக்கம் வந்தேன். ஒரி.... ஒரி.....''

''சரி, சரி! காரில் ஏறு!''




பவ்வியமாகக் காரில் ஏறினான் வெங்கு. திரிவேணியிடமும் ரங்கமணியிடமும் விடை பெற்றுக் கொண்டு சிவானந்தம் காரில் ஏறினான்.

''நாளை மறியலில் சந்திக்கலாம்'' என்றாள் திரிவேணி, அவனைப் பார்த்து. அவன் முகம் கடுகடுத்தது. கஷ்டப்பட்டுச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு திரும்பினான்.

''என்ன மிஸ்டர் ரங்கமணி, நீங்கள்கூட மறியலுக்கு வருகிறீர்களா?'' என்று கேட்டான்.

''சேச்சே, இந்த மாதிரியான அர்த்தமில்லாத ஆர்ப்பாட்டத்திலெல்லாம் எனக்கு நம்பிக்கையே கிடையாது.''

''திருபராக வந்து வேடிக்கை பாருங்களேன், சத்தியாக்கிரகிகள் தலைதெறிக்க ஓடுவதை!'' என்று கூறிவிட்டுச் சிரித்துக் கொண்டே காரைச் செலுத்தினான். கார் உறுமிக் கொண்டே பாய்ந்தது. சிவானந்தத்துக்குப் பதிலாக அது உறுமியது.

மறியல் நடக்கும் இடத்துக்குத் தன்னோடு வருமாறு சோமு எவ்வளவோ வற்புறுத்திக் கூப்பிட்டும் ரங்கமணி மறுத்துவிட்டான்.

''இந்த மாதிரி பைத்தியக்காரத்தனமான கூட்டத்துக்கெல்லாம் நான் வரத் தயாரில்லை'' என்றான்.

''திருபராக நின்று வேடிக்கைப் பார்க்க வாயேன்'' என்றான்.

''எனக்கு வர இஷ்டமில்லை. போலீஸ்காரர்களின் தடியடிப் பிரயோகத்தைப் பார்த்துக் கொண்டு என்னால் சும்மா இருக்க முடியாது. உணர்ச்சி வேகத்தில் ஏதாவது செய்து விடுவேன். உனக்குள்ள அடக்கம் எனக்குக் கிடையாது'' என்றான் ரங்கமணி.

ரங்கமணிக்குக் கள்ளுக்கடை மறியல் நடக்கும் இடத்துக்குப் போக இஷ்டமில்லையென்றாலும், மறியல் நடத்தப் போகும் கூட்டத்தைத் திரிவேணி தலைமை தாங்கி நடத்திச் செல்லும் காட்சியைக் காண ஆசையாயிருந்தது. அன்று மாலையில் ஐந்து மணிக்கு ஜங்ஷன் லெவல் கிராஸிங்குக்குப் பக்கத்திலுள்ள கட்டடத்தின் மாடியில் நின்று கொண்டு ஊர்வலத்தைப் பார்த்தான்.

''அடேயப்பா, எவ்வளவு பெரிய கூட்டம்! கண்ணுக்கு எட்டிய தூரம் வரை தலைகள் தெரிந்தன. கூட்டத்துக்கு முன்னால் திரிவேணி மூவர்ணக் கொடியை ஏந்திக் கம்பீரமாக நடந்து வந்தாள். அவளுடைய கதர் உடையும், கையில் பிடித்த கொடியும், தலைமை தாங்கும் நடையும் கண்டு ரங்கமணி, மெய்சிலிர்த்து நின்றான். அந்தக் கண் கொள்ளாக் காட்சியை விழி பிதுங்கப் பார்த்து நின்றான்.

அவளுடைய வாயிலிருந்து ''வந்தே மாதரம்'' என்ற சொல் கிளம்பியதும், ஊர்வலத்திலிருந்த அனைவருடைய வாயிலிருந்தும் அந்த மந்திரச் சொல் சிம்ம கர்ஜனைகளாக ஒலித்தது. அந்தச் சொல்லுக்குத்தான் எத்தனை சக்தி !

வெறும் சொல், மந்திரச் சொல்லாக அல்லவா மாறிவிட்டது. எத்தனை வேகத்துடன், எவ்வளவு உணர்ச்சியுடன், எவ்வளவு சக்தியைத் தாங்கிக் கொண்டு அந்த வட்டாரம் முழுவதையும் ஆட்கொண்டு விட்டது !

''வந்தே மாதரம், மகாத்மாகாந்திக்கு.... ஜே....!'' என்ற கோஷம் அதிர்ந்த போது, அந்த ஒலி திருநெல்வேலியின் மூலை முடுக்குகளிலெல்லாம் நுழைந்து, ஒவ்வோர் உள்ளத்திலும் புகுந்து குறுகுறுத்து விட்டதே ! கூட்டத்தோடு வந்த போலீஸ்காரர்களைக்கூட அந்த மந்திர ஒலி மயங்க வைத்திருக்க வேண்டும். அவர்களை அறியாமலேயே அவர்கள் வாயும், ''வந்தே மாதரம்'' என்று கூட்டத்தோடு சேர்ந்து முனகியது. கேட்டவரையெல்லாம் மயக்கும் அந்தக் கோஷத்தின் ஒலி, பெருகிக் கொண்டே இருந்தது. கடல் அலையின் பேரிரைச்சலைப் போல் திரிவேணியிடமிருந்து கிளம்பி, ஊர்வலத்தின் கடைசி வரை சென்று மோதியது.

திரிவேணியின் பார்வை தற்செயலாக உயர்ந்த போது, மாடியில் நின்று கொண்டிருந்த ரங்கமணியைப் பார்த்து விட்டாள். ஒரு கணம் அவள் பார்வை அவனிடம் நிலைகுத்தி நின்றது. அவள் இதழில் புன்னகை இலேசாக அரும்பி மறைந்தது. அவள் நடைகூடத் தடைப்பட்டது போல்தான் இருந்தது. எல்லாம் ஒரு கணம்தான். பிறகு, அவள் பார்வை அவன் இருந்த பக்கம் திரும்பவேயில்லை. அவனைக் கடந்து அவள் வெகுதூரம் சென்று விட்டாள். அவள் உருவம் மறைந்து விட்டது. ஆனால் அவள் பிடித்திருந்த கொடி மட்டும் அவன் கண்களில் வெகுதூரம் வரை தெரிந்துகொண்டே இருந்தது.

கூட்டத்தின் முன்னணியில் அத்தையும் இந்திரரும் சென்று கொண்டிருந்ததை ரங்கமணி கவனித்தான். அத்தை ஆவேசத்துடன் கோஷமிட்டுக் கொண்டு செல்வதை ரங்கமணி வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றான்.

திரிவேணி வெகுதூரம் சென்றுவிட்டாள். ஆனால் ஊர்வலம், இன்னும் ரங்கமணி நின்று கொண்டிருந்த இடத்தை விட்டுக் கடந்தபாடில்லை. அவ்வளவு கூட்டம்! ரங்கமணி தன்னையும் அறியாமல் ஏதோ முனகிக் கொண்டிருந்தோம் என்பதை உணர்ந்தான்.

அவன் உதடுகள், ''வந்தே மாதரம், மகாத்மா காந்திக்கு ஜே....!'' என்றுதான் முனகிக் கொண்டிருந்தன. அந்தக் கோஷம் அவனையும் அல்லவா மயக்கிவிட்டது ! 'மகாத்மா காந்திக்கு ஜே!' என்றுகூட வாய் முனகிவிட்டதே! அவனுக்குத் தன் மீதே கோபம் மூண்டது. காந்திக்கு ஜே சொல்லியிருக்கிறோம் என்பதை உணர்ந்த போது தன் நாக்கையே கடித்துக் கொண்டான்.

ஆனால் ஊர்வலத்தின் கோஷம், இன்னும் அவன் காதில் மோதிக் கொண்டுதான் இருந்தது. ஊர்வலம் அவன் கண்ணுக்கெட்டாத தூரம் சென்ற பிறகுதான் அவன் மாடியிலிருந்து கீழே இறங்கினான்.

தெருவில் வந்து நின்றதும், எங்கு போவது என்று தெரியாமல் திகைத்து நின்றான். அந்தத் தெரு வெறிச்சோடியிருந்தது. சற்றுமுன் அதன் வழியாக ஆயிரக்கணக்கானவர்கள் சென்றார்கள் என்பதையே நம்ப முடியாத அளவுக்கு அந்தத் தெரு ஓய்ந்து கிடந்தது. கடைகள் எல்லாம் அடைக்கப்பட்டிருந்தன. அந்த இடத்தில் மயான அமைதி சூழ்ந்திருந்தது. இதென்ன, ஊரே திரண்டு திரிவேணியின் பின்னே போய் விட்டதா என்று வியந்து கொண்டு தெருவிலேயே நின்றான் ரங்கமணி.

இந்தக் கூட்டத்தை இன்னும் சிறிது நேரத்தில் போலீஸ்காரர்கள் விரட்டியடிப்பார்கள். தடியடிப் பிரயோகத்தில் தொண்டர்களின் மண்டை பிளக்கும், இரத்த ஆறு ஓடும், வந்தே மாதரம் கோஷித்த இனிய வாய்கள் வலியால் அலறும்.

இப்படி நினைத்ததும் ரங்கமணியின் நரம்புகள் புடைத்தன. பன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன் நடந்த ஒரு தடியடிப் பிரயோகம் அவன் நினைவில் நிழலாடியது. அந்த நினைவினால் அவன் இரத்தம் கொதித்தது. கண்கள் சிவந்தன. பல்லை நறநற வென்று கடித்தான். அந்த உணர்விலிருந்து விடுபட அவன் கால்கள் ஊர்வலம் சென்ற திக்கை நோக்கின. ஊர்வலம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் அதன் கோஷம் கேட்டுக் கொண்டிருந்தது.

ரங்கமணியின் மனம் அமைதியின்றித் தவித்தது. இந்த மறியலைப் போலீஸ் தடியடி செய்து கலைக்கப் போகிறது என்ற எண்ணம் அவன் மனத்தில் புரண்டு குமைந்தது. சஞ்சலத்துடன் அச்சுக் கூடத்துக்கு வந்தபோது உள்ளே சர்தார் சொக்கலிங்கம்பிள்ளை மட்டுந்தானிருந்தார். அச்சுக் கூடத்தில் மற்றத் தொழிலாளர்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். அச்சு இயந்திரம், இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தது. சொக்கலிங்கம் பிள்ளை தம்முடைய அறையில் அமைதியின்றி உட்கார்ந்திருந்தார்.




GWALIOR

*Madras Office :* Post Box No. 1397, 35/37, Thambu Chetty St., Madras-1. Telephone: 24

ரங்கமணியைக் கண்டதும், ''என்ன, ஊர்வலம் போய் விட்டதா ?'' என்று கேட்டார். ரங்கமணி தலையை ஆட்டினான்.

''தடியடியில் கலகம் வந்துவிடக் கூடாது. கூட்டம் பேசாமல் கலைந்து சென்று விட்டால் நல்லது. என்ன நடக்குமோ !'' என்றார் சர்தார். அவருடைய பேச்சில் கவலையின் அழுத்தம் இருந்ததை உணர்ந்தான் ரங்கமணி.

''திரிவேணிதான் தலைமை தாங்கிச் செல்கிறாள்'' என்றான் ரங்கமணி.

''அதனால்தானே பயமாயிருக்கிறது. பிடிவாதமாக மறியல் செய்வாள். போலீஸ்காரர்களை அலட்சியப்படுத்திக் கோபத்தை மூட்டி விடுவாள். கொஞ்சமும் பயமே இல்லாமல் வளர்ந்து விட்டாள்'' என்று கூறி நீண்ட பெருமூச்சு விட்டார். அதில் பாசம் பொங்கி நிறைவதை ரங்கமணி உணர்ந்தான். அடேயப்பா, பயங்கரமான பாரத மாதா சங்கத்தின் திருநெல்வேலி கிளைக்குத் தலைமை தாங்கும் அஞ்சாநெஞ்சரான சர்தார் சொக்கலிங்கம்பிள்ளையும் பாசத்தினால் எவ்வளவு நெகிழ்ந்து விடுகிறார் ! பயம் கூட உள்ளத்தில் புகுந்துவிடுகிறதே என்று எண்ணி வியந்தான் ரங்கமணி.

அச்சுக்கூடத் தொழிலாளர்கள் ஒவ்வொருவராக வேலை முடிந்து வெளியேறிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் அச்சுக்கூடத்துக்குள் ரங்கமணியும் சர்தாரும்தான் இருந்தார்கள். தொழிலாளர்கள் அனைவரும் சென்ற பிறகு ரங்கமணி வெளிக் கதவை அடைத்துத் தாழிட்டுவிட்டு உள்ளே வந்து சர்தாரின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

இரவு ஏழு மணி இருக்கும். காலிங்பெல் அவர்களுடைய சங்கேத முறைப்படி விட்டு விட்டு அடித்தது. ரங்கமணி எழுந்து சென்று சன்னல் இடுக்கு வழியாகப் பார்த்தான். வாசலில் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்கொளியில் சோமு நின்று கொண்டிருப்பது தெரிந்தது. ரங்கமணி கதவைத் திறந்ததும் பரபரப்புடன் உள்ளே ஓடி வந்தான் சோமு. வாசற்கதவை அடைத்துவிட்டு ரங்கமணியும் உள்ளே விரைந்தான்.

''என்ன சோமு, என்ன நடந்தது ?''— பரபரப்புடன் கேட்டுக் கொண்டே எழுந்தார் சொக்கலிங்கம்பிள்ளை.

''தடியடியில் திரிவேணிக்குத் தலையில் காயம்'' என்றான் சோமு.

''ஆ....!'' — சர்தாரும் ரங்கமணியும் ஒரே சமயத்தில் கூவினார்கள்.

''பயமில்லை. ஆபத்து ஒன்றுமில்லை. அதிர்ச்சியில் மயங்கி விட்டாள். தலையில் மட்டும் இலேசாகக் காயம்.''

''இப்போது எங்கே இருக்கிறாள்?''

''அதுதான் தெரியவில்லை.''

சர்தார் சொக்கலிங்கம்பிள்ளை உடனே போனை எடுத்து மருத்துவ நிலையத்துடன் பேசினார். திரிவேணி அங்கு இல்லை என்று தகவல் வந்தது. பிறகு வீட்டுக்குப் பேசினார். அங்கும் பதில் இல்லை.

''என்ன நடந்தது?'' — சர்தார் பரபரப்புடன் கேட்டார். சோமு சொன்னான்: ''ஊர்வலம் டவுனுக்குப் போய், நெல்லையப்பர் கோயிலை அடைந்து, கீழ ரத வீதி வழியாக ரயில்வே ரோட்டுக்கு வந்து கள்ளுக்கடை வாசலில் நின்றது. கள்ளுக்கடை கண்டிராக்டர் இருக்கிறாரே நவமணி அவர் கள்ளுக்கடை வாசலில் நின்று கொண்டிருந்தார். கடைக்குள்ளே யாரும் போக முடியாதபடி கூட்டம் வாசலை மறித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டது.''

''நவமணி ஒன்றும் சொல்லவில்லையா ?'' என்று கேட்டார் சர்தார்.

''அவர் ஒன்றும் பேசவில்லை. ஒன்றிரண்டு வாடிக்கைக்காரர்கள் கடைக்குள் இருந்தார்கள். அவர்களும் கூட்டத்தைப் பார்த்து விட்டுப் பயந்து போய்க் கடையை விட்டுக் குடிக்காமலேயே வெளியே வந்துவிட்டார்கள்......''

''பிறகு?''

''சிவானந்தம், போலீஸ் லாரியில் போலீஸ் பட்டாளத்தோடு வந்து இறங்கினார். கூட்டத்தைக் கலைந்து போகும்படி சொன்னார். பலிக்கவில்லை. இந்தச் சமயத்தில் அந்த ராக்ஷஸி இருக்கிறாளே, அவன் மனைவி கமலா, அவள் ஒரு காரில் வந்து, மேட்டில் சற்றுத் தள்ளிக் காரை நிறுத்திக் கொண்டு உள்ளிருந்தே கவனித்துக் கொண்டிருந்தாள். இந்தச் சமயத்தில் கூட்டத்திலிருந்து போலீஸ் மீது சிலர் கல்லெறியத் தொடங்கி விட்டார்கள். திரிவேணி அமைதியாக இருக்கும்படி கத்திப் பார்த்தாள். ஒன்றும் நடக்கவில்லை. ஒரு பெரிய கல் கமலாவின் காரின் பக்கத்திலும் போய் விழுந்தது. தீக்ஷிதர் கூட்டத்துக்குள் நுழைந்து அமைதிப்படுத்தப் பார்த்தார். ஒன்றும் பலிக்கவில்லை. மழை மாதிரி கல் பொழியத் தொடங்கி விட்டது. கூட்டத்தில் ஒரே குழப்பம். கள்ளுக்கடைக் கூரையெல்லாம் பஞ்சாகப் பறந்து விட்டது. சிவானந்தத்தின் மனைவி, அவரிடம் ஏதோ சைகை காட்டினாள். உடனே கூட்டத்தை அடித்து விரட்டும்

---

## யாரோ, இவர் யாரோ....?



விளையாட்டுப் பருவத்துப் பையன், கையிலே இத்தனை பெரிய வாத்தியத்தை இத்தனை ஒயிலாக வைத்துக் கொண்டிருக்கிறேனே. இவர் யார் என்று தெரிகிறதா? கட்டாயம் உங்களால் ஊகிக்க முடியாது. ஆகவே 87-ம் பக்கத்தைப் புரட்டிப் பார்த்துவிடுங்கள்.

யது. உத்தரவிட்டு விட்டு மனைவியின் பக்கத் தில் போய் நின்று கொண்டார் சிவானந்தம். போலீஸ் அடிக்கத் தொடங்கியதும் கூட்டத் தில் ஒரே குழப்பம். போலீஸார் கண்மண் தெரியாமல் அடித்துக் கொண்டிருந்தார்கள். பாவம், ஒரு கிழவரின் தோள்பட்டை எலும்பு முறிந்துவிட்டது. அவர் விழுந்த பிறகுகூட ஒரு போலீஸ்காரன் அடித்தான். அந்தப் போலீஸின் கையை எட்டிப் பிடித்தாள் திரிவேணி. அவனே தன்னைப் பிடித்தது யார் என்று பார்க்காமல் திரும்பி ஓங்கித் திரிவேணி யையும் தாக்கினான். மண்டையில் ஓர் அடி விழுந்தது......''

''பலத்த அடியா?'' — சர்தார் குறுக்கிட்டுக் கேட்டார்.

''நல்ல வேளை. திரிவேணி ஒரு கையால் தடுத்தாள். இல்லையென்றால் மண்டை பிளந்திருக்கும். கையில் நல்ல அடி விழுந்திருக்க வேண்டும்.''

''அப்புறம்?'' படபடப்புடன் கேட்டார் சர்தார்.

''அடி தலையில் பட்டதும் திரிவேணி, கீழே விழப் போனாள். அப்போதும் போலீஸ் காரன் அவளை அடிக்கத்தான் கம்பை ஓங்கினான். நான் பதறிப் போனேன். நம்ம பித்துக்குளி வெங்கு இருக்கிறானே, அவன் எங்கிருந்தோ ஓடி வந்து போலீஸ்காரன் கையைத் தட்டி விட்டான். கம்பு தூரத்தில் போய் விழுந்தது. போலீஸ்காரனுக்கு அசாத்திய கோபம். இதை யெல்லாம் கவனிக்காமல் திரிவேணியைத் தோளில் தூக்க முயன்று கொண்டிருந்தான் வெங்கு. போலீஸ் காரன் ஆவேசம் வந்தவனைப் போல் பித்துக்குளி மீது பாய்ந்தான். அப்போது தான் ஓர் அதிசயம் நடந்தது......''

''என்ன?''

''யாரோ ஒருத்தன் தலையிலே துண்டைத் தலைப்பாகை கட்டிக் கொண்டிருந்தான். திடீரென்று ஒரு கம்பால் அந்தப் போலீஸ் காரன் தலையில் ஒரு போடு போட்டான். அவ்வளவுதான். போலீஸ்காரன் அந்த இடத்திலேயே விழுந்து விட்டான்''

''வெங்கு அப்புறம் என்ன செய்தான்?'' ரங்கமணி ஆவலோடு கேட்டான்.

''திரிவேணியைத் தோளில் தூக்கிக் கொண்டு கூட்டத்தை விட்டு விலகிப் போனதைப் பார்த்தேன். அவனைத் தொடர்ந்து அத்தையும் தீக்ஷிதரும் போவதையும் பார்த்தேன். அப்புறம் அவர்கள் எங்கே போனார்கள் என்று தெரியவில்லை. போலீஸ் காரன் மண்டையில் அடித்தானே அவன் யார் தெரியுமா? நம்ம காசிலிங்கம்! கூர்ந்து பார்த்தேன். ஒரு ஒட்டு மீசை வைத்திருந்தான். ஒரு துண்டைத் தலையிலே கட்டியிருந்தான். இன்னொரு போலீஸ்காரனுக்கு முழங்கை எலும்பே முறிந்துவிட்டது. நம்ம மீனாட்சிநாதன் செய்த வேலை அது. அவனும் மாறு வேஷத்தில் வந்திருந்தான்.''

''நீ எங்கேயிருந்து பார்த்தாய்?''—ரங்கமணி ஆவலுடன் கேட்டான்.

''மருத மரத்தின் மேலே ஏறி உட்கார்ந்து கொண்டேன்.''

''இந்தப் பித்துக்குளிக்கு இவ்வளவு தைரியம் எங்கே இருந்து வந்தது?'' என்று வியந்தார் சர்தார் சொக்கலிங்கம்.

''கூட்டத்தில் கோழையும் வீரனாகிவிடுவான் போலிருக்கிறது'' என்றான் ரங்கமணி.

''நல்ல வேளை! பித்துக்குளி இல்லையென்றால் திரிவேணியின் கதி என்ன ஆகியிருக்குமோ!'' என்றான் சோமு. இதைக் கேட்டு சர்தாரின் உடல் சிலிர்த்தது. அவருக்கு உடனே திரிவேணியைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. ரங்கமணியும் அதே நிலையில் தான் இருந்தான்.

இந்தச் சமயத்தில் போன் மணி அடித்தது. ரங்கமணி போனை எடுத்துப் பேசினான்.

''ஹலோ.... யாரு? அத்தையா? திரிவேணிக்கு எப்படி இருக்கிறது?....''

ரங்கமணியிடம் இருந்த போனை பரபரப்புடன் வாங்கி சர்தார் பேசினார்.

''ஒன்றுமில்லையே! சரி, உடனே வருகிறேன். கூடவே ரங்கமணியையும் கூட்டி வருகிறேன். கொஞ்ச நேரத்தில் வந்துவிடுவோம்.....'' — போனைக் கீழே வைத்து விட்டுப் பெருமூச்சு விட்டார்.

''அடி ஒன்றும் பலமில்லையாம். அதிர்ச்சி தான் என்று டாக்டர் சொன்னாராம். நேரே டாக்டர் வீட்டுக்குப் போய்விட்டு இப்போது தான் வீட்டுக்கு வந்திருக்கிறார்களாம். சரி வா! நாம் போகலாம். சோமு, நீயும் வருகிறாயா?'' என்று கேட்டார் சொக்கலிங்கம்பிள்ளை. சோமு தலையை அசைத்தான். மூவரும் சிந்துபூந்துறையை நோக்கிக் கிளம்பினார்கள்.

சொக்கலிங்கம்பிள்ளையின் வீடிருந்த தெரு முனையில் வந்த போதே அவர் வீட்டின் முன்பு சத்தியாக்கிரகத் தொண்டர்கள்பெருங் கூட்டமாகக் கூடியிருந்தார்கள். திரிவேணிக்குக் காயம் பட்டுவிட்ட செய்தி நொடிப் பொழுதில் ஊரெல்லாம் பரவி விடவே, அவளைக் காணத் தொண்டர்கள் கூடிவிட்டார்கள். தீக்ஷிதர் வாசலில் நின்றுகொண்டு கூட்டத்தில் உள்ளவர்களை ஒவ்வொருவராகத் திரிவேணியைப் பார்க்க வீட்டுக்குள் அனுப்பிக் கொண்டிருந்தார். கூட்டத்தைப்பார்த்து ஜிம்மி உரக்கக் குரைத்துக் கொண்டிருந்தது. கட்டியிருந்த சங்கிலியை அறுத்துக்கொண்டு ஓட முயல்வது போல் பாய்ந்து பாய்ந்து குரைத்தது.

சொக்கலிங்கம்பிள்ளை பரபரப்புடன் திரிவேணி படுத்திருந்த அறைக்குள் நுழைந்தார். ரங்கமணியும் சோமுவும் தொடர்ந்தார்கள். விசாலமான அறையின் நடுவில் கட்டிலில் திரிவேணி படுத்திருந்தாள். தலையிலும் கையிலும் கட்டுகள் போடப்பட்டிருந்தன. தலைப் பக்கத்தில் வெங்கு நின்றுகொண்டிருந்தான். பக்கவாட்டில் காசிலிங்கமும் மீனாட்சிநாதனும் அத்தையும் நின்று கொண்டிருந்தார்கள். பார்க்க வந்த தொண்டர்கள் அறைக்குள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தார்கள்.

சர்தாரையும் ரங்கமணியையும் பார்த்தவுடன் திரிவேணியின் உதட்டில் புன்னகை அரும்பியது. சர்தாரின் கண்கள் கலங்கின.

''வலி அதிகமாயிருக்கிறதா?'' — பரிவோடு கேட்டார் சர்தார். இல்லையென்று தலையை அசைத்தாள் திரிவேணி. (தொடரும்)

● பெரிய பெரிய இலக்கியகர்த்தாக்கள்கூட அடைய முடியாத அளவு புகழையும், செல்வத்தையும் பத்துக்கும் குறைந்த நாவல்களின் மூலம் சம்பாதித்துக் குவித்துவிட்ட சாமர்த்தியசாலி இயான் ஃப்ளெமிங். ஜேம்ஸ் பாண்டின் சிருஷ்டிகர்த்தாவான இவரைப் பற்றி, 'தங்கப் பேனா உடையவர்' என்ற தலைப்பிலே புத்தகம் ஒன்று வெளிவந்திருக்கிறது. அதிலிருந்து சில சுவையான பகுதிகள் இதோ:

☐ இயான் ஃப்ளெமிங்குக்கு மீசையைக் கண்டால் பிடிக்கவே பிடிக்காது. மீசைக்காரர்களை அவர் நம்பவே மாட்டார். ''ஒருத்தருடைய மீசை எவ்வளவுக் கெவ்வளவு பெரிதாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்த ஆசாமியிடம் கள்ளத்தனம் இருக்கிறது என்பதுதான் என் எண்ணம்.'' என்பார். இந்தக் காரணத்தாலேயே, தம் நாவல்களில் வரும் வில்லன்கள் எல்லோரையுமே அடர்ந்த மீசைக்காரர்களாக வர்ணிப்பாராம்!

☐ ஃப்ளெமிங்கின் மனைவிக்கு கணவரின் எழுத்து என்றால் ஒரே கசப்பு. அவரது நாவல்களைப் பற்றி அந்தப் பெண்மணியின் விமரிசனம் ''படுமோசமான 'த்ரில்லர்'கள்!''

☐ காலஞ்சென்ற அமெரிக்க ஜனாதிபதி கென்னடிக்கு ஃப்ளெமிங் நாவல்கள் என்றால் உயிர். வெளி நாடுகளுக்குப் போகும் போதெல்லாம் ஜேம்ஸ்பாண்ட் நாவல் ஒன்றையும் கையோடு எடுத்துச் செல்வாராம் கென்னடி. அவர் கொலை




செய்யப்படுவதற்கு முதல் நாள் இரவுகூட, ஜேம்ஸ் பாண்ட் நாவல் ஒன்றைப் படித்துக்கொண்டிருந்தாராம். இதிலே ஆச்சரியப்படத்தக்க இன்னொரு விஷயம் என்னவென்றால் கென்னடியைச் சுட்டுக் கொன்ற லீ ஆஸ்வால்டும் அந்த இரவில் ஃப்ளெமிங் நாவல் ஒன்றைப் படித்திருக்கிறானாம்!

☐ 'உள்ளதை உள்ளபடியே எழுதுவதுதான் ஃப்ளெமிங்கின் நடை. அவரது எழுத்தில் உள்ளர்த்தங்களோ, இரட்டை அர்த்தமோ இருக்கவே இருக்காது. அது மட்டுமல்ல. அவர் தம் நாவல்கள் எதிலுமே எத்தகைய திடுக்கிடும் கட்டத்திலும் சரி, ஆச்சரியக் குறியைப் பயன்படுத்தியதே கிடையாது. இது சிலருக்குப் பெருங் குறையாகத் தோன்றவே, ஃப்ளெமிங்குக்கு இந்த விஷயத்தைச் சுட்டிக் காட்டிக் கடிதம் எழுதினார்கள். அடுத்த நாவலிலேயே அந்தக் குறையைப் போக்கி விட்டார். ஃப்ளெமிங் — நிறைய ஆச்சரியக் குறிகளை ஆங்காங்கே தூவி வைத்ததன் மூலம். ஆனால்

அமெரிக்காவிலிருந்து, "என்ன இது! புத்தகம் பூராவும் ஆச்சரியக் குறிகள் மயமாக இருக்கிறதே!" என்று நிறைய வாசகர்கள் புகார் சொல்லவும், அடுத்த பதிப்பில் அவற்றையெல்லாம் நீக்கிவிட்டார்.

☐ ஃப்ளெமிங்கின் அறை தும்பு தூசி எதுவுமின்றி எப்போதும் பளபளவென்று காட்சி தரும். மேஜை மீது வெகுநாட்கள் வரை பித்தளையாலான நெப்போலியன் சிலை ஒன்றை வைத்திருந்தார்.





**எஸ். தேவகி**

வந்து பார்க்கிறவர்கள் எல்லோரும், "அதை ஏன் இங்கே வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்பார்கள். "சும்மாதான்!" என்று பதில் அளிப்பார்! அவருக்கே இந்தப் பதிலைச் சொல்லிச் சொல்லி அலுப்புத் தட்டவே, அந்தச் சின்னஞ் சிறு சிலையைத் தூக்கித் தூர எறிந்துவிட்டார்.

அறைச் சுவர்களிலே கால், அரை, முக்கால் நிர்வாண அழகிகளின் படங்கள் தொங்கிக் கொண்டிருக்கும்; வருகிறவர்களின் பார்வையைப் பறிக்கும்படி. எல்லாம் அவருடைய நாவல்களில் அமெரிக்கப் பதிப்புகளுக்காக ஓவியர்கள் வரைந்தவை. "இவர்களெல்லாம் யார்?" என்று யாராவது கேட்டால் 'தமக்கு மிகவும் தெரிந்த—வேண்டிய—பெண்கள்!' என்பார் ஃப்ளெமிங்.

☐ மிகவும் தயக்கத்துடன்தான் ஃப்ளெமிங் எழுத ஆரம்பித்தார். ஆரம்பத்தில் தாம் எழுதியதை யாருக்கும் படித்துக்கூடக் காட்டாமல் — தாமே கூடத் திருப்பிப் படிக்காமல் அப்படியே மடித்து வைத்து விடுவார். தாழ்வு மனப்பான்மைதான் இதற்குக் காரணம். 'நாம் எழுதியதைப் படித்துவிட்டு, நண்பர்கள் என்ன சொல்



ஜேம்ஸ்பாண்ட் சிருஷ்டிகர்த்தா: இயான் ஃப்ளெமிங்

வார்களோ, எப்படி விமரிசிப்பார்களோ!' என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பாராம்.

□ தினசரி மூன்றரை மணி நேரத்துக்குக் குறையாமல் எழுதுவார் ஃப்ளெமிங். ஆறு அல்லது எட்டுப் பக்கங்கள் எழுதி ஆனதும் அவற்றை அப்படியே ஒரு ஃபைலில் போட்டு வைத்துவிடுவார். எழுதியதைத் திருப்பிப் படிப்பது அவருடைய வழக்கமில்லையாதலால் ஒவ்வொரு அத்தியாயத்தின் கடைசி வாக்கியம் இன்னதென்று மட்டும் ஒரு தாளில் குறித்து வைத்துக் கொள்வார்.

□ ஐரோப்பாவில் ஒரு முறை பிரயாணம் செய்தபோது, ஓர் இரவுக் 'கிளப்'பைச் சேர்ந்த நடன மாது ஒருத்தி, உடம்பு முழுவதும் தங்க வர்ணத்தைப் பூசிக் கொண்டு நடனமாடியதைப் பார்த்தாராம் ஃப்ளெமிங். சருமத் துவாரங்களை வர்ணம் அடைத்து விட்டதால் மூச்சுத் திணறி இறந்து விட்டாள் அந்த நடன மாது. இந்தச் சம்பவம் ஃப்ளெமிங்கின் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. இதிலிருந்துதான் 'கோல்ட் ஃபிங்கர்' என்ற நாவலுக்கான கருவே அவருக்குக் கிடைத்ததாம்.

□ கோல்ட் ஃபிங்கரில் அமெரிக்க நாட்டின் தங்கக் களஞ்சியமான 'போர்ட் நாக்ஸ்' என்னுமிடத்தைப் பற்றிய விரிவான வர்ணனை இருக்கிறது. அதை எழுதுவதற்காகப் ஃப்ளெமிங் பல வருடங்கள் நிறையப் பத்திரிகைகளையும் புத்தகங்களையும் புரட்டித் தகவல் சேகரிக்க வேண்டியிருந்ததாம். அமெரிக்க ஒற்றர் இலாகாவுக்கு இவர்மீது ஒரு கண்கூட இருந்ததாம். மனிதர் எங்கேயாவது தங்கக் களஞ்சியத்தைச் சூறையாடுவதற்கான முயற்சிகளில் இறங்கிவிடுவாரோ என்று!

□ லண்டன் மீது ஜெர்மனி ஓயாமல் குண்டு வீச்சு நடத்திக் கொண்டிருந்த காலம். ஒரு நாள் இரவு டெல்மர் என்ற நண்பருடன் ஒரு ஹோட்டலுக்குச் சென்று மதுவருந்திக் கொண்டிருந்தார் ஃப்ளெமிங். திடீரென்று அந்தக் கட்டடத்தின் மீதே ஒரு குண்டு விழுந்து கட்டடத்தின் கூரையைப் பெயர்த்தெறிந்து விட்டது. அப்போதும் சிறிதுகூடப் பதற்றப்படாமல் ஷாம்பெயினை ரசித்துக் கொண்டிருந்தாராம் ஃப்ளெமிங்! மதுவென்றால் அத்தனை உயிர்!

□ ஜமைக்காவில் தங்கியிருந்தபோது ஃப்ளெமிங்குக்கு ஓர் அதிசயப் பிராணியின் நட்புக் கிடைத்தது. அது ஓர் ஆக்டோபஸ். அந்தப் பிராணி இருக்குமிடத்துக்கு அவர் செல்லும் போதெல்லாம் அது தரை மட்டத்துக்கு மேலே தலையை நீட்டி வரவேற்புக் கூறுமாம். அவர் பார்த்து மகிழும்படி எட்டுக் கால்களையும் ஆட்டி ஆட்டி நடனமாடுமாம். 'புஸ்ஸி காலோர்' என்று அதற்குப் பெயர் சூட்டியிருந்தார் ஃப்ளெமிங்.

ஒரு நாள் மதிய உணவுக்குப் பிறகு ஆக்டோபஸைப் பார்க்கப் போனார் ஃப்ளெமிங். அதை ஏனோ காண முடியவில்லை. வருத்தத்துடன் வீடு திரும்பியவர், சமையற்காரியிடம் சொல்லி வருத்தப்பட்டார்.

''அடடா!'' என்று கையை உதறினாள் சமையற்காரி.

''என்ன விஷயம்?'' என்று கேட்டார் ஃப்ளெமிங்.

''இன்றைக்குப் பகலுணவின்போது உங்களுக்குப் புதியதொரு அயிட்டம் சமைத்துப் பரிமாறியிருந்தேனல்லவா?..... நீங்கள்கூட நன்றாக இருக்கிறதென்று சொன்னீர்களே?''

''ஆமாம்...''

''உங்கள் நண்பன் — ஆக்டோபஸ் தான் அது!....''

இறந்துபோன ஆக்டோபஸ்ஸை இறவாப் பாத்திரமாக ஆக்கி விட்டார் ஃப்ளெமிங். தமது நாவல் ஒன்றில் வருகிற பெண்மணி ஒருத்திக்குப் 'புஸ்ஸி காலோர்' என்று பெயர் சூட்டியதன் மூலம்.

□ கானன்டாயில், ஷெர்லாக் ஹோம்ஸ் இறந்து விட்டதாக ஒரு கதை எழுதிவிட்டு அப்புறம் பொதுஜன வேண்டுகோளுக் கிணங்க, ஹோம்ஸ் திரும்பி வந்ததாக எழுதினாரல்லவா? இதே மாதிரி திட்டம் போட்டு, ஜேம்ஸ் பாண்டைச் சாகடித்து நாவல் ஒன்று எழுதினார் ஃப்ளெமிங். ஆனால் அது பிரசுரமாவதற்கு முன் அந்த மாபெரும் ரகசியத்தை 'டெய்லி ஸ்கெட்ச்' என்ற லண்டன் பத்திரிகை பெரிதாக வெளியிட்டுக் குட்டை உடைத்து விட்டது. ஃப்ளெமிங்குக்குக் கடிதங்களாக வந்து குவிந்தன, பாண்ட் இறந்தது உண்மைதானா என்று கேட்டு! ஃப்ளெமிங் இதற்காக 'டெய்லி ஸ்கெட்ச்' மீது வழக்குத் தொடுத்து வெற்றியும் பெற்றார்!

□ லண்டனில் ஸோதேபி என்று பிரபல ஏலக் கம்பெனி ஒன்று இருக்கிறது. விலை உயர்ந்த கலைப் பொருட்களையெல்லாம் கூட அங்கே ஏலம் போடுவார்கள். அந்தக் கம்பெனியின் வருடாந்தர அறிக்கைக்கென 'ஸ்பெஷலா'க ஒரு கதை எழுதினார் ஃப்ளெமிங். வழக்கமாக ஏலம் போடுகிற பீட்டர் வில்ஸன், விலையுயர்ந்த நகைகளை ஏலம் போடும் போது கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்திருந்த ஒரு மோசக்காரனை, ஜேம்ஸ் பாண்ட் எப்படிக் கண்டுபிடித்து அம்பலப்படுத்தினார் என்பது கதை.

இந்தக் கதை பிரசுரமானதும் ஃப்ளெமிங்குக்கு ஒரு கடிதம் வந்தது. அதிலே, ஃப்ளெமிங் எந்த ஒரு முக்கியமான விஷயத்தைக் கோட்டை விட்டு விட்டாரென்பது சுட்டிக் காட்டப்பட்டிருந்தது. பீட்டர் வில்சன் ஓவியங்களையும் சிற்பங்களையும் ஏலம் விடுவாரே தவிர, நகைகளை ஏலம் விட மாட்டாராம்: அதற்கு இன்னொருத்தர் இருக்கிறார் என்ற உண்மையைக் கண்டு பிடித்து எழுதியிருந்த அந்த ரசிகர் ஜேம்ஸ் பாண்டை விடக் கெட்டிக்காரர்தானே?

□ ஃப்ளெமிங் இறக்கும்போது அவர் விட்டுச் சென்ற சொத்துக்களின் மதிப்பு: 3,02,147 பவுன்கள். மரண வரி, சொத்து வரி, எல்லாம் போக அவர் குடும்பத்துக்குக் கிடைத்தது: 91,781 பவுன்கள்!

BENTEX NOW BRINGS YOU STRAPS WITH

ENCHANTING

# EMBROIDERY

ON BEWITCHING BLACK

OR CATCHY COLOURS

Especially for the ladies, Bentex brings beautiful inter-woven embroidery on washable nylon straps-Go exotic with bewitching black or match any ensemble with colourful embroidered straps - GET A PACK NOW

In one pack — with a range of delicate embroidery on black or a variety of colours




Bentex



with a special easy to fix, lock-clip

# மேக்-அப் நாடகம்






குமாரி ஹேமா

## 1

[நாடகத் திரை விலகுகிறது. பாத்திரங்கள் யாரும் பிரவேசிக்காமலேயே குரல் மட்டும் கேட்கிறது. ஒன்று ஆண் குரல்; மற்றொன்று பெண் குரல்.]

ஆண் குரல்: இந்த உலகத்தைப் படைத்தது யார்?

பெண் குரல்: ஆண்டவன்.

ஆ. கு: அவனைப் படைத்தது...?

பெ. கு: மனிதன்!

ஆ. கு: என்ன?

பெ. கு: ஆச்சரியமாயிருக்கிறதா? இந்த உலகத்தில் மனிதன் என்று ஒரு பிராணி மட்டும் தோன்றவில்லையானால் — ஒரு திருத்தம் — ஆண்டவன் மனிதனைத் தோற்றுவிக்கவில்லையென்றால், அவனைப் பற்றி எந்த ஜீவராசிக்குத்தான் தெரிந்திருக்கும்? அதனால்தான்...

ஆ. கு: ஆண்டவனைப் படைத்தது மனிதன் என்கிறாயே, அவனை நீ கண்டிருக்கிறாயா?

பெ. கு: ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் விவேகானந்தர் கேட்ட கேள்வியை அல்லவா என்னிடம் கேட்கிறீர்கள்! அருவமான ஆண்டவனை நான் காணவில்லை. ஆனால்...

ஆ. கு: ...என்ன, சொல்லு!

பெ. கு: உருவம் பெற்றுப் பல லீலைகள் புரிந்த ஆண்டவனைச் சிற்பமாகக் கண்டிருக்கிறேன், சித்திரமாகக் கண்டிருக்கிறேன். ஏன், திரைப் படங்களில் 'திருவிளையாடல்'களாகக் கூடக் கண்டிருக்கிறேன். பல நூல்களும் பறைசாற்றுகின்றன.

ஆ. கு: அவன் இப்படியெல்லாம் திருவிளையாடல்கள் புரியக் காரணம்?

பெ. கு: உலகத்தை நாடக மேடையாக்க!

ஆ. கு: நாடகத்தை ஓர் உலகமாக்க என்று சொன்னால் பொருந்தாதோ?

பெ. கு: கட்டாயம் பொருந்தும். ஒரு கிழவிக்காகப் பிட்டுக்கு மண் சுமந்தது, மாணிக்கவாசகருக்காக நரியைப் பரியாக்கியது — இது போன்ற இன்னோரன்ன பலவும் அவன் ஆடிய நாடகங்கள்தானே? — சொல்லப் போனால் அவனது இந்த நோய் மனிதனையும் பற்றிக் கொண்டது. ஒரு கிழவன் குமரனாக ஆசைப்பட்டான்; ஒரு குமரி கிழவியாக ஆசை கொண்டாள். இப்படி ஆசைப்பட்டபடி இரண்டொருவர் வாழ்ந்து காட்டியதும் உண்டு.

ஆ. கு: என்ன புதிர் போடுகிறாய்?

பெ. கு: புதிரொன்றும் போடவில்லை. மேடை ஏறியதும் நடிகனுக்கு வசனங்கள் மறந்து விடுவது போல், உங்களுக்கு உலகத்து நிகழ்ச்சிகள் அனைத்துமே மறந்துவிட்டன போலும்! அதனால்தான் இப்படி ஆச்சரியப்படுகிறீர்கள்! யயாதி தன் முதுமையைத் துறந்து இளமை பெறத் தன் மகன் புருவிடமே கெஞ்சவில்லையா? அவனும் தன் தந்தையின் ஆசையை நிறைவேற்றவில்லையா? ஔவை என்னும் குமரி விநாயகப் பெருமானிடம் முதுமையை வேண்டிப் பெறவில்லையா?

ஆ. கு: இதையெல்லாம் எதற்காகச் சொல்லுகிறாய்?

பெ. கு: வேறு எதற்காக? கிழவனைக் குமரனாக்குவதும், குமரியைக் கிழவியாக்குவதும் ஆதி காலம் தொட்டே கலையாக வளர்ந்திருக்கிறது என்று கூறத்தான்.

ஆ. கு: கலையாகவா, கதையாகவா? இந்நாளில் நடக்கக் கூடிய காரியமா?

பெ. கு: அந்த நாளிலேயே நடந்திருக்கிறதே! இந்த நாட்களில் — நவீன வசதிகள் பெருகிய இந்த நாட்களில் — முடியாத காரியம் என்று ஒன்றுண்டா?

ஆ. கு: எனக்கு நம்பிக்கை உண்டாகவில்லை.

பெ. கு: அப்படியானால் உங்களுக்கு நாடகங்களில் வேஷங்கள் போட்டுக் கொண்டு பழக்கம் இல்லை போலிருக்கிறது.

ஆ. கு: அது 'மேக்கப்' அல்லவா?

பெ. கு: யார் இல்லை யென்றார்கள்? இந்த 'மேக்கப்' கலைதான் அதாவது அலங்காரக் கலைதான் நாடக உலகத்துக்கு மிக மிக அவசியமானது. ஆண்டவன் மனிதக் கற்பனையில் புகுந்து இந்தக் கலையை வெகு அழகாக வளர விட்டிருக்கிறான். நடனம், நடிப்பு ஆகிய கலைகளுக்கு இன்றியமையாத இந்தக் கலையை ஆண்களைக் காட்டிலும் ஒருபடி மேலாகப் பெண்கள் பயின்றிருக்கிறார்கள். வேண்டுமானால் குமாரி கீதாவையும் பிரேமாவையும் பேட்டி கண்டு கேட்டுப் பாருங்களேன்!

ஆ. கு: யார் அவர்கள்?

பெ. கு: டாக்டர் லக்ஷ்மி சதுர்வேதியின் குமாரிகள்; 'மேக்கப்' கலை பயின்றவர்கள்.

## 2

கீதா: இவள்தான் பிரேமா.

பிரேமா: இவள் கீதா. என் சகோதரி.

கீதா: பிரேமா வழக்குரைஞர் தொழிலுக்குப் படிக்கிறாள். 'சரசாலய'த்தின் மாணவி. 1963ம் ஆண்டு நடன அரங்கேற்றம் நடந்தது. சென்ற ஆண்டு காளிதாசர் ஜயந்திக்கு உஜ்ஜயினி போயிருந்தாள் சரசாலயக் குழுவினருடன். நாட்டிய நாடகத்தில் சகுந்தலையாக நடித்துப் புகழ் பெற்றாள். இந்த ஆண்டு விழாவிலே முதற் பரிசு சென்னைக்குக் கிடைத்தது. சொர்ணக் கலசம் பெற்றது இவள் குழு. மணிப்பூர், பிஹார், நாகாலாந்து பகுதிகளுக்குக் கூடப் போய் வந்திருக்கிறாள் கலைக் குழுவில் ஒருத்தியாக.

பிரேமா (குறுக்கிட்டு): இவளே பேசிக் கொண்டிருந்தால் ஆயிற்று? இவள் எஸ். ஐ. இ. டி. கல்லூரியில் பி. ஏ. படித்து வருகிறாள். இவள் தன்னை அதிகமாக அலங்காரம் செய்து கொள்ளாவிட்டாலும் அலங்காரக் கலை பயின்றவள். சென்னை நாட்டிய சங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற வகுப்பில் பயின்று 'மேக்கப்' கலையில் சான்றிதழும் பெற்றிருக்கிறாள். என் நடன நிகழ்ச்சிகளுக்கு அலங்காரம் செய்யச் சௌகரியமாக இருக்குமே என்று அம்மாவும், 'ராஷ்மி'யும் இவளைக் கற்றுக் கொள்ளச் சொன்னார்கள்.

கீதா: ஒரு திருத்தம். இவளும் 'மேக்கப்' பயின்றிருக்கிறாள். நான் 64ல் பயின்றேன். இவள் '65ல் பயின்றாள். இப்பொழுது தனக்குத் தானாகவே மேக்கப் செய்து கொள்கிறாள்.

பிரேமா: இவள் அலங்காரத்தில் திருப்தி யுறாமல் நான் கற்றுக் கொண்டேன் என்று எண்ணி விடாதீர்கள். குற்றங் குறைகளைக் கண்டு பிடித்துச் செப்பனிடுவதில் கீதாவே கைகாரி. ஒருவருக்கு இருவராக இருந்தால் குற்றங்குறைகளை நீக்கலாம், பாருங்கள்!

கீதா: இந்தப் புகழ்ப் புராணம் எதற்கு? எனக்குப் பயில்வித்தவர் இந்தக் கலையில் தேர்ந்த 'சித்ராலயா' சிவராமன் அவர்கள். இவளுக்கோ மாணிக்கம் ஆசிரியராக இருந்திருக்கிறார். சொல்லப் போனால் இருவருடைய முறைகளும் எங்களுக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

பிரேமா: இந்தக் கலையைப் பற்றிக் கேட்கிறீர்களா? இது ஓர் உயர்ந்த கலை. பார்த்துப் பார்த்து அழகு செய்ய வேண்டிய கலை. நடனத்துக்கும் நாடகத்துக்கும், திரை உலகத்துக்கும் மிக மிகத் தேவையான கலை. இந்தக் கலையின்றி அந்தக் கலைகள் சோபிக்கா.

கீதா: நடனங்களிலோ, நாடகங்களிலோ பங்கு பெற வருகிறவர்கள் அனைவருமே சகல லட்சணங்களும் பொருந்தியவர்களாக இருந்துவிடுவார்கள் என்று சொல்ல முடியுமா? இந்தக் கலை ஓரளவு அவர்களது குறைகளை மறைத்து நிறக்கச் செய்யும் ஆற்றல் பெற்றது.

பிரேமா: எல்லோரையும் ஒன்றுபோலச் செய்வது என்று இதற்குப் பொருள் கொள்ளக் கூடாது. ஆண்டவனுடைய படைப்பில் ஒருவரைப் போல் இன்னொருவர் இருப்பதில்லை. அவரவருடைய அங்க லட்சணங்களை ஆராய்ந்து, எதில் குறை தென்படுகிறதோ, அதை இட்டு நிரப்புவதுதான் இந்தக் கலையின் பெருமை.



குமாரி பிரேமா



சீதா: உதாரணமாக, ஒருவருக்குச் சப்பை மூக்கு என்று வைத்துக்கொள்ளுங்கள். அதைக் கிளி மூக்காக ஆக்கிவிட முடியாது. ஆனால் சப்பை மூக்கையும் ஓரளவு எடுத்துக் காட்டி, சபைக்கு நிறைவாக்கிவிட முடியும்.

பிரேமா: எப்படித் தெரியுமா? மூக்கின் நடுப்பாகத்துக்கு வெள்ளை நிறத்தையும், பக்கவாட்டுக்குச் சிவப்பு நிறத்தையும் கொடுத்து நீண்ட மூக்கெனத் தோற்றத்தில் காட்ட முடியும்.

சீதா: மற்றொருவருக்குப் பெரிய முகம், சின்ன வாய் என்று வைத்துக் கொள்ளுங்கள். உதடுகளை வர்ணக் கலவைகளின் உதவி கொண்டு வரைந்து ஓரளவுக்குப் பெரிதாகக் காட்டிவிடலாம்.

பிரேமா: சொல்வதன் கருத்து என்ன வென்றால், முதலில் குறைகளைக் கண்டு, அவற்றைக் கூடியவரை அகற்றுவதுதான் 'மேக்கப்' கலையில் முக்கியம். முதலில் கண்—புருவங்களைக் கவனிப்போம். கன்னக் கதுப்பு பள்ளமா யிருந்தால், வெள்ளை நிறத்தை உபயோகித்து ஓரளவு உப்பினாற் போல் காட்டுவோம். இதற்கு மாவாகப் பிசைந்து ஒட்டுவோம் என்று பொருள் கொள்ளக் கூடாது. சிலருக்குக் கன்னக் கதுப்பு அதிகமாக இருக்கும். அதைக் குறைத்துக் காட்டச் சிவப்பு நிறத்தை உபயோகிப்போம். இப்படிச் செய்வதற்கு பிரஷ், தூரிகைகளே போதும்.

சீதா: அகன்ற நெற்றியைக் குறுகலாகக் காட்டலாம், தலைக் கேசத்தை வாரிவிடுவதன் மூலம். சில பெண்களுக்குக் காதோரம் கேசம் ஓடியிராது. கருப்பு நிறத்தைக் கொண்டே காதோரம் கேசம் வளர்ந்திருப்பதாகப் பிரமை உண்டு பண்ணிவிடலாம்.

பிரேமா: இளைஞர்களை முதியவர்களாகவும், முதியவர்களை இளைஞர்களாகவும் காட்டிவிடலாம். இதற்கு வர்ணக் கலவைகளும் முகத்தில் ஒட்டப்படும் கோடுகளுமே போதும்.

சீதா: சிவந்த மேனி படைத்தவர்களை அவர்கள் நிறத்துக்கேற்ப 'மேக்கப்' செய்வது சுலபம். ஆனால் அவர்களையே பாத்திரங்களின் தன்மைக்கேற்பக் கரிய நிறம் படைத்தவர்களாகக் காட்ட வேண்டுமானால் அதற்கும் உபகரணங்கள் இருக்கின்றன.

பிரேமா: ஆண்களுக்குத் தாடி மீசை அந்தக் காலத்தில் கட்டி வந்தார்கள். இந்தக் காலத்தில் ஒட்டி விடுகிறார்கள்.

சீதா: இப்பொழுதெல்லாம் 'மேக்கப்' செய்ய எத்தனையோ சாதனங்கள் வந்து விட்டன. அரிதார நாள் அந்தக் காலத்தோடு போய்விட்டது.

பிரேமா: நம்மிடம் இருக்கும் பொருள்களைக் கொண்டு வந்துதான் காட்டேன்!— இந்த 'மேக்கப்' சாதனங்களால் சிலருக்கு 'அலர்ஜி' கூட ஏற்படுவதுண்டு. சளி பிடிக்கலாம், தலைவலி வரலாம், பருக்கள் தோன்றலாம். யார் யாருக்கு எது எது ஒத்துக்கொள்ளாது என்பதையும் கூடக் கவனிக்கவேண்டும்.

சீதா: இந்தப் பெட்டியில் இருப்பவை அனைத்தும் 'மேக்கப்' சாதனங்கள்தான். இதோ பாருங்கள்! இதற்கு 'பேஸ்' என்று பெயர். பேஸ்ட் — அதாவது களிம்பு உருவத்தில் இருக்கிறது. பலவித வண்ணச் சாயல்களில் இது கிடைக்கிறது. இதை முதலில் பூச வேண்டும்.

பிரேமா: அதாவது வீடுகளுக்கு முதல் பூச்சுக் சுண்ணாம்பு அடிப்பது போல! அடுத்த படியாக ரீச்னர் ஸ்டிக் — இது வெளுப்பு சிவப்பு போன்ற நிறங்களில் கிடைக்கிறது. இவற்றைக் கொண்டு உறுப்புகளை எடுத்துக் காட்டுவது போல வரைய வேண்டும்.

சீதா: பவுடரும் பலவித வர்ணங்களில் கிடைக்கின்றன. பாத்திரங்களுக்கு ஏற்ப இவற்றை உபயோகப்படுத்த வேண்டும். பிறகு 'பான் கேக்' கைக் கொண்டு சமக் கலவை தரவேண்டும். கறுத்த புருவத்துக்கு 'மஸ்கரா' கொண்டு கலை வண்ணம் செய்ய வேண்டும்.

பிரேமா: இந்த அலங்காரங்களுக்குப் பின் வெளியே தெரியக் கூடிய உடல் பாகங்களுக்கு நீர்வண்ணக் கலவை கொடுத்து ஒத்தாற்போல் அலங்காரம் செய்துவிட வேண்டும். ஓரிடம் மறந்துவிட்டால்கூடக் கேலிக்கு இடமாகிவிடக் கூடும்.

சீதா: வளர்த்துவானேன்? 'ரூஜ்', 'ஸ்பாஞ்ச்' முதலியவற்றை உபயோகித்து கண்கொத்திப் பாம்பென எக்குறையும் நேரா வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

பிரேமா: ஆண்டவனின் படைப்புக்கு வேஷம் போட்டு 'மேக்கப்' செய்வது அருமையான கலைதான். நாங்கள் சகோதரிகள் இருவரும் நடனங்கள், நாடகங்கள் இவற்றுக்கு அலங்காரம் செய்யத்தான் பயின்றிருக்கிறோம். திரையுலக 'மேக்கப்' இன்னும் சிரமமானது. சிறு குறைகள் கூட நேராத வண்ணம் கவனித்துக் கவனித்துச் செய்ய வேண்டும். அதை நாங்கள் அதிகமாகக் கற்கவில்லை.

சீதா: காரணம், இக்கலையை நாங்கள் கலையாகப் பயின்றோமே ஒழிய, தொழிலாகக் கொள்ளும் நோக்கத்துடன் கற்கவில்லை. நாங்கள் பெண்களுக்கு மட்டுமே 'மேக்கப்' செய்கிறோம். அதுவும், நாட்டிய நாடகங்களுக்கு மட்டுமே என்றால்கூடப் பொருந்தும்.

பெண் குரல்: என்ன, வைத்த கண் வாங்காமல் அந்த அழகு சாதனங்களையே பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்? இந்த சாதனங்களை உபயோகித்து யயாதியைப் போல் முதுமையைத் துறந்து இளமையைப் பெற முடியும் என்றா? முடியாது; முடியாது. ஆண்டவனது நாடக மேடைக்கு இந்த 'மேக்கப்' சாதனங்கள் பயன்படா. மனிதன் நிர்மாணித்திருக்கும் நாடக மேடைக்கு மட்டுமேதான் இவை உகந்தவை.

சீதா: (உள்புறம் திரும்பிப் பார்த்து): அடடா! நீங்களா? என்ன இது? முகத்துக்குப் பவுடர் போட்டுக் கொண்டவர், கழுத்து, பிடரிக்கும் இலேசாகப் பவுடர் பூசவேண்டும் என்பதை மறந்து விட்டீர்களே!

பிரேமா: இதுதான் சீதாவினிடமுள்ள குறை. குறை கண்ட இடத்தில் கூறிவிடுவாள்.

பெ. கு: குறை இல்லை; குணம். குறை கண்ட இடத்தில் சுட்டிக் காட்டுவதுதான் நல்லது. அதுவும் இந்த 'மேக்கப்' கலைக்கு இப் பண்பு மிக மிக அவசியமானது. —ரா.வீ.

# மூன்றாம் பாகம்

# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு

## அத்தியாயம் 1 நல்வரவு

இரவு விலகியது. கிழக்கிலே கதிரவன் எழுந்தான். நெய்தல் நில மக்கள் கடலிலே மீன் பிடிப்பது போல, அலைகளின் மீது தனது நீண்ட சுடர்க் கரங்களை வீசி உலகம் முழுவதையும் தன்னுடைய ஒளி வலையிலே பிடித்தான் கதிரவன்!

பெருந்துருத்தித் தீவிலே துறவிகளுக்கெல்லாம் புகலிடம் வழங்கிய செவ்வந்தி அடிகள் தமிழ் நாட்டிலே பகைமை இருள் அகன்று, நன்னலம் உதித்து எழுவதை வணங்கி வழிபட்டார். துறவிகள் அனைவரும் புத்ததேவனுடைய அருள் ஒளியைத் துதித்தார்கள்.

அத்தன் அடிபோற்றி
அண்ணல் அடிபோற்றி
சித்தன் அடிபோற்றி
செல்வன் அடிபோற்றி
புத்தன் அடிபோற்றி
புனிதன் அடிபோற்றி

என்று பொன்மணி அந்த வழிபாட்டுக் குரலிலே இணைந்து ஆன்ம ஒருமைப்பாட்டுடன் துதி செய்தாள்!

வழிபாடு முடிந்ததும் துறவிகள் எல்லாரும் பெருந்துருத்தித் தீவிலே அவர்களுக்கு என்று அமைக்கப்பட்டிருந்த திவுப் பள்ளியின் கூடங்களுக்குச் சென்றார்கள். அப்போது கடல் அலைகளின் காலைப் பண்ணைக் கேட்டு அந்த ஒலியிலே கதிரவனுடைய புகழை அநுபவித்தவாறு கரைமீது நடந்து சென்றார் செவ்வந்தி அடிகள். வேகமாக வந்து கரையிலே சரிந்து, மணல் மீது பாய்ந்து, 'சரசர' என்று மீண்டும் கடலுக்குள்ளே செல்கிற அலைகளிலே கால்களை நனைத்து நனைத்து விளையாடிக் கொண்டே, ஒரு சித்தனுடைய உல்லாசத்தோடு பாறைகளிலே குதித்து ஏறினார் அடிகள்!

பெருந்துருத்தித் தீவிலே படர்ந்திருந்த பாறைத் திட்டுகளிலே துள்ளித் துள்ளி நடந்து கொண்டே, அந்தப் பாறைகளுக்கு அப்பால் வடகிழக்குப் பக்கத்திலே இருந்த ஒரு பாசறைக்கு வந்தார் துறவி. அங்கேதான் மறைவாக வாழ்கிறான் வேலவன் கோதை!

பாவம், முந்திய இரவு முழுதும் கண் பொருந்தாமல் கழித்திருந்தான் அவன், கவலையிலே! வெள்ளைத் தீவிலிருந்து தனது இதயக் காதலியான நீலவல்லியையும் அவளுடைய செவிலித் தாயான மணிமாலையையும், மிகுந்த ஆயத்தோடு யாருக்கும் தெரியாமல் இரவுக்கு இரவே புன்னாட்டு மரக்கலத்தில் ஏற்றிக் கொண்டு தப்பி ஓடிய அந்த வீரன், இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை எதிர்பார்த்தானா? நேரே புன்னாடு சென்று நீலவல்லியின் மாற்றாந்தாய் மகனும், உடன்பிறந்த தம்பியைப் போலவே மட்டற்ற அன்பு கொண்டவனுமான மலர்வேணியனிடம் தமக்கையை ஒப்படைத்து, அதன் பிறகு தங்கள் வாழ்வின் எதிர்காலத்தைச் செம்மை செய்து கொண்டு, வெள்ளைத் தீவிலே உளவு கண்டு வரும்படி தன்னை அனுப்பிய சேரலாதனைச் சந்தித்து அந்த மாமன்னனிடம் நீலவல்லியும் தானுமாக வாழ்த்துப் பெறலாம் என்றல்லவா கனவு கண்டான் வேலவன் கோதை. ''உளவு கண்டு வரும்படி அனுப்பினீர்கள். உளவுக்குரிய உறவையே கொண்டு வந்திருக்கிறேன்!'' என்று மன்னனிடம் சொல்லலாம் என்றெல்லாம் நினைத்தானே அவன்! ஆனால் அத்தனை எண்ணங்களையும் அடியோடு கவிழ்த்து விட்டானே வானமண்டலக் கடம்பன்! அத்தனை ஆயமாக, அத்தனை மறைவாக, யாருக்கும் தெரியாமல் நள்ளிரவிலே புறப்பட்டு வந்தும்கூட எப்படியோ தங்களைப் பின்தொடர்ந்து வந்து கண்டு பிடித்து விட்டானே கடம்பன்! அப்படியானால் அவனுடைய பாதுகாவலும் உளவுப் படையும் ஒற்றர்களும் அவர்களுடைய திறமையும் பற்றி என்னென்று சொல்வது! இத்தனை சூழ்ச்சி வல்லவனாக அவன் இருப்பதால்தான், தமிழ் நாட்டு மன்னர்கள் அந்த வானமண்டலக் கடம்பனைக் குறித்து அத்தனை கவலை கொள்கிறார்கள், போலும்! உண்மைதானே! அவனுடைய தீவும், கோட்டையும், அதிலுள்ள இயந்திரப் பொறிகளும் பற்றி அன்றொரு நாள் அந்த யவன வீரனே தன்னிடம் எத்தனை வியப்போடு பேசினான்! கிரேக்கர்களே வியப்படையும்படியாக அவ்வளவு வல்லமையோடு தனது கோட்டை மதில்களை ஆயப்படுத்தித் தனது கொடுங்கோல் ஆட்சியை நடத்துகிறானே இந்தக் கொள்

ளைக் கூட்டத்துக் கடம்பன், என்று எண்ணிப் பார்த்ததும் வேலவன் கோதைக்கு ஆத்திரம் மூண்டது! ஆனாலும் தன்னந்தனியான நிலையில் அந்தப் பெருந் துருத்தித் தீவிலே இருந்து கொண்டு என்ன செய்ய முடியும் அவனால்? ஒரு மிதவையிலே சென்று சேரலாத மன்னனையே போய் அடையலாம் என்றாலோ, அது பெருங்கேடு விளைக்கும் என்றல்லவா செவ்வந்தி அடிகள் தனக்கு அறிவித்திருக்கிறார்! 'இன்னும் சில நாட்களுக்கு இந்தக் கடல் வட்டாரத்திலேயே தலை காட்டக் கூடாது; கடம்பன் அத்தனை வேகமாக இருக்கிறான்' என்றல்லவா தனக்குப் பாதுகாவல் செய்து வைத்திருக்கிறார் அடிகள்! இன்னும் எத்தனை நாள் இப்படி இந்தத் தீவிலேயே இருப்பது? சேரலாத மன்னர் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார்? நீலவல்லி தான் என்ன எண்ணுவாள்?

நீலவல்லி — அவளை நினைத்ததும் வேலவன் கோதைக்கு உடம்பு உருகியது! எதிர்பாராத விதமாகக் கடம்பன் தங்கள் மரக்கலத்தைத் தாக்கிய வேளையில், 'நீங்கள் தப்பித்துவிடுங்கள்' என்று தன்னை எவ்வளவு தூரம் வற்புறுத்தினாள் நீலவல்லி! தன் வளர்ப்புத் தந்தையின் சீற்றத்தை அவளால் மட்டும் நிர்வகித்துக் கொள்ள முடியும் போலும்! தன்னைப் பற்றித் தான் அவளுக்குக் கவலை!

இவ்வாறு எண்ணிப் பார்த்தான் வேலவன்!

என்னதான் இருந்தாலும், வளர்த்த மகள் என்று எத்தனை பாசந்தான் இருந்தாலும், தப்பி ஓட முயற்சி செய்தாளே என்று கடம்பனுக்குக் கோபம் ஏற்படாமலா போகும்? சாதாரணத் தந்தையர்களுக்கே பெருங் கோபம் வருமே, இந்த அரக்கன் அவளை என்ன செய்தானோ தெரியவில்லையே!

வேலவன் கோதைக்கு உடம்பு முழுவதும் படபடப்பு ஏற்பட்டது. செவ்வந்தி அடிகள் தன்னிடம் எதுவும் சொல்லாமல், எங்கும் சென்று எச் செயலும்செய்ய முடியாதபடி,



தன்னைச் சிறை வைத்ததுபோல் செய்து விட்டாரே என்று ஒரு துடிப்பு உண்டாயிற்று. முக்காலமும் உணர்ந்த முனிவர் என்று அவரிடம் ஒரு பய பக்தி இருந்த போதிலும், இப்போது அவரிடமுமே ஆத்திரம் கொண்டு பாசறைக்கு வெளியே வந்தான், வேலவன் கோதை ! என்ன வியப்பு! அதோ அடிகளே வருகிறார், பாசறையை நோக்கி !

வேலவனுக்கு உடம்பு புல்லரித்தது. சித்தன் போக்கு என்பார்களே, அது சிவனுடைய போக்கு அல்லவா ! நினைத்த மறுகணம் அதோ நிற்கிறாரே இந்த மாதவ முனிவர் !

''தம்பி, வானத்திலே கதிரவன் எழுந்து விட்டான் என்று வழிபாடு செய்தாயா? அல்லது வானமண்டலத்துக் கோள்களின் நிலையைக் கணக்குப் பார்த்தாயா? என்ன செய்தாய் ? — உண்மையைச் சொல்லிவிடு !''

ஒரு குழந்தையைப் போலச் சிரித்துக் கொண்டே துள்ளினார் செவ்வந்தி அடிகள்.

''அடிகளே, தாங்கள் அறியாதது எது உண்டு? தங்களிடம் சற்று ஆத்திரம் கொண்டேன். மன்னிக்க வேண்டும்!'' என்றான் வேலவன் கோதை.

''இந்தப் பித்தன் இத்தனை பைத்தியக்காரத்தனமாகக் கையையும் காலையும் முடக்கிப்போட்டிருக்கிறானே என்று என்னை நெருப்பாக எரித்துக் கொண்டிருந்தாயாக்கும்! அதனால்தான்உடம்பு சுட்டது எனக்கு! சரி சரி, இப்போதல்லவா புரிகிறது!''

இப்படித் துறவி சொல்லும் போது உடம்பு சுட்டது துறவிக்கு இல்லை, வேலவன் கோதைக்குத்தான்! இரவு முழுதும் உறக்கம் இல்லாமல் இமை பொருந்தாமல் இருந்தான் அல்லவா ! கண்ணிலே காந்தியது. உடம்பு சுட்டது!

''அடிகளே என்னை மன்னிக்க வேண்டும்!'' என்று சொல்லிச் செவ்வந்தி அடிகளின் திருவடிகளைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான் வேலவன்.

''சரி சரி; இதற்கெல்லாம் போய் மன்னிப்புக் கேட்காதே! மன்னிப்புக் கேட்க வேண்டிய குற்றத்துக்குக்கூடக் கேட்காமலேயே மன்னிப்புத் தருகிற கருணைக் கடல் இறைவன்! அவனுடைய அடியார்கள் நாம் எல்லாம்! நீயும் நானும் சேரலாத மன்னனும், நம்முடைய அரசச் சுற்றமும் எல்லாமே! புரிகிறதா?''

இப்படி ஒரு புதிரைப் போட்டு விட்டு மோனமாக இருந்தார் செவ்வந்தி அடிகள். பிறகு சிரித்தார். சிரித்துக் கொண்டே சொல்லுவார் :

''தம்பி. நீ நல்ல பிள்ளை. உன்னைக் குழப்புவது தவறு. சொல்லுகிறேன் கேள். மனிதனுடைய செயல் எல்லாவற்றுக்குமே விளைவு என்று ஒன்று உண்டு. அதிலிருந்து யாரும் தப்பிக்க முடியாது. வளர்த்த தந்தையை வஞ்சிப்பது தவறு. எத்தகைய நியாயமான காரணங்கள் இருந்தாலும் தவறு தவறுதான். அது போலவே அரசப் பணியிலே செல்லுபவன் அதன் நடுவில் காதலிலே சிக்கி மூழ்குவதும் தவறு. எத்தனை பரிசுத்தமான எண்ணம் இருந்தாலும் தவறு தவறுதான். இந்தத் தவறுகளுக்காக நீயும் நீலவல்லியும் இந்த விளைவுகளை அநுபவிக்கிறீர்கள். இது வேறு யார் செய்த தவறும் இல்லை. ஆனால் இனிமேல் இதற்காகக் கவலைப்பட வேண்டிய அவசியமும் இல்லை. உன் வரையில் உன்னுடைய இந்தத் தீவுத் தனிமைக்கு முடிவு காலம் வந்து விட்டது. அது தான் சொன்னேனே, சூரியன் எழுந்து விட்டான் என்று. புறப்படு. என்னோடு நடந்து இந்தப் பாறைகளையெல்லாம் கடந்து வடகிழக்குக் கோடியிலே உள்ள கரை முனைக்கு வந்து சேர்வாயாக !''

இவ்வாறு சொல்லி இரு கைகளையும் உயர்த்தி வேலவன் கோதையை வாழ்த்தினார் செவ்வந்தி அடிகள்! வாழ்த்தி விட்டு மேலும் தொடர்ந்து சொல்லுவார் :

''தம்பி ! சில முதன்மையான விருந்தினர்களை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.''

''அடிகளே! ஏற்கனவே இந்தப் பெருந்துருத்தித் தீவுக்கு மாதவப் பள்ளியிலிருந்து பல துறவிகள் புன்னாட்டு மரக்கலத்தில் வந்து சேர்ந்து விட்டார்கள் அல்லவா?'' என்று பணிவோடு கேட்டான் வேலவன்.

''ஆமாம். துறவிகள் வந்து விட்டார்கள். இனி அரசர்கள்தான் வர வேண்டும் !'' என்றார் செவ்வந்தி அடிகள் சிரித்துக் கொண்டே !

''அரசர்களா? இந்தப் பெருந்துருத்தித் தீவுக்குத் தமிழரசர்கள் வரப் போகிறார்களா ?'' என்று கேட்டான் வேலவன்.

''ஆமாம். ஆனால் அவர்கள் இந்தத் தீவினுள் வந்து தங்கப் போவதில்லை. அவர்களுடைய வீரர்கள் எல்லாரும் பெரிய பெரிய மரக்கலங்களிலே கடலுக்குள் நிற்பார்கள். இரண்டொரு கலங்கள் மட்டும் இங்கே வரும். இங்கே என்றால் அந்த வடகிழக்குக்கரை முனையிலே வந்து சேருவார்கள். பிறகு சற்று

நேரத்தில் திரும்பவும் சென்று விடுவார்கள்!''

புதிர்ப் போடுவது போல் இவ்வாறு சொல்லிவிட்டு நிறுத்தினார் அடிகள்.

''அடிகளே! பெருந்துருத்தித் தீவுக்கு வருகிறவர்களிலே இந்தப் புனித மண்ணிலே தங்கியிராமல் அத்தனை அவசரமாகச் சென்று விடுபவரும் இருக்கிறார்களா? விந்தையாக இருக்கிறதே!''

''தம்பி! அவர்கள் இங்கே இறங்கி வந்து தீவுக்குள் நுழைய விரும்பினாலும் நான் இடம் தர மாட்டேன். தடுத்து விடுவேன். ஏனென்றால் அவர்களுடைய போக்கு வரவுகள் மிகவும் மறைவாக இருக்கவேண்டும். வெள்ளைத் தீவுக் கடம்பர்கள் ஒழிந்து மறைகிற வரை அத்தனை முன்காவலாக இருக்க வேண்டும் அவர்கள். அதனால் அவர்கள் இந்த வடகிழக்குக் கரை முனையிலே வந்ததும் நீ அவர்களுடன் சேர்ந்து கொள்ள ஆயத்தமாக இருக்க வேண்டும். அதை அறிவிப்பதற்காக என்றே இப்போது இங்கே நான் வந்தேன்!''

இவ்வாறு செவ்வந்தி அடிகள் கூறியதும் வேலவன் கோதை தயக்கத்தோடு அடிகளின் முகத்தையே பார்த்தான். அந்தக் குறிப்பை உணர்ந்து கொண்ட துறவி, மேற்கொண்டு நடக்க வேண்டிய நிகழ்ச்சிகளை வகைப்படுத்திச் சொல்லலானார் :

''தம்பி! கவனமாகக் கேள். இன்னும் சற்று நேரத்தில் இந்தத் தீவின் கரையை நாடிச் சேரலாத மன்னனுடைய இளவரசன் செங்குட்டுவன் வந்து சேருவான். நீ இங்கே என்னுடன் பாதுகாவலாய் இருக்கிறாய் என்ற செய்தி ஏற்கனவே சேரமன்னனுக்குத் தெரியும். சொல்லியனுப்பியிருக்கிறேன். எனவே, அவர்கள் இங்கு வருகிற நோக்கம் உன்னை அவர்களோடு அழைத்துச் செல்வதற்குத்தான். நீ ஒருவன்தான் அந்தத் தீவின் ஆயங்களையெல்லாம் உணர்ந்தவன். அது சேரலாத மன்னருக்குத் தெரியும். ஆகையால் நீ செங்குட்டுவனுடைய படையிலே போர்த் தலைவனாகச் சென்று எல்லா வீரச் செயல்களையும் புரிந்து மீள வேண்டும் என்பது எங்கள் ஆசை !''

வேலவன் கோதை ஆவலும் திகைப்பும் மேலிட்டவனாகத் துறவியின் இந்தச் சொற்களைக் கேட்டான்; சொன்னான் :

''அடிகளே! நேற்று இரவெல்லாம் இதைப் பற்றியே சிந்தனை செய்து கொண்டிருந்தேன். சேரலாத மன்னர் கொடுத்த பணியை நிறைவேற்றி மீளாமல் இப்படியெல்லாம் ஆயிற்றே என்று வருந்தினேன். ஆனால் தங்கள் வாழ்த்துக் கிடைத்த பிறகு இனி எனக்கு அந்தக் கவலையும் இல்லை. தவற்றுக்குரிய தண்டனையையும் அநுபவித்து விட்டேன். இனி வெள்ளைத் தீவுப் படையெடுப்பிலே என்னுடைய கடமையை முழுப் பொறுப்புடன் நிறைவேற்றி மன்னரிடம் சென்று—''

''மணமாலை சூட்டும்படி கேட்கப் போகிறாயாக்கும்!'' என்று இடைமறித்தார் செவ்வந்தி அடிகள், சிரித்துக் கொண்டே !

''அடிகளே! தாங்கள் சிரிப்பதைப் பார்த்தால் மணமாலை சூட்டுவதற்கு முன்பு ஏதோ இடையூறு நேர்ந்து தண்டனை அநுபவிக்கப்போகிறேன் என்பது போலல்லவா தோன்றுகிறது! தங்களுடைய ஞானச் சிரிப்புக்குள் உள்ள பொருள் நாளாக நாளாகத்தான் புரிகிறது அண்ணலே!'' என்றான் வேலவன் கோதை.

''ஞானமாவது ! சிரிப்பாவது ஏதேதோ சொல்லி என்னை மடக்குகிறாயே தம்பி ! போய் ஆகவேண்டிய கடமைகளைப் பார்! எதிர்காலம் என்பது பௌத்தர்கள் சொல்வது போல எழுதி மூடி வைக்கப்பட்ட ஓர் ஏடு ! வினைப் பயனில் அவர்களுக்குள்ள நம்பிக்கை அத்தனை வலிமையானது. நீ இதையெல்லாம் பற்றி மனத்தை அசைத்துக் கொள்ளாதே. பாசறைக்குள்ளே சென்று போர்வீரனாக மீண்டு வா !''

இவ்வாறு சொல்லி வேலவன்கோதையைப் பாசறைக்குள்ளே அனுப்பிவிட்டு வழி நடந்தார் துறவி.

''பௌத்தர்களுக்குள்ள நம்பிக்கை'' என்று சொல்லி இவர் விலகி நின்று கொள்கிறாரே, அப்படியானால் இவர் அந்தத் துறவிகளின் சங்கத்தைச் சேர்ந்தவர் இல்லையா, சித்தர்கள் என்றால் அவர்கள் எல்லா மதத்திலும் இருப்பார்கள், மதங்களை விட்டு அவற்றுக்குள் அகப்படாமல் வெளியேயும் இருப்பார்கள் போலும்' — என்று எண்ணிக் கொண்டே பாசறைக்குச் சென்று அவசரம் அவசரமாக 'வட்டுடை' அணிந்தவனாக வெளியே வந்தான் வேலவன் கோதை.

செவ்வந்தி அடிகள் அறிவித்தது போல் வெள்ளைத் தீவைச் சுற்றி அலை வீசிக் கொண்டு அடர்ந்த கடலின் மீது மரக்கலங்கள் தெரிய ஆரம்பித்தன. வானம் கடலோடு முயங்குகிற வலையத்தின் நெற்றியிலே பொட்டுப் பொட்டாகத் தெரிந்த புள்ளிகள் நேரம் ஆக ஆகப் பெரும் புள்ளிகளாகத் தோன்றின. பிறகு நூறு

நூறு மரக்கலங்கள் அணி அணியாக விற்கொடி தாங்கி அலையின் மீது பாய்ந்து வந்தன! சேரநாட்டு மரக்கலங்கள் அவை !

ஆம்; சேரலாத மன்னன் தன்னுடைய இளவரசன் செங்குட்டுவனோடு செய்த ஆலோசனைக்கு ஏற்பட்ட உருவங்களே அவை, அந்த மரக்கலங்கள்!

தமிழ் நாட்டு வரலாற்றிலே எதிர்காலத்தில் எத்தனையோ பெரிய மாபெரும் போர்ச் சாதனைகளைப் புரிந்து நிலையான புகழ் பெற்று என்றென்றும் தன் பெயர் நிற்கும்படி அமர மன்னனாக உயிர் வாழப் போகும் சேரன் செங்குட்டுவன், இளவரசனாக இருந்து ஆற்றப் போகிற முதலாவது கன்னிப்போர் அது! அதுவும்கடற்போர்!

யவன வணிகர்கள் சேரநாட்டோடு செய்து வந்த ஒப்பற்ற வாணிபத்துக்கு இடையூறாக முளைத்தவர்கள் அல்லவா கடம்பர்கள்! கொள்ளையடித்த விலைமதிப்பற்ற பொருள்களைக் கொண்டல்லவா ஈடும் இணையும் இல்லாத பெருங்கோட்டையைத் தங்கள் தீவிலே எழுப்பி யவன வீரர்களே கண்டு அஞ்சும்படியான இயந்திரப் பொறிகளையெல்லாம் அமைத்துக் கொடுமை புரிந்தார்கள் அவர்கள்! அந்த ஆட்சிக்கும் துணைநாட்டு நன்னர்களின் பழிகளுக்கும் முடிவு காணக் கருதிய தமிழ் மன்னர்கள் இத்தனை காலம் பொறுத்திருந்து இப்போது வாகுடன் தங்கள் ஏற்பாடுகளைத் திட்டப்படுத்தி விட்டார்கள். சேரன் செங்குட்டுவனின் கடற்படையிலே புன்னாட்டு வீரர்கள் இருந்தார்கள். பொறியியல் நுட்பங்கள் தேர்ந்த சில யவனர்களும் இருந்தார்கள். பெருந்துருத்தித் தீவுக்கு வந்து சேர்ந்த பிறகோ என்றால், வெள்ளைத் தீவின் அமைப்பையும் கடம்பர்களின் சூழ்ச்சிகளையும் தெரிந்துணர்ந்த வேலவன்கோதையும் அவர்களோடு சேர்ந்து கொள்ளப் போகிறான்!

வேலவன் கோதை தங்கள் அரசச் சுற்றத்துக்கு நெருங்கிய உறவினன் என்பதும் வீரமும், உண்மையும் நல்லெண்ணமும் நிரம்பிய தானைத் தலைவன் என்பதும் காரணமாகச் செங்குட்டுவனுக்கு ஏற்கனவே அவனிடம் ஒரு மதிப்பும் அன்பும் உண்டு. எனவேதான் பெருந்துருத்தித் தீவுக்குச் செல்லும் போது வேலவன் கோதைக்கு உகப்புத் தருகிற சில படைக்கலங்களைத் தனியாக அவனுக்கு என்றே எடுத்துச் சென்றான் செங்குட்டுவன்!

தீவின் வடகிழக்கு முனைக்கு வந்து சேர வேண்டும் என்பதுதான் ஏற்கனவே அடிகள் சேரலாதனுக்கு அனுப்பிய செய்தி ! அதன்படி இரண்டொரு அரச மரக்கலங்களைத் தவிர மற்ற மரக்கலங்கள் எல்லாம் கடல் மீது எட்டி நின்றன. செங்குட்டுவன் மட்டும் சில குறிப்பிட்ட வீரர்களோடு பெருந்துருத்தியின் கரையை அடைந்தான்.

''தென்கோடியிலிருந்து வடகோடி வரை வெற்றிப் புகழ் பரப்பப்போகும் தமிழ் மன்னனே, வருக! வருக!'' என்று செங்குட்டுவனை வாழ்த்தி வரவேற்றார் செவ்வந்தி அடிகள்! (தொடரும்)

---

## இவரே தான் அவர் !



சின்னஞ்சிறு பையனாக இருக்கும் போதே மிருதங்கம், கஞ்சிரா, முதலிய தாள வாத்தியங்களை லாகவமாகக் கையாளும் திறமையை அறிந்திற்பெற்றிருந்தவர் அவர்!

வீணை, சிதார் வாசிப்பில் விற்பன்னர்; சினிமா டைரக்‌ஷனில் திறமை மிக்கவர்; பல தமிழ்ப் படங்களில் நடித்தவர்; டைரக்ட் செய்தவர். தமிழ்ப் படவுலகிலேயே பெரிய அதிசயமாகப் பாடலே இல்லாத ஒரு படத்தைப் பல ஆண்டுகளுக்கு முன்பே தயாரித்து வெற்றி கண்டவர்; பள்ளிச் சிறுவனாயிருக்கும் போதே ஒரு தமிழ்ப் படத்தில் மிருதங்கம் வாசித்துப் புகழ் பெற்றவர்; இந்தச் சகல கலாவல்லவர் யாரெனத் தெரிகிறதா? ஆம், எஸ். பாலசந்தர் தான்! சமீபத்தில் வெளி வந்து ரஸிகர்களின் ஆதரவைப் பெற்ற ''பொம்மை'' படத்தின் மூலம் திரையுலகில் தமக்கென ஓர் இடம் தேடிக் கொண்டவர்.

கலையுலகில் இன்னும் பல புதுமைகளைப் படைத்து ரஸிகப் பெருமக்களின் ஆதரவைப் பெறவேண்டும் என்னும் ஆர்வமும் துடிப்பும் மிக்கவர் கலைஞர் எஸ். பாலசந்தர்.

---



## சுயம்வரம் (நாடகம்)

"இந்தக் காலத்தில் சுயம்வரம் நடக்குமா?" என்ற கேள்விக்கு இடமில்லை. வாஷிங்டனில் நரிக்குறவர்கள், அப்பளமிடும் அம்மாமிகள் சகிதம் திருமணம் நடக்கும் என்பதையும், பட்டணத்தில் பூதம் தோன்றும் என்பதையும் ஒப்புக்கொள்ளும் ரசிகர்கள் இந்த நாளில் சுயம்வரம் நடக்கும் என்பதை ஏன் ஒப்புக் கொள்ளக் கூடாது? ஒரு நாடக உத்தி என்ற முறையில் இந்த அதீத ஹாஸ்யக் கற்பனையை ஒப்புக்கொண்டு பார்த்தால் நாடகம் சிறப்பாகவே அமைந்துள்ளதைக் காணலாம்.

சிறப்புக்குக் காரணம் இவை: முழுக்க முழுக்கச் சிரிப்பாகவே அமைந்து, கருத்தாழம் இல்லாமல் போய்விடவில்லை. அல்லது கருத்தாழத்தையே பிரதானமாகக் கொண்டு அலுப்புத் தட்டும்படியும் செய்துவிடவில்லை. எல்லாவற்றுக்கும் மேலாக முக்கியமாய் ஹாஸ்யத்துக்கென்று தனியான கதாபாத்திரங்கள் சிருஷ்டிக்கப்படவில்லை. நகைச் சுவை தனித்து நிற்காமல் நாடகத்தில் இழைந்து விடுகிறது. சுவாரஸ்யமாக நகைச் சுவையுடன் செல்லும் இந்த நாடகத்தில் கடைசியில் ஒரு நல்ல திருப்பம்.

இந்தத் திருப்பத்தில் ஒரே ஒரு கருத்து. அதுவும் அழுத்தமாக விழுந்து கரகோஷத்தை அள்ளிக்கொண்டு போகிறது. நாமும் இதய நிறைவுடன் இல்லம் திரும்புகிறோம்.

கதை எஸ். வி. சகஸ்ரநாமமே புனைந்தது. நாடக ஆசிரியர் பிரபல நகைச்சுவை எழுத்தாளரான தாமரை மணாளன், காட்சி ஜோடனை, டைரக்ஷன், வசனங்கள் எல்லாமே கச்சிதமாக அமைந்துள்ளன. அனைவரது நடிப்புமே களை கட்டுகிறது. ஆரம்பத்தில் கொஞ்சம் இழுக்கடிப்பதாகத் தோன்றினாலும் படிப்படியாக விறுவிறுப்பு ஏறி நம்மைச் சிரிப்பில் குலுங்க வைக்கிறது.

சேவா ஸ்டேஜ் குழுவினருக்கு இது ஒரு வெற்றி நாடகம் என்று தயக்கமின்றிக் கூறலாம்.

## மௌன விரதம்

(நாடகம்)

ஸ்ரீ ஹரிஹர சுப்பிரமணியன் எழுதிய நாடகத்துக்குத் தலைப்புத்தான் மௌன விரதமே ஒழிய, இதில் வரும் பாத்திரங்கள் அனைவரும் வாய் நிறையப் பேசுகிறார்கள். ஒரே ஒருவர் மட்டும் விதிவிலக்கு. காரணம் அவர் பிறவியிலேயே ஊமை, செவிடு, குருடு. பெயர் ராஜா.

ஐயோ, பாவம்!

நாடகம் பார்ப்பவர்களை அவர் இப்படி அங்கலாய்க்க விடவில்லை. பேசாமலே பேசி முகபாவத்தைக் ,கொண்டே பிரமிக்க வைத்துவிடுகிறார். அது மட்டும் அல்ல; 'நான் ஹெலன்கெல்லர் பரம்பரையைச் சேர்ந்தவன். என்னிடமுள்ள குறையையும் நிறையாகக் காண்பவன். வாய்மொழி இல்லாவிட்டால் என்ன, விரல் மொழியிலேயே பேசிப் பிறர் கருத்தைப் புரிந்து கொள்ளவும் என் கருத்தைப் புரிய வைக்கவும் முடியும்' என்றும் கூறுபவர். அவரது வாழ்விலும் கல்யாணி என்னும் பெண் இடம் பெற்று வாழ்க்கைத் துணையாகிறாள். இதற்கு ஃபாதர் ஆசீர்வாதம் உறுதுணையாக நிற்கிறார். ராஜாவின் குறைகளைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முயல்கிறான் ஒரு கயவன். அந்திய செயல் அவனை உயிர்ப் பலி வாங்கிவிடுகிறது. சந்தர்ப்ப சாட்சியங்கள் ராஜாவைக் குற்றவாளிக் கூண்டில் ஏற்றுகின்றன.

நல்லோர் கெடுவதில்லை என்னும் நான்மறைத் தீர்ப்பை வலியுறுத்த வருகிறார் வக்கீல் ஜெகதீஷ். தீர்ப்பு பிழைக்கிறது!

ஸ்ரீ வி. சூரியகுமார் பேசாமலே நடித்துப் பார்ப்பவர்களைக் கவர்ந்திருக்கிறார் என்றால் பிராசிக்யூடராக வரும் ஸ்ரீ இ. கிருஷ்ணசாமியும், குற்றவாளியின் வக்கீலாக வரும் ஸ்ரீ இ. எஸ். ராமனும் தங்கள் வாதத்தால் உயர்ந்திருக்கிறார்கள். அமைதியான முகபாவத்தின் மூலம் ஃபாதர் ஆசீர்வாதமாக வரும் என். பி. ராமையாவும் குறுகுறுப்பான நடிப்பினால் கல்யாணியாக வரும் தனிகை ராஜேசுவரியும் களைகட்டுகிறார்கள். சொல்லப்போனால், நவஜீவன் தியேட்டர்ஸாரின் இந்த நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்ட நடிகர்கள் அனைவருமே பாத்திரங்களின் 'ஜீவன்' அறிந்து நடித்திருக்கிறார்கள். ஸ்ரீ லக்ஷ்மி நரசுவின் செட், நடிப்புக்கு நல்லபடியாகச் சுருதிசேர்க்கிறது. 'எதிர் நீச்ச'லில் தேர்ந்த 'நாயர்' ராமனும் ராமையாவும் டைரக்ஷன் பணியை ஏற்று 'மௌன விரதம்' காத்திருக்கிறார்கள்.



## ஆம்ரபாலி (சினிமா)

ஏறக்குறைய இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் அன்பையும் அமைதியையும் போதித்த புத்த பிரான் வாழ்ந்த காலத்தில் நடந்ததாய்ப் புனையப்பட்ட கதை இது. அந்தக் காலத்திலும் பகை—பூசல் புரையோடியிருந்ததுண்டு. குடியாட்சி நடைபெற்ற வைசாலிக்கும் முடியாட்சி நடைபெற்ற மகதத்துக்கும் இடையே பெரும் போர் நிகழ்ந்து கலக்கியதுண்டு. இந்த வரலாற்றுப் பின்னணியைக் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்த முயல்கிறார்கள் தயாரிப்பாளர்கள். இதற்கு வரலாற்றுப் பெருமை பெற்ற சிற்பங்களும் சித்திரங்களும் உதவுகின்றன. கலைஞர்களின் கற்பனை ஒத்துழைக்கிறது. சூழ்நிலையைச் சமைப்பதில் தயாரிப்பாளர்கள் வெற்றி கண்டார்களோ இல்லையோ, எழிலரசி ஆம்ரபாலியாக நடிக்கும் வைஜயந்திமாலா ஆடலரசியாக வெற்றி கண்டிருக்கிறார். அவரது ஆடலைக் கற்பனை செறிந்த தாளக் கட்டும் பின்னணி இசையும் எடுத்துக் காட்டுகின்றன.



அஜாத சத்ருவாக வரும் சுநீல்தத் நடிப்பில் நல்ல வீரத்தைக் காட்டியிருக்கிறார். ஆனால் காதற் காட்சிகளில் தம் நடிப்பைக் கோட்டை விட்டிருக்கிறார். அஜாத சத்ரு, ஆம்ரபாலி இவ்விருவரை மட்டுமே சுற்றிப் படரும் இந்தக் கதையில் மற்றத் துணை நடிகர்களின் நடிப்பு அவ்வளவாக எடுபடவில்லை. ஆயினும் இந்தப் படத்தின் வெற்றி வாய்ப்புக்கு இந்திய சாஸ்திரீய சங்கீதம் பெரும் பங்கு கை கொடுத்து உதவுகிறது. அதற்கு வசனங்களும் துணை நிற்கின்றன. இசை, வசனம், காட்சி, ஜோடனை ஆகியவை கைகொடுத்து உதவும் இந்தப் படத்தில் இரு 'போர்'களைப் பார்ப்பவர்கள் எப்படியும் ரசித்துச் சமாளிப்பார்கள்.



## பிரளயம் (நாடகம்)

☐ தன் அப்பாவித் தங்கைக்கு அநீதி இழைத்த யாரோ ஒருவனைக் கண்டு பிடிக்க முடியாத நிலையில், அந்த அநீதியின் கசப்புத் தன்மையை மாத்திரம் மனத்திலே அமுக்கி ஒளித்து வைத்திருந்து, முப்பது வருடங்களுக்குப் பிறகு அதே அநீதியைத் தன் சொந்த மகன் யாருக்கோ இழைத்து விட்டான் என்று தெரிந்து கொண்ட போது அவனையே ஆத்திரத்தால் கழுத்தை நெரித்துக் கொன்று விடும் துணிவுள்ள ஒரு தந்தையின் கதைதான் 'பிரளயம்'.

தந்தை சந்திரசேகரனின் பாத்திரமேற்று நடிக்கும் 'மேஜர்' சுந்தரராஜன் நன்கு விழித்துக் கொண்டு இந்த நாடகம் முழுதும் வியாபித்து நடிக்கிறார்.

நாடக ஆசிரியர் ராஜூசிவா, வசன அமைப்பில் நல்ல கவனம் செலுத்தியிருக்கிறார். நடிகர்கள் ஒத்துழைத்து அவர் எழுத்துக்களைப் பரிமளிக்கச் செய்கிறார்கள்.

சோமுவின் நண்பன் சுந்தரத்தின் பாகத்தைத் தாங்கும் ஸ்ரீ காந்திற்கு இந்த நாடகம் நல்ல திருப்பமாக அமையலாம்.

நாடகத்தை இயக்கும் பொறுப்பையும் ஏற்றிருக்கும் சுந்தரராஜன் பாராட்டும் வகையில் சில உத்திகளைக் கையாண்டிருக்கிறார். கதையில் இல்லாத வலுவைத் தம் குரல் மூலம் கொடுக்கிறார்.






☐ "மூணு வருஷமா ஓடாத மோட்டார் கார்களெல்லாம் நாளைக்கு ஓடப் போகுதாம் அண்ணே !"

"ஏன்? எல்லாம் மொத்தமா ரிப்பேராப் போச்சா? ஸ்பேர் பாட்ஸ் கிடைக்கலியாமா இத்தனை நாளா?"

"நீ ஒண்ணு! நாளைக்கு சோழவரத்திலே நடக்கப் போற மோட்டார் ரேஸ் பற்றிச் சொல்றேன், அண்ணே ! ரெண்டு மூணு வருஷமா நடக்காம இருந்த இந்தப் பந்தயம் இப்ப நடக்குது ! பம்பாய், பங்களூர், கோயமுத்தூர், அப்புறம் நம்ப மதராஸ் ஆசாமிங்க எல்லாருமே வந்து ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள், மோட்டார் எல்லாத்தையும் ஓட்டி அவங்க அவங்க வீரதீரத்தைக் காண்பிக்கப் போறாங்களாம் !"

"அது ஏன், இந்தப் பந்தயங்களை சோழவரத்திலே கொண்டு போய் வைக்கிறாங்க? இப்படி மவுண்ட்ரோட்டிலேயே வைச்சுக்கிட்டா என்ன?"

"அங்கேதான் அண்ணே, ஒரு மைல் நீளத்துக்கு, ஏரோட்ரோமுக்கான கான்கிரீட் பாதை இருக்கு! அதிலே ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்குப் போய்த் திரும்பினா இரண்டு மைல் கணக்கு. அதை வச்சு ஓட்ட நேரத்தைக் கணக்குப் பார்ப்பாங்க !"

"ரைட் தம்பி ! நாளைக்கு அந்த மோட்டார் ரேஸைப் பார்த்துடலாம் !"

☐ "சார், சார் ! முதலாவதாக நடந்த ஸ்கூட்டர் ரேஸிலே யாருக்கு சார் ஜெயம்? நான் இப்பத்தான் வர்றேன்! மெட்ராஸி லிருந்து பதிமூணு மைலும் வர பாதை பூரா ஒரே நெரிசல்! ஓடிவரக் கார்கள் போதாதுன்னு, சினிமா ஸ்டார்கள் யாரும் வருவாங்களோன்னு அதை வேடிக்கை பார்க்கிற கூட்டம் வேறே ரோடு நடுவிலேயே நிற்கிறாங்க !"

"முதல் ரேஸிலே ஜெயம், மிஸ்டர் ஜெயகோபாலுக்கு! பெயர்ப் பொருத்தம் என்னமா இருக்கு பாருங்க! ஆறு மைல்களை எட்டு நிமிஷம் இருபத்திமூணு செகண்டிலே தாண்டியிருக்கிறார்!"

☐ அடுத்த பந்தயம் இந்தியாவில் தயாரான 250 சி. சி. வரை அளவுள்ள மோட்டார்





நம்பர் ஜாவா மூன்றுவது கஜ தூரத்திலே நின்று 'நஹி ஜாவுங்கா' என்று சொல்வது போல் மக்கர் செய்கிறது. அதன் உரிமையாளர் அத்தனை கோபத்தையும் வைத்து அதை உதை உதை என்று உதைக்கிறார்! ஊஹூம்... ஊஹூம்! பூரண சத்தியாக்கிரகம்! பாவம்! அதைத் தள்ளிக் கொண்டு பந்தயப் பாதையை விட்டு வெளியேறுகிறார். இந்தப் பந்தயத்துக்கான எட்டு மைல் தூரத்தை ஒன்பது நிமிடம் நாற்பது புள்ளி எட்டு விநாடிகளில் கடந்து பிரபாகர் முதல் பரிசைப் பெறுகிறார்!



★ மேலே: வெற்றி பெற்ற ஷெரிப் தயான் (7)

★ எதிரில்: பியட் கார் ரேஸில் முதல்வதாக வந்த கோயம்புத்தூர் ராஜகோபால்.

★ கீழே: ரசிகர்களும் முதல் போட்டியில் ஜெயமடைந்த ஜெய கோபாலும்.

சைக்கிள்களுக்கான பந்தயம். 'ராஜ் தூத்'. 'ஜாவா' ரகங்கள்தான் தென்படுகின்றன. பந்தயத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் சிலருக்கு, அவருடைய நண்பர்கள், மோட்டார் சைக்கிள்களைக் கொண்டு போய் நிறுத்துகிறார்கள். சிலர் ரப்பர் ஜாக்கெட், இரும்புக் குல்லாய் மாட்ட உதவி செய்கிறார்கள். சரித்திரக் கதாநாயகர்களுக்கு அரண்மனை ஊழியர்கள் குதிரைகளைக் கொண்டு போய் நிறுத்தும் காட்சிகள் நினைவுக்கு வருகின்றன. அமர்க்களமான ஜபர்தஸ்துக்கள். மோட்டார் சைக்கிள்களுக்கே உரித்தான 'டர் டர்' சத்தம் வானையும் காதையும் பிளக்கின்றன!

பந்தயம் ஆரம்பமாகிறது. முந்திரிக் கொட்டை போல் புறப்பட்ட பதினாறும்

காட்சி மாற்றமாக, மோட்டார் கார்களுக்கான பந்தயங்கள் ஆரம்பமாகின்றன. ஹெரால்ட் கார்களுக்கும், அம்பாஸிடர் கார்களுக்கும் தனித் தனிப் பந்தயங்கள். பங்களூர் ராமச்சந்திரனும், கோயமுத்தூர் சாந்தாராமும் முறையே முதலிடம் பெறுகிறார்கள். எட்டு மைல் தூரப் பந்தயங்கள்.

□ "என்ன மிஸ்டர்! மறுபடியும் மோட்டார் சைக்கிள் ரேஸா?"

"எஸ்! எஸ்! இதிலே 250 சி. சி. வரை அளவுள்ள எல்லா மேக் வண்டிகளும் கலந்துக்கிடலாம்! அதோ! ஃபாரின் வண்டிகளெல்லாம் நிற்குது பாருங்க!"

"பிரமாதம்! பதினேழாம் நம்பர் பறந்துட்டானே! முப்பத்து நாலும் தம் பிடிக்கிறான் மிஸ்டர்!"





''தம் பிடிச்சானு?.... இப்போ ஏழாம் நம்பர் இடையிலே புகுந்துட்டானே கவனிச்சீங்களா?...... கம் ஆன் ஸெவன்!''

''பதினேழு விடமாட்டான் சார்! ஏழாம் நம்பர் சத்தத்தோடு சரி!''

''பாரையா பாரையா! வின்னிங்ஸ்பாட்! என்ன சொல்றே?''

''ஹா! வொண்டர்புல்! வொண்டர்புல்! ஏழாம் நம்பர் பிரமாதமா சில அங்குல வித்தியாசத்திலே மூக்கை நீட்டி வின் பண்ணிட்டானே!''

''அது யாரு தெரியுமா?... நம்ப ஊர் ஷெரீப் தயான்தான்!''

''இரண்டாவதாக வந்தது?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே 'மேட் இன் இந்தியா' வண்டியிலே வந்து முதல் பிரைஸ் வாங்கலே?.... பிரபாகர்! அவர் தான்!''

''ஏழாம் நம்பர் 'ஹோண்டா' மிஷின்! அதுதான் அடிச்சுட்டான்!''



மூன்று பரிசுகளைப் பெற்ற கோண்டால் மகாராஜா

☐ பியட் கார், அப்புறம் எல்லா மேக்குகளுக்குமான (1500 சி. சி. வரை) கார்கள் பந்தயங்கள் தொடங்குகின்றன. இந்த இரண்டாவது பந்தயத்தில், பந்தயங்களுக்கென்றே தயாரிக்கப்பட்ட இரண்டு சித்திரக் குள்ளக் கார்கள் பங்கெடுத்துக் கொள்கின்றன. ரசிகர்கள் ஏற்கனவே பார்த்திருக்கும் பல ஆங்கிலத் திரைப்படங்களை நினைவூட்டிக் கொண்டு, அந்தச் சிறு கார்கள் வாயு வேகமாக ஓடப் போவதைக் கண்டு களிக்கத் தயாராகிறார்கள்.

என்ன ஏமாற்றம்! அந்த இரண்டு கார்களுமே, ஆரம்ப கட்டத்திலேயே பெருமூச்சு விட்டுப் பின்தங்கி ஒதுங்கி விடுகின்றன.

கோயமுத்தூர் ராஜகோபால் தம் பியட் மூலமும் கோயமுத்தூர் சாந்தாராம் தம் பீயூகாட் (Puegot) மூலமும் முதலிடங்களைப் பெறுகிறார்கள்.

☐ ''இந்த ஐட்டத்திலேயும் ஷெரீப்தயான் அடித்து விடுவார். ஐ ஆம் ஷ்யூர்.''

''ஐ டவுட் இட். பம்பாய் டையர்வாலா 'நார்ட்டன் மிங்ஸ்' மிஷின் கொண்டு வந்திருக்கான்.''

''ஷெரீபோட 'ஹோண்டா' நல்ல வீட் கொடுத்திருக்கே.....!''

''யூ ஸீ, யூ ஸீ, அந்த ரெண்டுலே டயர்வாலா முந்திட்டானே!...... இனிமே விடமாட்டான்.....!''

''ஐயையோ! தொண்ணூற்றைந்தாம் என் வண்டி என்ன அமர்க்களம் பண்ணுகிறது!''

''சும்மா 'சொய்ங்', 'சொய்ங்' என்று ஓடிண்டு இருந்தா? ஒரு என்டர்டெயின்மெண்ட் வேண்டாம்? அதுதான் அந்த வண்டி வழியிலே கிடந்த ஒரு வைக்கோற் போரையும் இழுத்துக் கொண்டு போகிறது!''

''ஹா! டயர்வாலா வின் பண்ணிட்டான்! பதினாறு மைல் ரேஸ்! பதினாறு நிமிஷம் ஐம்பத்தி இரண்டு செகண்ட்! ஒண்டர்புல்!''

''இன்னும் ஒரு மோட்டார் சைக்கிள் ரேஸ், எல்லா ரக வண்டிக்கும் மொத்தமாக இருக்கே! அதிலே இந்த 'ஹோண்டா' அடிக்கிறதா, பார்க்கலாம்!''

☐ எந்த ரகக் கார்களும் கலந்து கொள்ளும் பந்தயம். வானவெளி வீரர்கள் மாதிரி சில காரோட்டிகள் வந்து அமர்கிறார்கள். பல ரகக் கார்கள். பத்து மைல் தூரப் பந்தயம்.

பம்பாயிலிருந்து வந்திருக்கும் கோண்டால் மகாராஜா தம் 'ஜாகுவார்' காரை அலட்சியமாக விரட்டுகிறார். 'சொர், சொர்' என்று அது பறக்கிறது. பத்து நிமிடம் 31. விநாடியில் வந்து முதல் பரிசைப் பெறுவதோடு நிற்காமல், மிகக் குறுகிய காலத்தில் அதாவது இரண்டு மைல் தூரத்தை 1 நிமிடம் 57 விநாடிகளில் கடந்ததற்காகவும் ஒரு பரிசைத் தட்டிக் கொண்டு போகிறார்.

அடுத்தாற்போல் நடந்த கடைசி மோட்டார் சைக்கிள் போட்டி முரட்டுப் போட்டி. தாமோதருக்கும் ஷெரீப்தயானுக்குமிடையே தூரம் குறைந்து கொண்டே வருகிறது. தாமோதரின் 'நார்ட்டன் .650' முன்னால் வந்து முதலிடத்தைப் பெற்று விடுகிறது.

☐ கடைசி இரண்டு பந்தயங்களும் முடிகின்றன. ஒன்றில் கோண்டால் மகாராஜாவும் மற்றொன்றில் ராமச்சந்திரனும் வெற்றி பெறுகிறார்கள்.

மொத்தத்தில் கார் பந்தயத்தில் கோண்டால் மகாராஜாவுக்கு மூன்று பரிசுகள். மோட்டார் சைக்கிள் பந்தயத்தில் ஷெரீப் தயானுக்கு மூன்று பரிசுகள்.

இந்தப் போட்டிக்கு ஏற்பாடு செய்திருந்தவர்கள் பாராட்டப்பட வேண்டியவர்கள்! ஒரு மைல் நீளத்துக்கு அவர்கள் போட்டிருந்த காலரி, டிக்கட் வாங்கி வந்த ரசிகர்களின் கூட்டத்தால் நிறைந்து கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. பந்தயங்கள் குறிப்பிட்ட நேரம் தவறாது கனகச்சிதமாக நடந்தேறின.

வேகமும் வீரமும் நிறைந்த இந்தப் போட்டிகளில் எந்தவிதமான விபரீதமும் விபத்தும் ஏற்படாமல் அருள் செய்த ஆண்டவனுக்கும், தூரத்தையும் நேரத்தையும் பாராமல் குழுமியிருந்து போட்டியாளர்களுக்கு உற்சாகமளித்த ரசிகர்களுக்கும் இந்த விழாவை ஏற்பாடு செய்தவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

— கோமதி சுவாமிநாதன்

# இது பொன்னகரம் அல்ல!

ஜெகசிற்பியன்




தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்து கிடந்த முரளிக்குக் கூடத்து அறையில் விளக்குப் போட்டதுகூடத் தெரியவில்லை.

''அப்பா! அம்மா கூப்பிடுது!''

திடுக்குற்று எழுந்த முரளி சுற்று முற்றும் பார்த்தான். வெளியே நன்றாக இருட்டிவிட்டிருந்தது. ஏழு மணிக்கு மேல் ஆகியிருக்கலாம். அவனுடைய ஐந்து வயதான மூத்த மகள் வசந்தி பயப் பிராந்தியுடன் அவனை அண்ணாந்து பார்த்துக் கொண்டு அருகில் வந்து நின்றாள்.

முரளியின் உடல் இலேசாக நடுங்கியது. மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. மகளை அன்புடன் அணைத்தவாறு, ''என்னையா அம்மா கூப்பிடறா?'' என்று குழறிக் கேட்டுக் கொண்டே படுக்கை அறையை நோக்கி மெல்ல நடந்தான்.

அந்த அறையில் கால் வைத்ததுமே மருந்து வாடை குப்பென்று வீசி அவன் நாசியைத் துளைத்தது. சன்னல்களின் கீழ்க் கதவுகளெல்லாம் சாத்தப் பட்டிருந்தன. அவற்றின் கட்டைச் சுவர்களில் வித விதமான மருந்துப் புட்டிகளும், மாத்திரைப் குப்பிகளும் தாறுமாறுகக் கிடந்தன. மேலண்டைச் சன்னலோரம் ஓர் ஒற்றைக் கட்டில். அதன் தலைமாட்டுப் பக்கம் இருந்த சிறிய ஸ்டூலின் மீது ஹார்லிக்ஸ் பாட்டில், அவுன்ஸ் கிளாஸ், சில மருந்துப் புட்டிகள், ஒரு கண்ணாடித் தம்ளர், காய்ந்து சுருங்கிய ஆரஞ்சுப் பழங்கள் இரண்டு, எறும்பு மொய்த்த ரொட்டித் துண்டுகள் இத்யாதி. கட்டிலின் கீழே கால்மாட்டுப் பக்கம் மூடியிட்ட 'பெட்பான்' ஒன்றும் மறைவாகக் கிடந்தது.







இப்படி ஓர் ஆஸ்பத்திரி வார்டு போல் காட்சியளித்த அந்தப் படுக்கை அறையில் நோயாளி யாரும் இருப்பதாகத் தெரியவில்லையே!...

அதோ, கட்டிலின் நடுவே கொசுவி முறுக்கிப் போட்ட பட்டுப் புடவை மாதிரி படுக்கையோடு படுக்கையாக ஒட்டிக் கிடக்கிறதே அது என்ன? வெள்ளை உறையிட்ட தலையணையின் பெரும் பகுதியை அவிழ்ந்து கலைந்த கருங்கூந்தல் பரவிப் படர்ந்து மறைத்திருக்க, அதற்குக் கீழே கும்பிச் சிறுத்த வெள்ளரிப் பழம்போல் நீளுருண்டையான முகம் ஒன்று தலையணைக்குள் புதைந்திருப்பது தெரிகிறது!

கட்டிலின் தலைமாட்டுப் பக்கம் போய் நின்ற முரளியின் பார்வை முதலில் எதிர்ச் சுவரை நோக்கிச் சென்றது. அங்கே இரண்டு புகைப் படங்கள் மாட்டப்பட்டிருந்தன. ஒன்றில் ஓர் எழிலார்ந்த இளம் பெண் ஏதோ ஒரு விழாப் பந்தல் மேடையில் பிரபலமான அரசியல் கட்சித் தலைவர் ஒருவரிடமிருந்து நற்சாட்சிப் பத்திரம் பெறுகிறாள். இன்னொன்றில் அழகும் கம்பீரமுமான ஓர் இளைஞன் பெரிய வெள்ளிக்

கோப்பையை ஏந்திக் கொண்டு நிற்கிறான். விளையாட்டு உடையுடன் விளங்கின அவனது காலடியில் ஒரு கால் பந்து கிடக்கிறது. இவ்வாறு அப்படங்களில் தோற்றமளிக்கும் அவர்கள் யார்?

அந்த இளைஞன்தான் இன்று இதோ முப்பது வயசு வாலிபனாக நிற்கும் முரளி. அடுத்த படத்தில் இருக்கும் அவ்வழகிய இளம் பெண் அவனுடைய மனைவி கோமதி. அவள் எங்கே?

புகைப்படங்கள் மீது சென்ற பார்வையை இழுத்துக் கீழே தாழ்த்திக் கொண்டு கட்டி லின் தலைப்புச் சட்டத்தின் மேல் இரு கை களையும் ஊன்றியவாறு மெல்லக் குனிந்த முரளி, ''கோமு, என்னைக் கூப்பிட்ட யாமே? என்ன வேண்டும்?'' என்று வாஞ் சையும் துயரமும் கப்பிய குரலில் கேட் டான்.

தலையணைப் புதைவில் ஒரு நெளிவு. போர்வைச் சுருளினுள் ஒரு மெல்லசைவு. அதைத் தொடர்ந்து வேதனை செறிந்த முனகல் ஒலி.

''என்ன கோமு, என்ன வேண்டும் உனக்கு?''

பதில் இல்லை.

போர்வையைக் கொஞ்சமாக விலக்கிறான் முரளி. தலையணையில் கவிந்து கிடந்த கூந்தலையும் ஒருபுறமாக ஒதுக்கினான். இப் போது அந்தக் கட்டிலில் ஒரு நோயாளிப் பெண் படுத்திருப்பது தெரிகிறது. பெண் உருவமா அது? தோலால் இழுத்துப் போர்த்தப்பட்ட வெறும் எலும்புக் கூடு!

இவள்தான் அதோ, அந்தப் புகைப் படத்தில் அத்தனை எழிலரசியாய்க் காட்சி தரும் கோமதியா? ஆமாம்; ஆயிரம் முறை சத்தியம் செய்த பின் ஒருவாறு நம்பித் தீர வேண்டிய உண்மை.

அவள் அவனை அழைத்திருக்க மாட்டாள். அவளுடைய முனகலைக் கேட்டுக் குழந்தைப் பெண் அப்படி நினைத்துக் கொண்டு வந்து சொல்லி யிருக்கிறது.

முரளி பின்னால் திரும்பிப் பார்த்தான். சிறுமி வசந்தி வாசற் கதவருகில் பயப் பிராந்தியுடன் விழித்தபடி நின்றிருந்தாள். அவளுக்குத் தன் அம்மாவிடம் நெருங்கவே பயம். கொஞ்ச நாட்களாக இந்த அறைப் பக்கம் அவள் வருவதுமில்லை.

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு மெல்லத் திரும்பி நடந்தான் முரளி.

''இப்படியே எட்டி எட்டிப் பார்க்கிறதும் மணிக் கணக்கில் உட்கார்ந்து மோட்டு வளையை வெறிக்க எண்ணமிடுகிறதுமாக இருந்தால் மாத்திரம் போதுமா? ஆக வேண்டிய காரியத்துக்கு எதனுச்சும் வழி பண்ணவேண்டாமா? நேரமாக ஆக நிலைமை மோசமாகிக்கிட்டுப் போறதே!.... என்ன தான் மனசில் நினைப்போ தெரியலை...''

ஆத்திரமும் அழுகையுமாக வெளிப்பட்ட இந்தப் பேச்சுக் குரல் கேட்டுச் சட்டென்று நின்று நிமிர்ந்தான் அவன். படுக்கையறைக் குப் பக்கத்து அறையில் உட்கார்ந்திருந்த ஒரு முதியவள் தன் மடியிலே மூன்று மாதக் குழந்தையொன்றைப் போட்டுக் கொண்டு அதற்குப் புட்டிப் பால் ஊட்டியவாறு இப் படிச் சொன்னாள். அவள் கோமதியின் தாய். முரளியின் மாமியார்.

சற்று நேரம் அவளையே வெறித்துப் பார்த்த முரளி சரேலெனக் கூடத்து அறைக்கு வந்து பழையபடி பிரம்பு நாற் காலியில் குத்துக் காலிட்டு உட்கார்ந்து தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

'மாமியார் சொல்வதும் சரிதானே? இப்ப டியே வெறுமே உட்கார்ந்திருந்தால் நிலைமை இன்னும் மோசமாகத்தானே செய்யும்? எல்லாரும் எதிர்பார்ப்பது போல் ஏதாவது நடந்து விட்டால் அப்புறம் காலத்துக்கும் தீராப் பழியாய்ச் சுமக்க வேண்டியதாகி விடுமே!'

அவன் உடல் அதிர்ந்தது. அவசரமாகத் தன் சட்டை ஜேபியிலிருந்து ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தான். அன்று மத்தியானம் டாக்டர் எழுதிக் கொடுத்துவிட்டுப் போன பிரிஸ்கிரிப்ஷன் அது. ஏழெட்டு வகையான மருந்துகள், மாத்திரைகளுக்கு அதிலே பட்டியல் இருக்கப் பட்டிருந்தது. அவற்றில் ஓர் ஊசி மருந்தை அடிக் கோடிட்டிருந்தார்.

''நோயாளியின் நிலைமை என் நம்பிக்கையி லிருந்து நழுவிப் போய்க் கொண்டிருக்கிறது. ஆனாலும் இந்த ஊசி மருந்தைக் கொண்டு ஒரு கடைசி முயற்சி பண்ணிப் பார்த்து விடலாம் என்று நினைக் கிறேன். அதில் நிச்சயமாகக் குணத் தையும் எதிர்பார்க்கிறேன். இதை வாங்கி வந்ததும் எனக்குப் போன் பண்ணுங்கள். எந்நேரமா யிருந்தா லும் புறப்பட்டு வந்து விடுகிறேன்.''

டாக்டர் சொல்லிவிட்டுப் போன தகவல் இது. ஆனால் அந்த ஊசி மருந்தின் விலையோ? முப்பது ரூபாய் ஆகும் என்று கடைக்காரர் சொல்லி விட்டார்!

முப்பது ரூபாய் — அந்த முப்பது ரூபாய்க்கு எங்கே போவது? என்ன செய்வது என்ற கேள்விதான் இப் போது முரளியின் மூளையில் நெருஞ்சி முட்களாகக் குத்தி நெருடிக் கொண் டிருக்கிறது.





மணி எட்டு. திடுமென்று எழுந்து நின்றான் முரளி.

'ஆமாம்; அது ஓர் இடம்தான் பாக்கி. அங்கேயும் போய்க் கேட்டுப் பார்த்துவிடலாமே?'

சுறுசுறுப்புடன் காலில் செருப்பை மாட்டிக்கொண்டு வெளியே புறப்படத் தயாரானான். ஒரு சிறு தயக்கம். தன்னையே மேலும் கீழுமாகப் பார்த்துக் கொண்டான்.

'சே, இரக்கப் போனாலும் சிறக்கப் போக வேண்டாமா?'

அவன் அதே பரபரப்போடு அடுத்த அறைக்குச் சென்று நல்ல பேண்டும், ஸ்லாக்கும் அணிந்து கொண்டு படுக்கை யறைக்கு வந்தான். வெளியில் செல்லு முன் தன் மனைவியின் முகத்தை ஒருமுறை பார்த்துவிட வேண்டுமென்று ஏதோ ஓர் அவநம்பிக்கையால் விளைந்த உள்ளுணர்வு அவனை அங்கு தள்ளிக் கொண்டு வந்தது.

அவளுக்கும் அதே போன்ற உணர்வு ஏற்பட்டிருக்க வேண்டும். இல்லையானால் இவ்வளவு நேரம் பிரக்ஞை இழந்தவள் போல் படுத்துக் கிடந்தவள் மெல்லக் கண் விழித்து மிகுந்த சிரமத்தோடு ஒருக் களித்துத் திரும்பி அவனைப் பார்க்க முயற்சிப்பாளா?

''நான் மருந்துக் கடை வரையில் போய் வருகிறேன். கோமு! வரும் போது டாக்டரையும் கையோடு அழைத்து வந்துவிடுவேன். உனக்கு ஒன்றுமில்லை. தைரியமாக இரு. நாளைக்குள் எல்லாம் சரியாகி, எழுந்து உட்கார்ந்து விடுவாய்.''

கோமதி அவனையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். ஏன் அப்படிப் பார்க்கிறாள்?

இத்தனை துன்பத்திலும் துயரத்திலும் கூட இவன் இத்தனை ஆண்மைப் பொலிவோடு கம்பீரமாகக் காட்சியளிப்பதைப் பார்த்து மனம் பூரிக்கிறாளா? எந்த நிலையிலும் ஒரு பெண்ணின் மனம் தன் கணவனைப் பற்றிய கவர்ச்சி உணர்ச்சியை மட்டும் இழப்பதே இல்லையா?

வெளிறிச் சிறுத்த அவள் முகத்தில் ஒரு பெருமிதம்! உலர்ந்த உதடுகளில் ஓர் இள நகை! இரத்தப் பசையற்ற வெளுத்த விழிகளில் ஒரு மகிழ்ச்சி - மின்னொளி!

அவனுக்கு விடையளிப்பது போல் மெல்லத் தலையசைத்த கோமதி மறுபக்கம் திரும்பிப் படுத்தாள். ஆழ்ந்த கவலையுடன் பெருமூச்சு விட்டவாறு வெளியே கிளம்பினான் முரளி.

செல்வச் செழிப்பான குடும்பத்தில் ஒரே பிள்ளையாகப் பிறந்து சீரும் சிறப்புமாக வளர்ந்தவன்தான் முரளி. ஆனால் அந்த நிலை அவனுடைய பத்தாவது வயதில் இறங்குமுகமாகிப் பன்னிரண்டாவது வயதில் அதல பாதாளத்துக்கே சரிந்து போயிற்று.

முரளியின் தந்தை ஓர் ஏலக் கம்பெனி வைத்து நடத்தியவர். அமோகமாக நடந்து கொண்டிருந்த அந்தக் கம்பெனியே எதிர் பாராத விதமாக ஏற்பட்ட சில சங்கடங்களால் ஏலத்தில் போகும்படியாயிற்று. அப்புறம் அவர் எவ்வளவோ முயற்சி பண்ணிப் பார்த்தும் தலை தூக்க முடியவில்லை. நாளுக்கு நாள் நிலைமை மோசமாக அது சகிக்க முடியாத கட்டத்தை நெருங்கியதும் ஒருநாள் இரவு படுக்கப் போனவர், மறு நாள் எழுந்திருக்கவில்லை. ஒரேயடியாகத் தூங்கிப் போனார்.

அப்போது முரளிக்கு வயது பதினேழு. கல்லூரியில் புகுமுக வகுப்பை முடித்திருந்தான். மேலே படிப்பதற்கு வசதி இல்லை. அப்படி இருந்தாலும் அதை அவனால் வெற்றிகரமாக மேற்கொள்ள முடியாது. காரணம், படிப்பிலே அவன் அத்தனை மந்தம். செல்வத்தில் பிறந்து, செல்வமாக வளர்ந்த பிள்ளையாயிற்றே. வேறு எப்படி இருக்கும்? ஆனால் விளையாட்டில் ரொம்பக் கெட்டிக்காரன். கால் பந்தாட்டத்தில் மிகவும் திறமைசாலி. அதிலே, அவன் படித்த பள்ளிக்கு நிரம்பப் புகழ் தேடித்

தந்திருக்கிறான். பல கேடயங்களும் கோப்பைகளும் பெற்றிருக்கிறான். அந்தத் துறையில் அவன் இன்னும் முன்னேறியிருக்க முடியும். ஆனால் குடும்பநிலை அதற்கு இடம் தரவில்லை. அவனுடைய தாயார் தன்வசமிருந்த நகை நட்டுக்களை ஒவ்வொன்றாக விற்று நாட்களைக் கடத்தி வந்தாள்.

அக்கம் பக்கத்து வீட்டாரின் யோசனையின் பேரில் உடற்பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தான் முரளி. அவனுக்கு அதுதான் பிடித்தமான துறையாயிருந்தது. பயிற்சி முடிந்து வெளியே வந்ததும் உயர்நிலைப் பள்ளி ஒன்றில் 'டிரில் மாஸ்ட'ராகச் சேர்ந்தான்.

அந்தப் பள்ளியில் ஒரு பெண். டீச்சர் பெயர் விமலா. வளமான குடும்பத்தைச் சேர்ந்தவள். பொழுது போக்குக்காக உபாத்தினி வேலையை மேற்கொண்டிருந்தாள். அவளுக்கு முரளியின் மீது கண் விழுந்தது. அவனை அவள் விரட்டத் தொடங்கினாள். வலிய வருவது எதுவுமே ருசிப்பதில்லை யல்லவா? அவன் நிர்த்தாட்சிண்யமாக அவளை உதறினான். ஒதுங்கிப் போனான். ஆனாலும் அவள் விடவில்லை. அவனுடைய கம்பீரமான தோற்றம், திண்மையான உடற்கட்டு, வாலிபம் செறிந்த முரட்டு ஸ்வபாவம்—இவை அவளைப் பைத்தியமாக அடித்து விட்டன. தன் பெற்றோரிடம் சொல்லி, முரளியின் தாயிடம் போய்க் கல்யாணத்துக்கு வரன் கேட்குமாறு செய்தாள். தாயார்க்காரிக்கு ஒரே மகிழ்ச்சி. ஒப்புதலும் தந்தாள். ஆனால் முரளியோ அடியோடு முரண்டி விட்டான். அதோடு நில்லாமல் அந்தப் பள்ளியிலிருந்து 'டிரில் மாஸ்டர்' வேலையையும் விட்டு விலகிக் கொண்டான்.

அடுத்து, மாநகராட்சி மன்றத்தின் விளையாட்டு மைதானம் ஒன்றில் 'ஃபிஸிகல் இன்ஸ்ட்ரக்ட'ராக வேலைக்கு அமர்ந்தான். அப்போதுதான் அவன் கோமதியைச் சந்தித்தான்; காதலித்துக் கல்யாணமும் செய்து கொண்டான்.

கோமதி எளிய குடும்பத்தில் பிறந்தவள். சிறு வயதிலேயே தந்தையை இழந்தவள்.

கல்யாணமான ஆறாவது மாசம் முரளி ஒரு நல்ல செய்தியைக் கேள்விப்பட்டான். அவன் உதறித் தள்ளி விட்டு வந்த டிரில் மாஸ்டர் வேலையை அந்தப் பள்ளியில் புதிதாக ஏற்றுக் கொண்டிருந்தான் ரகுநாதன் என்பவன். அவனை விமலா விரட்டிப் பிடித்துக் கல்யாணமும் பண்ணிக் கொண்டாள் என்னும் செய்தியே அது.

தன் பின்னே பசை இல்லாத இடத்தில் போய்ப் பெண் கொண்டு விட்டானே என்று முரளியின் தாய்க்கு ரொம்பவும் மனச்சோர்வு. கவலை. அதனாலோ என்னவோ அவள் மறு வருஷமே காலமாகிப் போனாள். அவளுடைய இடத்தில் கோமதியின் தாய் வந்து தங்கிக் கொண்டாள்.

அந்தச் சிறிய குடும்பம் அமைதியாக நாட்களைக் கடத்தியது. குறைந்த வருமானம் தான் என்றாலும் வரவுக்குள் அடங்கும் செலவாகச் செய்து அதிலே நிறைவையும் கண்டது.

முதல் குழந்தை வசந்திக்குப் பிறகு நாலு வருஷம் வரை ஒன்றும் இல்லை. கடவுளாகப் பார்த்துச் செய்த உதவி அது என்று முரளி எண்ணிக் கொண்டான். ஐந்தாவது வருஷம் கோமதி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அந்தக் குழந்தை வயிற்றிலிருக்கும்போதே தாய்க்கு ரொம்பக் கஷ்டம் கொடுத்தது. பிரசவமும் சுகப் பிரசவமாக இல்லை. ஆயுத கேஸில் பிறந்தது. அப்புறம் கோமதி ஏதேதோ நோய் நொடியில் படுத்துப் படுத்து எழுந்து கடைசியில் கடந்த ஒரு மாதமாகப் படுத்த படுக்கையாகவே ஆகிவிட்டாள்.

முரளி அவளை மிகவும் கவனமாகவே பார்த்தான். தன் சக்திக்கு மீறியும் கடன் உடன் பட்டு, மருந்து, மாத்திரை, டானிக் என்று வாங்கிக் கொடுத்தான். அப்புறம் கைவசமிருந்த ஒன்றிரண்டு நகைகள் அடகுக் கடைக்குப் போயின. எதுவும் பிரயோசனப் படவில்லை. எங்காவது ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்க்கலாம் என்றால், கோமதி அதற்கு ஒரேயடியாக முரண்டினாள். 'செத்தாலும் வீட்டில்தான் சாவேன்; ஆஸ்பத்திரிக்கு மட்டும் போக மாட்டேன்' என்று பிடிவாதமாக மறுத்தாள். முரளியால் என்ன செய்ய முடியும்?

இன்று காலை முதலே அவளுடைய நிலைமை ரொம்ப மோசம். டாக்டர் வந்து பார்த்து, 'ஒரு கடைசி முயற்சி' செய்வதாகச் சொல்லி உடனடித் தேவைக்கான மருந்துகள் எழுதிக் கொடுத்து விட்டுப் போய் விட்டார். மாசக் கடைசி வாரம். சம்பளத்துக்கு இன்னும் பத்துப் பன்னிரண்டு நாட்கள் இருக்கின்றன. குறைந்த பட்சம் முப்பத்தைந்து ரூபாயாவது வேண்டும். என்ன செய்வது? எங்கெங்கோ போய் முட்டி மோதிப் பார்த்தான். எங்குமே ஒரு பைசாவும் பெயரவில்லை. முயற்சிக்கு இனி இடமில்லை என்று முடங்கி உட்கார்ந்து விட்டான்.

இந்நிலையில்தான் இப்போது திடுமென்று ஒரு யோசனை. விமலாவின் கணவன் ரகுநாதன் முரளிக்கு ஒரு காலத்தில் நெருங்கிய நண்பனாக இருந்தவன். இருவரும் உடற்பயிற்சிக் கல்லூரியில் ஒன்றாகப் படித்துத் தேறி வந்தவர்கள். அவன் விமலாவை மணந்து கொண்டான் என்று கேள்விப்பட்ட பிறகு இவனாகவே கொஞ்சம் ஒதுங்கிக்கொண்டான். எங்காவது வழியில் பார்த்தால் மட்டும் கட்டிப் பிடித்துக் குசலம் விசாரித்துக் கொள்வார்கள்.

'அந்த ரகுநாதனிடம் போய் ஒரு நாற்பது ரூபாய் கடனாகக் கேட்டால் என்ன?'—மறு சிந்தனைக்கே இடம் வைத்துக் கொள்ளாமல் புறப்பட்டுவிட்டான் முரளி.

சுருக்கமான பதில்: ''அவர் ஊரில் இல்லை. ஒரு ஹாக்கி டோர்னமென்டில் கலந்து கொள்ளப் பெங்களூர் போயிருக்கிறார்.''

படீரென்று கதவு சாத்தப்பட்டது. பதில் சொன்னவள் விமலா. கதவை அடித்துச் சாத்தியவளும் அவளே.

விக்கித்து வெலவெலத்து வராந்தாவில் அப்படியே நின்றுவிட்டான் முரளி. ஏமாற்

றத்துக்கு உள்ளான, அல்லது உதாசீனப்படுத்தப்பட்ட ஒரு பெண்ணின் மனம் எந்த அளவுக்கு வக்கிரமடைந்து, விரோத குரோதத்தை வளர்த்துக் கொள்ளும் என்பதை விமலா நன்கு நிரூபித்துக் காட்டிவிட்டாள். அப்படி அவள் நடந்து கொண்டதிலும் ஒரு நியாயம் இருக்கத்தானே செய்கிறது?

விமலா சொன்ன தகவல் உண்மையாகவும் இருக்கலாம். ஏனென்றால் ரகுநாதன் வீட்டில் இருந்தால் முரளியின் குரல் கேட்டு வெளியே வராமல் இருக்கவே மாட்டான். அத்தனை நல்ல மனிதன் அவன்.

நடைப் பிணமாகத் தெருவில் இறங்கி நடந்தான் முரளி.

'மருந்து வாங்கி வருவதற்காகப் போகிறேன்; வரும்போது டாக்டரையும் உடன் அழைத்து வருகிறேன். கவலைப்படாதே. தைரியமாக இரு.'

வீட்டை விட்டுப் புறப்படும்போது தன் அன்பு மனைவியிடம் சொல்லி விட்டு வந்ததை நினைத்துப் பார்த்தான். வெட்கமும் வேதனையும் அவனைப் பிடுங்கித் தின்றன. 'இப்போது வெறுங்கையோடு அவள் முகத்தில் மட்டுமல்ல, மாமியார் முகத்திலும் போய் எப்படி விழிப்பேன்?'

முரளிக்குத் திடீரென்று ஒரு கிலி பிடித்துக் கொண்டது. கோமதியை இழந்து விடுவோமோ என்ற திகில்தான் அது. அதனால் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு விரைவில் வீடு போய்ச் சேர்ந்து விடவேண்டும் என்று அவன் பரபரத்தான்.

ஜேபியில் கொஞ்சம் சில்லறைக் காசு இருந்தது. சுற்று முற்றும் பார்த்தான்.

''இன்னா சார், இந்த நேரத்திலே இம்மாந்தூரம் வந்திட்டிருக்கிறே? ஊட்டுக்குப் போவணுமா? வா, சார்!'' என்று உற்சாகமாக சைக்கிள் ரிக்ஷாவைக் கொண்டுவந்து முரளியின் அருகில் நிறுத்தினான் ஏழுமலை.

கடந்த மூன்று மாதங்களில் பல முறை முரளி தன் மனைவி கோமதியை இந்த ஏழுமலையின் ரிக்ஷாவில் வைத்து டாக்டர் வீட்டுக்குக் கொண்டு போய் வந்திருக்கிறான்.

''ஊட்டிலே அம்மா சீக்காயிருந்தாங்களே, இப்ப தேவலையா சார்?''

முரளி பதில் ஏதும் சொல்லாமல் ரிக்ஷாவில் ஏறி அமர்ந்தான்.

அவனை ஒரு விநாடி கூர்ந்து பார்த்த ஏழுமலை எதையோ புரிந்து கொண்டவன் போல் அநுதாபத்துடன் தலையாட்டியவாறு சைக்கிள் ரிக்ஷாவைச் சற்றுதூரம் வேகமாகத் தள்ளிக் கொண்டு போய்ச் சட்டென்று ஏறி உட்கார்ந்தான்.

''கொஞ்சம் சீக்கிரமாகப் போகணும்பா! உன்னால் ஆனவரை வேகமாக மிதி!''

சிறிது தூரம் விரைவாக ரிக்ஷாவைச் செலுத்திச் சென்ற ஏழுமலை, மெல்ல, 'பிரேக்'கை அழுத்திக் கொண்டே பின்னால் திரும்பி, ''ஏன் சார், ஊட்டிலே அம்மா ரொம்ப டேஞ்சரா?'' என்று பரிவுடன் விசாரித்தான்.

''ஆமாம்பா! அதனால்தான் சீக்கிரம் போகச் சொல்கிறேன்.''

''அவ்வளோ டேஞ்சராயிருக்கிற சீக்காளியை ஒண்டியா உட்டுட்டு இந்நேரத்திலே இங்கே எதுக்கு ஸார் வந்தே?''

தன் நெஞ்சில் அடைத்துக் கொண்டிருக்கும் துயரங்களை யாரிடமாவது — எதனிடமாவது கூட - வாய் விட்டுப் பேசிக் கொஞ்சமேனும் குறைக்காவிட்டால் தன் மூச்சே முட்டி நின்றுவிடும் போன்ற ஒரு வேதனையால் பரபரத்துக் கொண்டிருந்த முரளி கம்மிய குரலில் சொன்னான்: ''உன்னிடம் சொல்வதால் என் கௌரவம் ஒன்றும் கெட்டு விடாது, ஏழுமலை! ஏனென்றால் உன் நிலையில் தான் இப்போது நானும் இருக்கிறேன். ஒரு கால் உன்னைவிட என் நிலைமை இன்னும் மோசமாக இருக்கலாம். நான் ரிக்ஷாவில் உட்கார்ந்திருக்கிறேன்; நீ ஓட்டிச் செல்கிறாய். இதைத் தவிர இச்சமயம் உனக்கும் எனக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை.'

''இன்னா சார், நான் ஒண்ணு கேட்டா, நீ இன்னான்னமோ பிறுத்திக்கினு போறே!'' என்று சிரித்தான் ஏழுமலை.

''ஆமாம்பா! இது மாதக் கடைசி இல்லையா? கையிலே பணம் இல்லை. அப்படி இப்படிப் புரட்டிக் கொள்ளவும் வழியில்லை. இந்தச் சமயம் பார்த்து என் வீட்டுக்காரியின் உடல்நிலை ரொம்பவும் மோசமாகி விட்டிருக்கிறது. டாக்டரே நம்பிக்கை யிழந்து விட்டார். ஆனாலும் இறுதி முயற்சியாக ஓர் ஊசி மருந்து போட்டுப் பார்க்கலாம் என்கிறார். அந்த மருந்தின் விலை முப்பது ரூபாய்க்கு மேல் ஆகிறது. மத்தியானத்திலிருந்து அலையாய் அலைந்து பார்த்தேன். எங்கும் சாயவில்லை. கடைசியாக இங்கே இருக்கும் என் நண்பன் ஒருவனிடம் கேட்டுப் பார்க்கலாம் என்று வந்தேன். துரதிர்ஷ்டம் அவன் வெளியூர் போய்விட்டானாம்.''

ரிக்ஷாவை வேகமாக ஓட்டிச் சென்ற ஏழுமலை அதன் வேகத்தை மட்டுப்படுத்தினான். முரளியின் பரிதாப நிலையைக் கேட்டு அவனுக்கே மனம் இளகி உடல் சோர்ந்து விட்டது போலும். ''அப்படின்னா, இன்னிய ராவுக்குள்ளாற அந்த ஊசி மருந்து வாங்கலேன்னா ஊட்லே அம்மா நெலமை இன்னா சார் ஆவும்?''

''என்ன ஆகும்?...'' என்று இழுத்த முரளி அடுத்து ஏதோ சொல்ல வாயெடுத்தவன் அதைச் சொல்ல முடியாமல் தொண்டை அடைத்துக் கொள்ளவே ஒரு செருமலுடன் மௌனமானான்.

சற்று தூரம் அமைதியாக ரிக்ஷாவைச் செலுத்திச் சென்ற ஏழுமலை சடாரென்று பிரேக் போட்டு நிறுத்திவிட்டுக் கீழே இறங்கி நின்று சாலை விளக்கு வெளிச்சத்தில் முரளியைக் கூர்ந்து பார்த்து எதையோ நினைத்துத் தனக்குத்தானே சிரித்துக்கொண்டான். பிறகு அதே குறும்புச் சிரிப்புடன், ''இப்ப உனக்குப் பணம் வோணும்; எவ்வளோ வோணும்? சார்! ஐம்பது ரூபா போதுமா? ஓர் இடத்திலே நான் ஏற்பாடு பண்றேன், வாங்கிக்கிறியா?'' என்றான்.

முரளிக்கு இந்தக் கேள்வி அதிர்ச்சியாக இருந்தது — சந்தோஷத்தால் ஏற்பட்ட அதிர்ச்சி. கொஞ்ச நேரம் அவனால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. ''நிஜம்

தானா ஏழுமலை?'' என்று சந்தேகம் கலந்த திணறலுடன் விளித்தான்.

''பின்னே, கம்மணுங்காட்டியுமா சொல்லுவேன்? கஸ்திப்பட்டுக்காதே சார்! பணம் கெடச்சுடும்'' என்றவாறு உற்சாகமாக ரிக்ஷாவைச் செலுத்திச் சென்றான் ஏழுமலை.

'எங்கே,' எப்படி, யாரிடம்?' என்றெல்லாம் கேள்வி கேட்க முரளி தயங்கினான். அப்படிக் கேட்டால் அவன் ஏதாவது சந்தேகப்பட்டு மறுத்து விடுவானோ என்ற பயம்!

ஏழுமலை வெகு வேகமாக ரிக்ஷாவை ஓட்டிச் சென்றான். இவ்வளவு நேரம் இல்லாத உற்சாகத்தோடு சில சினிமாப் பாட்டுக்களையும் முணு முணுத்துக் கொண்டான். எதிரே ரிக்ஷாக்களுடன் வந்த தன் சகாக்களைப் பார்த்து அசிங்கமான வார்த்தைகளால் குசலம் விசாரித்தும் கொண்டான். இதையெல்லாம் முரளி கவனிக்கவில்லை. 'ஆபத்து நேரத்தில் கடவுள் எப்படியெல்லாம் உதவச் சித்தம் கொள்கிறார்' என்பதைப் பற்றிய வியப்பான சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். 'எந்த வகையில் அந்த உதவி கிடைக்கப் போகிறது' என்பதுதான் அவனுக்கு இன்னும் புதிராக இருந்தது.

சாலையில் ஒரு திருப்பம்.

ஒரு வெற்றிலை பாக்குக் கடையண்டை ரிக்ஷாவை நிறுத்திவிட்டு இறங்கி ஓடிய ஏழுமலை தன் கைக்காசைக் கொடுத்து உயர் ரக சிகரெட் ஒன்றை வாங்கிக்கொண்டு திரும்பி வந்தான்.

''நீ சிகரெட் குடிக்கிறது பழக்கமா சார்?''

''இல்லை; ஏன்?''

''ஓ,...புட்பால் பிளேயர் இல்லே நீ?... சரிதான்; இன்னைக்கு ஒரு நாள் மட்டும் குடிச்சுக்க. இப்ப வேணும். நான் சொல்றப்ப, இன்னா?''

சிகரெட்டை முரளியின் ஜேபியில் போட்டு விட்டு வேகமாக ரிக்ஷாவைச் செலுத்தினான். ஏழுமலை. வியப்போடு அவனைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான் முரளி.

ஓடிக்கொண்டிருந்த ரிக்ஷா 'டக்'கென்று நின்றது. ஏழுமலைதான் 'பிரேக்' கயிற்றை இழுத்து ரிக்ஷாவை நிறுத்தினான். ஒரு கணம் ஏதோ யோசிப்பவன் போல் கழுத்துப் பிடரியைச் சொறிந்து விட்டுக் கொண்டு, ''வா, சார் !'' என்றவாறு இறங்கி ஒரு பெரிய பங்களாவை நோக்கி நடந்தான். அப்போது இரவு மணி பதினொன்று.

முரளிக்கு ஒரே குழப்பமாயிருந்தது. 'இவன் எங்கே அழைத்துப் போகிறான் ? யாரிடம் இட்டுச் செல்கிறான்?' — திகிலுடன் அந்தப் பங்களாவை ஏறிட்டுப் பார்த்தான். பிறகு அதன் அழகிய மதில் சுவர் வாயிலில் பதிக்கப்பெற்றிருந்த பெயர்க் கல்லின் மீது பார்வையைச் செலுத்தினான்.

அவனுக்கு ஒரே ஆச்சரியம்! ஏனென்றால், அந்தப் பெயர் அவனுக்கு மட்டுமல்ல ; நகரில் உள்ள பெரும்பாலோருக்கும் நன்கு தெரிந்தது. ஒரு பெண்ணின் பெயர் அது. அவள் பிரபலமானவள். உயர் வட்டாரங்களில் மிகுந்த செல்வாக்குப் பெற்றவள். சமூக சேவைக்காகவே தன் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டு விட்டதால் இன்னமும் அவள் திருமணம் செய்து கொள்ளவில்லையாம். வயசும் ஆகி விட்டது. முப்பத்தெழுக்கு மேல் இருக்கும்.

'இவ்வளவு பெரிய மனுஷியிடம் இவன் ஏன் என்னை அழைத்துப் போகிறான்? என் மனைவியின் உயிராபத்தான நிலைமையையும், அவளுக்கு மருந்து வாங்கிக் கொடுக்க முடியாத எனது வறுமை நிலவரத்தையும் இவளிடம் சொல்லி ஏதேனும் உதவி கோரினால் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் என்னை இங்கு அழைத்து வந்திருக்கிறானோ?'

முரளிக்கு ஒன்றும் புரியவில்லை.

''இன்னா, கூர்க்கா ! சௌக்கியமா இருக்கிறயா? எசமானியம்மாவைப் பார்க்க வந்திருக்கிறேன். உள்ளே போவலாமா?''

''ஓ.... ஏய்மலையா? நீ போவலாம்!.... அந்தர் சலோ, பாய்.....!''

உற்சாகத்துடன் பின்னால் திரும்பிய ஏழுமலை, ''வா, சார் !'' என்றவாறு பங்களாவினுள் சென்றான்.

''ஏம்பா, ஏழுமலை ! இந்த அம்மாவை உனக்கு ஏற்கனவே தெரியுமா ?'' என்று மெல்லக் கேட்டான் முரளி.

''சரியாப் போச்சு ! கொஞ்ச காலம் இங்கே கார்டனரா வேலை பார்த்திருக்கிறேன், சார் ! ஒரு விசயத்திலே எனக்கு ரொம்ப பேஜாராப் போச்சு. அதான் அந்த வேலையை ரிசைன் பண்ணிப்பிட்டுப் போயிட்டேன்.''

---



## ''குழந்தைகள் குடியரசு''

ஆதாரம் :
'சோவியத் மாதர்'

தகவல் :
சம்பத் குமார்

தனது இரு குழந்தைகளையும் இருபத்தி நான்கு மணி நேரம் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு ஒரு தகப்பனுக்கு ஏற்பட்டது. அந்த இருபத்து நான்கு மணி நேரத்தில் அத்தகப்பனரின் நடவடிக்கை விவரங்கள் :

அவர் ஐம்பத்துமூன்று முறை கதவைத் திறந்தார், பூட்ஸை இருபத்து நான்குமுறை கழற்றி அணிந்தார், பதினேழு ரொட்டித் துண்டுகளை வெட்டி வெண்ணெய் தடவினார். பக்கத்து வீட்டுக்காரர்களிடம் ஒரு முறை மன்னிப்பு கோரினார், குழந்தைகள் கேட்ட நூற்று முப்பத்தாறு கேள்விகளுக்குப் பதில் கூறினார், ஆனால் மீதி நூற்று நாற்பத்தெட்டு கேள்விகளுக்குப் பதில் கூற முடியாமல் தவித்தார். கடைசியாக..... நாற்பத்தொருமுறை தனது பொறுமையை இழந்தார் !

ஏழுமலை அந்த வீட்டில் தோட்டக்காரனாக ஊழியம் புரிந்திருக்கிறான் என்பது மட்டுமே முரளிக்குப் புரிந்தது. அதற்கு மேல் அவனால் எதையும் ஊகித்துக் கொள்ள முடியவில்லை. திகிலும் குழப்பமுமாக அவனைப் பின் தொடர்ந்தான்.

பங்களாவின் கீழ்ப் பகுதி வராந்தாவில் மட்டும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மாடியில் சில அறைகளில் வெளிச்சம் தெரிந்தது.

ரொம்பப் பழக்கப்பட்டவன் போல், 'காலிங் பெல்' பொத்தானை அழுத்தினான் ஏழுமலை. மாடியில் 'கிணுங் கிணுங்' ஒலி.

சற்றைக்கெல்லாம் கரிய நிறமாயிருந்த தடித்த பெண்மணியொருத்தி வெளியே வராந்தாவுக்கு வந்தாள். அவள் வெள்ளைப் புடவை உடுத்தியிருந்ததிலிருந்து எஜமானி அம்மாளின் அந்தரங்கக் காரியதரிசியாய் இருப்பாள் என்று எண்ணத் தோன்றியது. ஏழுமலையைப் பார்த்து இளநகை புரிந்தாள்.

இருவரும் சற்றுத் தள்ளிப் போய் நின்று இரகசியமாக ஏதோ பேசிக் கொண்டனர். பிறகு அந்தப் பெண் சாவதானமாக மாடிப் படிகளில் ஏறிச் சென்றாள். அப்படிப் போகும் போது முரளியை அவள் ஓரக் கண்ணால் கவனிக்கத் தவறவில்லை.

ஐந்து நிமிடங்கள் கடந்திருக்கும். மாடிப் படிக்கட்டின் பக்கச் சுவரில் பொருத்தி யிருந்த ஒரு விளக்கு எரிந்தது.

அதைப் பார்த்து மகிழ்ச்சியுடன் கைவிரலைச் சொடுக்கிய ஏழுமலை, "ஆ.... ரைட்டு கிடைச்சாச்சு!" என்று சிரித்துக் கொண்டே முரளியிடம் வந்து, "இன்னா, சார்! ஏற்பாடு பண்ணிப்பிட்டேன். இந்த ஊட்டு எசமானியம்மா ஐம்பது ரூபா கொடுப்பாங்க, வாங்கிக்கோ!.... அதிலே எனக்குப் பத்து ரூபா கமிஷன், இன்னா? மறந்துடாதே ஆபத்துக்குத் தோசமில்லே; சும்மா தெகிரியமா போ, சார்!" என்றான் உற்சாகமாக.

முரளியின் குழப்பம் மிகுதியாயிற்று. அவன் திருதிருவென விழித்துக் கொண்டு நின்றான்.

"கெரெட் பத்த வைச்சுக்க சார்! அட, இன்னா நீ குழந்தைப் புள்ளையாயிருக்கிறே?" என்று முரளியை உரிமையுடன் கடிந்து கொண்டான் ஏழுமலை.

அவனுடைய பேச்சிலிருந்து முரளிக்கு இப்போதுதான் ஏதோ ஒரு விஷயம் பளிச் சென்று புரியலாயிற்று. மறுகணம் அவன் உடல் கிடுகிடுவென நடுங்கியது. முகம் பேயறைபட்டது போல் வெளிறிச் சிறுத்தது. சிந்தனைக்கே இடம் தர விரும்பாதவன் போல் ஒரு முரட்டுத் திமிறலுடன் திரும்பித் தெரு வாயிலை நோக்கி விரைந்து நடந்தான்.

இதைக் கண்டு திகைத்துவிட்ட ஏழுமலை, "இன்னா சார், எதுக்கு இப்படி ஓடறே?" என்று கேட்டுக் கொண்டே அவனைப் பின் தொடர்ந்து ஓடினான்.

அந்தப் பங்களாவை விட்டு வெளியேறிச் சற்று தூரம் சென்ற முரளி சட்டென்று நின்றான். ஏழுமலையும் அவன் மேல் மோதிக் கொள்ளாத குறையாக ஓடி வந்து அருகில் நின்றான்.

ஒருகணம் அவனையே வெறித்துப் பார்த்த முரளி தனக்கேற்பட்ட அதிர்ச்சியும் திகிலும் நீங்கியவனாய் நிதானமடைந்து இளநகையுடன், "ஏம்பா! ஏழுமலை! ஒரு சின்னச் சந்தேகம். அதற்கு நீதான் பதில் சொல்வாய். உன்னால்தான் அதைச் சரியாகவும் சொல்ல முடியும்; சொல்வாயா?" என்று கேட்டான்.

அவமான உணர்ச்சியால் ஏற்பட்ட வெட்கக் குறைவுடன் கழுத்துப் பிடரியைச் சொறிந்து கொண்ட ஏழுமலை, "இன்னா சார், சந்தாய்க்கிறே? விசயம் இன்னா, கேளு!" என்றான்.

"நன்றாக யோசனை பண்ணிச் சொல். மனித வாழ்க்கையில் மனிதன் பெரிதாக மதிக்க வேண்டியது மனித உயிரையா அல்லது மனிதனின் ஆத்மாவையா?"

"ஆ...... படா கேள்விதான் இது!" என்று சிரித்த ஏழுமலை ஒரு கண நேர யோசனைக்குப் பின் சொன்னான்: "இதிலே உனக்கு இன்னா டவுட்டு? ஒலகத்திலே ஜல்ஸாவா காலம் தள்ளிட்டுப் போவணும்னு நினைக்கிறவனுக்கு உசிருதான் பெரிசு; அப்படி இல்லாம இந்த வாழ்க்கைக்கு அப்புறம் இன்னொரு வாழ்க்கையும் இருக்குதுன்னு நினைக்கிறவனுக்கு ஆத்மாதான் பெரிசு! ஏன்னா, மனுசனோட உசிரு மனுசனுக்குச் சொந்தமில்லே. அப்படி இருந்தா, நினைச்ச நேரத்திலே எமன் ஓடியாந்து அதை மனுக் குன்னு இன்னிக்கினு போவானா? இல்லே, மனுசன்தான் ஈசியா தன் உசிரை உட்டுப் பிடுவானா? ஆயிரம் வருஷமானாலும் ஆணி அடிச்சுப் பிடிச்சு வச்சிருப்பானே! ஆத்மா தான் மனுசனுக்குச் சொந்தம். அது ஒண்ணுதான் மனுசனுக்குச் சொந்தம். அது ஒன்னைத்தான் அவன் ரிஜிஸ்தர் பண்ணிப் பட்டாப் போட்டுக்கினு வந்திருக்கிறான். ஆனா அதிலே ஒரு சின்னக் கர்க்ஸன் பண்ணிக்கோ. ஆத்மாவைப் பெரிதா மதிக்கிறவன், உசிரையும் பெரிசா மதிப்பான். அது இல்லாதவனுக்கு இதுவும் அசால்ட்டுதான். இன்னா சார், நான் சொல்றது ரைட்தானா?"

"அதாவது மனிதனுக்குச் சொந்தமில்லாத உயிருக்காக மனிதனுக்குச் சொந்தமான ஆத்மாவைப் பணயம் வைக்கக் கூடாது; உயிருக்கு உயிரை வேணுமானால் கொடுக்கலாம்; ஆத்மாவைக் கொடுக்கக் கூடாது; அப்படிக் கொடுத்து விட்டால் அப்புறம் உலகத்தில் மனிதன் என்று சொல்ல மனிதனிடம் ஒன்றுமே இருக்காது. அப்படித்தானே?"

"போ, சார்! நீ இன்னான்னமோ கேட்டு என்னைக் கொயப்பறே!" என்று சிரித்தான். ஏழுமலை.

"இல்லே ஏழுமலை! உனக்கு எல்லாம் தெரியும். நீ ரொம்பப் பெரிய மனிதன். அதனால் இதைப் பற்றியும் கொஞ்சம் யோசித்துப் பார்!" என்று புன்முறுவலுடன் சொல்லிக் கொண்டே அங்கிருந்து அமைதி யாகத் திரும்பி நடந்தான் முரளி.

இரவு ஒரு மணி வாக்கில் தன் வீட்டுப் படிமேல் கால் வைத்த உடனேயே உள்ளிருந்து வந்த அழுகுரலிலிருந்து அவனுக்கு ஒரு விஷயம் தெளிவாயிற்று. ஆமாம்; அவனால் இன்று காப்பாற்றப்பட்டது அவனுடைய ஆத்மா ஒன்றுதான்!

# பாட்டி மேல் கொள்ளை ஆசை!















பெண்ணின் தகப்பனர் : பையன் சுமாராகத்தான் படித்திருக்கிருன். வரதட்சிணை ஐயாயிரம் ரூபாய் கேட்கிருர்களே!

தரகர் : அது கிடக்கட்டும்! மாமியார், நாத்தனர் இல்லாத வரனுச்சே; அதுக்கு எவ்வளவு வேணுமானலும் கேட்கலாம். நாம் கொடுக்கவும் கொடுக்கலாம்!








பொருமைப்பிசகு : அடேயப்பா! நம்ம ராஜப்பாவா? வர வர ரொம்ப சௌகரியமா யிருக்கான் போலிருக்கே! சட்டையில் 'டெரிலி' லேபிலென்னு ஒட்டுப் போட்டிண்டிருக்கிருன்!

# ம(ண)ன மண்டபம்

கோமகள்

கல்யாண மண்டபத்தில் 'ஜேஜே' என்ற கூட்டம். வருவோரும், போவோருமாக ஒரே கூச்சல். பட்டுப் புடவையின் சரசரப்பும் பூமணமுமாய்ப் பெண்கள் தங்கள் நகை, புடவைகளின் பிரதாபத்தைப் பிறர் உணரும் படியாகக் காண்பித்துக் கொண்டிருந்தார்கள்.

முகப்புப் பந்தலோரம் வலது பக்கம் ஒரு மேசையில் சந்தனம், கல்கண்டு, பூச்செண்டு ஆகியவை வைக்கப்பட்டிருந்தன. இன்னொரு மேசையில் திருமணத்துக்கு வந்து விட்டுத் திரும்பிப் போவோருக்குத் தேங்காய், வெற்றிலை பாக்கு, மஞ்சள் அடங்கிய பைகள். இதற்கெல்லாம் முழுப் பொறுப்பாளி சேகர். ஆண்களுக்கு மட்டும் வரவேற்பு உபசாரமும், பிரிவு உபசாரமும் செய்வது அவன் கடமை.

அவனுக்கு நேர் எதிரே இடது பக்கம் அதே போல் மேசைகள் போடப்பட்டு வரவேற்புக்கும், பிரிவு உபசாரத்துக்குமான மங்கலப் பொருள்கள் வைக்கப்பட்டிருந்தன. அங்கே சாரதா நின்றிருந்தாள். பெண்களுக்கு மட்டும் கவனிப்பது அவள் கடமை.

முகூர்த்த நேரம் நெருங்க நெருங்கச் சாரி சாரியாகக் கூட்டம் வருகிறது. இருவரும் வருகிறவர்களை இன்முகத்தோடு வரவேற்று உபசரிக்கின்றனர். இடையில் யாருமேவராத நேரத்தில் சேகர் எதிரே நிற்கும் எதிரினத்தவளை ஜாடையாகக் கவனிக்கிறான்.

கல்யாணத்துக்காக என்பதாலோ என்னவோ கொஞ்சம் மிகையாகவே அலங்கரித்துக் கொண்டிருந்தாள் அவள். தங்க நிற பனாரஸ் டிஷ்யூ சேலை, அதற்கிணையாக அகல ஜரிகைக் கரை மின்னும் சோளி. கூந்தலை நவீனமாகக் கட்டி விட்டிருந்த கொண்டையில் படர்ந்திருந்த தங்க வலை. கழுத்தில் எடுப்பான வெள்ளைக் கல் நெக்லஸ். காதில் குண்டு ஜிமிக்கிகள். கைகளில் கல் வளையல், மோதிரங்கள். இடுப்பில் அலங்காரச் சாவிக் கொத்திலிருந்து புறப்பட்டு வளைந்து தொங்கும் முத்து மாலை. அவன் பார்த்தே இராத மிகையான நகைகள்.

தன்னை உற்றுப் பார்த்துவிட்டுச் சிரிக்கும் ஆடவனைக் கண்டதும் அவளுக்குச் சுருக்கென்றது. ஆத்திரத்தோடு அவள் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

வாலிபர்களாக நாலைந்து பேர்கள் வருகிறார்கள். உபசாரத்தை ஏற்றுக் கொண்டு உள்ளே விரையும் போதே, 'டேய்! வாசலிலேயே வரவேற்பு ஜோடியைப் பார்த்தாயா?' என்று ஒருத்தன் கிசுகிசுக்கிறான்.

''ஆமாம்! ஆமாம்! பொறுக்கி எடுத்துத்தான் போட்டிருக்கிறார்கள்....!'' என்று இன்னொருவன் ஆமோதித்தான்.

சேகர் அவளைப் பார்த்தான். சாரதா அவனைப் பார்க்காதது போல் முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்.

யாரோ ஒருத்தர் சேகருக்கு ஒரு டம்ளர் காப்பி கொண்டு வந்து வைத்தார். ''சாப்பிடுப்பா! உங்க அம்மா அனுப்பினாங்க!''

சாரதாவின் முகத்தில் ஏளன நகை படர்கிறது. அவனைப் பார்த்துச் சீண்டும் குரலில் கேட்டாள். ''உள்ளே வேண்டிய உறவினர்கள் நிறையப் பேர்கள் இருக்கிறார்கள் போலிருக்கே. அப்பா ஒரு தரம் அனுப்பறார், அக்கா ஒரு தரம் அனுப்பறார்....!''

சேகர் காப்பியைப் பார்த்துவிட்டு எதிர்த்தாற்போல் சாரதாவைப் பார்க்கிறான்..... ''உண்மைதான்! நான் இரண்டு தரம் காப்பி சாப்பிட்டு விட்டேன். நீங்கள் காலையிலிருந்து ஒன்றும் சாப்பிடவில்லை போலிருக்கே?'' என்று கனிவாகக் கேட்டான்.

''அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்!'' பட்டென்று பதில் வந்தது.

எதிர்பார்த்தபடி அவன் கோபப்படவில்லை. மெல்லவே சிரித்தான். ''பேசினால் வாய் முத்து உதிர்ந்து விடுமோன்னு பார்த்தேன். இப்படித்தான் பேச வரும் என்பதால் தான் பேசவில்லை எனத் தெரிகிறது!''

இந்தச் சீண்டலால் அவள் தலை வெடுக்கெனத் திரும்புகிறது. அவளை நேராகச் சந்தித்த பார்வை தாழ்ந்து போகிறது. வாசலில் கார் ஒன்று வந்து நிற்கிறது. கணவனும், மனைவியும் இறங்கி வருகிறார்கள். இருவரும் சேகரிடம் சென்று தாமதித்த போது வந்த ஆடவருக்குக் கல்கண்டு சந்தனம் தந்து விட்டு, பெண்மணியைப் பார்த்து, ''ப்ளீஸ்!— லேடீஸுக்கு அதோ, அங்கே, அந்தம்மா தருகிறார்கள்!'' என்று திசை காட்டினான்.

அந்த அம்மாள் சாரதாவிடம் உபசாரம் பெற்றுச் சென்றதுதான் தாமதம். அவள் சேகரிடம் சீறினாள்: ''எனக்கொன்றும், அப்படி ரொம்ப வயதாகிவிடவில்லை. அம்மா பட்டமெல்லாம் வேண்டாம்! இருபது வயது தான் எனக்கு!''

''ஓ! ஐஸீ! என்னைவிட ஐந்து வயசு சிறியவள் நீங்கள்! அப்படியானால் அம்மா என்று சொன்னது தப்புதான். எக்ஸ்க்யூஸ் மீ!'' என்று கேலிக் குரலில் கூறினான் சேகர். ''தன் வயதைக் கூறிய பெண்ணை இப்போதுதான் கண்டேன். நிஜ வயதுதானே?''

''ரொம்பக் கிண்டல்காரராக இருப்பீர்கள் போலிருக்கிறதே!'' அவள் அதரத்தில் மோகனப் புன்முறுவல் முகிழ்த்தது.

''அம்மா! மழை மப்பான வானத்தில் நிலா தெரியுமா என்று காத்திருந்தேன் ........ காலையிலே



பிருந்துதான் ஒன்றும் சாப்பிடவில்லையே! இந்தக் காப்பியை நீங்கள் சாப்பிடுங்களேன்!''

''வேண்டாம்! உங்களுக்குத் தந்ததை எனக்கேன் தரணும்?''

''நான் மூன்றும் தடவை. நீங்கள் பசியோடு இருக்கிற போது இது அநியாயமில்லையா? இந்தாருங்கள், நீங்கள் சாப்பிட்டாலே நான் சாப்பிட்ட மாதிரி!''

அவன் மேசையில் காப்பி டம்ளர் உட்கார்ந்தது.

''தேங்க்ஸ்!''

தன் இருப்பிடம் வந்து நின்று கொண்ட சேகர் அப்போது வந்தவர்களை வரவேற்றுவிட்டு நிமிர்ந்தான். சாரதாவும் அதே காரியத்தைச் செய்து முடித்து விட்டு நிமிர்ந்தாள்.

''உங்கள் பெயரை நான் அறிந்து கொள்ளலாமா!'' என்று ஆங்கிலத்தில் கேட்டான் அவன்.

''சாரதா!''

''குட் நேம்! என் பெயர் சேகர்!''

''நான் அதைக் கேட்கவில்லையே!''

''ஆனாலும் சொல்ல வேண்டியது என் கடமை இல்லையா? உங்கள் பெயரைத் தெரிந்து கொண்டதோடு விட்டு விடலாமா?''

''ஓகோ!'' அவள் காப்பியை உறிஞ்சிக் குடித்துவிட்டு வைத்தாள். ''ஏ ஒன் காப்பி! கல்யாணத்தில் இப்படிப்பட்ட காப்பியா? யாரோ உங்களுக்கு ஸ்பெஷலாகப் போட்டிருக்கிறார்கள்!''

''மாப்பிள்ளையின் தம்பி இல்லையா? மரியாதை காப்பியின் ரூபத்திலும் பிரதிபலிக்க வேண்டாமா?''

''மாப்பிள்ளையின் தம்பியா நீங்கள்?'' அவள் கண்கள் விரிந்தன.

''ஆமாம்! பி. காம் முடித்துவிட்டு, சி. ஏ. படித்துவிட்டு ஒரு கம்பெனியிலே இருக்கிறேன். சம்பளம் ஐந்நூறு ரூபாய். இன்னும் சொல்லப் போனால் மார்க்கெட்டில் சீக்கிரமே செல்லுபடியாகிவிடும் 'ஹாட் கேக்' நான்! கல்யாண மார்க்கெட்டில்தான்!''

''தேவலையே! ஒரு விவரம் கேட்டால் ஒன்பது விவரம் சொல்கிறீர்களே! நீங்கள் மருத்துவக் கம்பெனி ஏஜண்டாகப் போய் இருக்க வேண்டும்!''

''உங்களைப் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்ல வில்லையே! நீங்கள் சி. ஐ. டி. டிபார்ட்மெண்டில்தான் இருக்கணும்!''

''என் அக்கா கல்யாணப் பெண்ணோடு படித்தவள்!''

''ஓ! உங்கள் அக்கா வேறு கல்யாணத்துக்கு நிற்கிறார்களா?''

''யார் சொன்னது அப்படி? அவளுக்குப் போன வருடமே மணமாகி விட்டது!''

''அப்படியானால் அடுத்தது உங்களுக்குத் தான்......!''

''இதென்ன அநாவசியப் பேச்சு?''

''இல்லை, என் திருமணத்தையும் சீக்கிரமே முடித்து விட வேண்டும் என்று அம்மா சொன்னார்கள்!''

''அதை ஏன் என்னிடம் சொல்கிறீர்கள்?''

''எங்கேயாவது நல்ல பெண் இருந்தால் சொல்லுங்களேன்!''

வாசலில் ஆண்களும், பெண்களுமாக ஒரு குழு வந்து கொண்டிருந்தது. சேகரும்



சாரதாவும் சம்பாஷணையை விட்டுவிட்டுத் தத்தம் காரியத்தில் ஈடுபட்டார்கள்!

வந்தவர்கள் உள்ளே சென்றதும் அவள் கலகலவெனச் சிரித்தாள். ''பெண்ணைத் தேட என்னைத்தான் பார்த்தீர்களா? ஆமாம், எப்படிப்பட்ட பெண்ணுக்குக் காத்திருக்கிறீர்கள் ?''

''சொல்லட்டுமா?'' என்றவன் உள்ளே பார்த்தான். முன் வாசலில் அவர்கள் நின்ற இடத்திலிருந்து நீண்ட பாதையொன்று பெருகிக் கல்யாண மண்டபத்தை அடைகிறது. எனவே தன் பேச்சு வேறு எவர்க்கும் கேட்காது என்று நிச்சயப்படுத்திக்கொண்டு தொடர்ந்தான். ''பெண் ஒல்லியாக உயரமாக இருக்க வேண்டும். சிவப்பும் வேண்டாம், கருப்பும் வேண்டாம். மாநிறம் போதும். அலங்காரத்தில் நாட்டமுடையவளாக இருக்க வேண்டும். காதில் கூடை ஜிமிக்கி, அதில் இழுத்து மாட்டும் முத்துச் சரம், பெரிய கொண்டை, அதை மூடும் தங்க வலை. கழுத்தில் வெள்ளைக் கல் நெக்லஸ். கையில் வாட்சும், பிரேஸ் லட்டும். இடுப்பில் மணிச்சரம்.

''போதும் நிறுத்துங்கள்!'' அவள் வெடுவெடுத்தாள்.

''என்ன சாரதா?'' சட்டென அவன் நாக்கைக் கடித்துக் கொண்டான் — அவள் பெயரைச் சொல்லி விட்டதற்கு.

''என் அலங்காரத்தை நீங்கள் கேலி செய்தவரை போதும்!''

''கேலியா? எனக்குப் பிடித்த அடையாளங்கள் !''

இதற்கு மேல் அவர்கள் பேச இயலாமல் இப்போது கல்யாணப் பந்தலிலிருந்து பெண் வீட்டம்மாள் ஒருத்தி அருகே வந்தாள்.

''தம்பி சேகர்! சாரதா! நீங்கள் இரண்டு பேரும் வாங்க. டிபன் சாப்பிட்டுவிட்டு வரலாம். அதற்குள் முகூர்த்தமும் நடக்கும். பார்த்துட்டு இங்கேயே வந்து நின்னுடலாம். போங்க, அதுவரை இங்கே யாரையானும் நிறுத்தறேன்.''

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துவிட்டுப் பின்கட்டுக்கு நடந்தனர். கூப்பிட்ட அம்மாள் கூட்டத்தில் கலந்துவிட்டாள். பரிசாரகர்களில் ஒருவர் ஓடி வந்து இருவருக்கும் மேசை மீது இலை பரப்பினர்.

''நன்னா சாப்பிடுங்கோ சார்..... நன்னா சாப்பிடுங்க அம்மா!'' என்று ஸ்வீட்டையும் பொங்கலையும் கூடுதலாகவே அவர்களின் இலையில் போட்டார் அவர்.

அவர்களுக்குத் தெரியுமா என்ன, வாசலில் வரவேற்பவர்கள் ஒன்றாகவே வந்திருக்கிறார்களென? தங்களைக் கல்யாணத்துக்கு வந்த தம்பதியாக பாவிப்பதை நினைத்துச் சேகர் சிரித்தான். சாரதா முகத்தைச் சுளித்துக் கொண்டாள்.

''நாம் சேர்ந்து கல்யாணத்துக்கு வந்த மாதிரி நினைக்கிறார்கள்!''

''கல்யாணத்துக்காகத்தானே வந்திருக்கிறோம் !'' அவன் கண்களில் குறும்பு கொப்பளித்தது.

''என்ன சொல்கிறீர்கள்?'' அவள் பார்வையிலே கடுமையைக் காட்ட முயன்றாள்.

''எழுந்திருக்கலாமா?''

கைகழுவும் தொட்டியின் குழாய்களில் இருவரும் கையைக் கழுவியபின், அவன் எதையோ மறந்தாற்போல் தயங்கித் தவித்தான்.

''என்ன தேடுகிறீர்கள்?''

''கர்ச்சீப்பை எங்கேயோ போட்டுவிட்டேன் !''

''இதோ இதை எடுத்துக்கோங்கோ ! பட்டுப் புடவை வீணாகிவிடும்!''

''தேங்க்ஸ்!'' அவன் கைக்குட்டையைத் திருப்பித் தந்தான்.

''இந்தப் புடவை உங்களுக்கு ரொம்ப எடுப்பா இருக்கு!''

''நம் ட்யூட்டிக்குப் போகலாமா?'' அவள் பேச்சை மாற்றினாள்.

''நீங்கள் போங்கள். நான் டிரஸ் சேஞ்ச் பண்ணிக்கிட்டு வரேன்!''

''ஏன் இந்த டெரிலின் சட்டை உங்களுக்கு நன்றாகத்தானே இருக்கு? நான்தான் சாக்குப் படுதா மாதிரி பட்டுப் புடவை கட்டியிருக்கிறேன். நானே மாற்றவில்லையே !''

''அப்படியா? உங்களுக்குப் பிடித்தால் சரி. நான் டிரஸ்ஸை மாற்றப் போவதில்லை!''



அவன் பார்வையால் அவள் முகத்தில் வெட்க ரேகை படர்கிறது.

இருவரும் நடுப் பகுதியை அடைந்தபோது கெட்டி மேளம் முழங்குகிறது. நாதஸ்வரம் உச்ச ஸ்தாயியின் ஒரே ஸ்வரத்தில் இழைகிறது. மேடை மீது திருமணத்தின் முக்கியமான உச்ச கட்டம் நடந்து கொண்டிருந்தது. மாப்பிள்ளை மங்கல நாண் அணிவித்துவிட்டு மணமகளின் முன் கைபற்றித் தீயை வலம்வர ஆரம்பித்தார்.

சாரதா எதற்கோ சேகரைப் பார்க்க அவனும் அவளைப் பார்ப்பதுணர்ந்து தலை குனிகிறான்.

"எல்லாரும் எழுந்திருக்கிறார்களே. போகலாமா? தேங்காய்ப் பை தரவேண்டுமே!" கடமையை நினைவூட்டினாள் அவள்.

"ஆமாம்! ஆமாம்!" பரபரப்பாக ஓடுகிறான் அவன்.

வலது பக்கமும், இடது பக்கமும் ஆண்களும், பெண்களும் பிரிவு உபசாரத்தைத் தேங்காய்ப் பை ரூபத்தில் பெற்றுக்கொண்டு நடக்கின்றனர்.

யாருமில்லாத இடைநேரத்தில் புன்னகைகள் இடம் மாறி மொய்க்கின்றன.

கொஞ்சம் கூட்டம் குறைந்தது. இப்பொழுது ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தார்கள்.

"ரொம்பக் கூட்டம் இல்லையா ?" அவள் தான் ஆரம்பித்தாள்.

"உங்களுக்குக் கூட்டம் பிடிக்காதோ?"

"கொஞ்சம்கூடப் பிடிக்காது. என்னை ஒரே பிடிவாதமாக இதைப் பார்த்துக் கொள்ளும்படி வற்புறுத்தினார்கள். உங்களுக்குக் கூட்டம் பிடிக்குமாக்கும்!"

"ரொம்பப் பிடித்தது இன்னிக்குத்தான். இப்படிக் கல்யாணம் நடத்தி, இப்படிக் கூட்டம் வரலேன்னு, உங்களை இங்கே நான் பார்த்திருக்க முடியுமா ?"

"அழகாய்ப் பேசுகிறீர்கள்!"

"அங்கே பேசவே தெரியாதோ ?"

"சாதாரண நிகழ்ச்சிக்கு மெருகுகூட்டிப் பேசத் தெரியாது......!"

"உண்மையை அப்பட்டமாகச் சொல்வீர்கள் இல்லையா ?"

"உண்மையை அப்பட்டமாகச் சொன்னால்தானே அது உண்மையாகும்?"

"அப்படீன்னு ஒன்று கேட்கலாமா?"

அவன் கேட்பதற்குள் ஒரு கல்லூரிக் கூட்டம் போல் ஏழெட்டுப் பெண்கள் உள்ளே இருந்து வந்தார்கள்.

"என்னடி சாரதா? இன்னமுமா இங்கேயே இருக்கே? வரவேற்புதான் நீதான்னு, விடைதர்றதும் நீதானு ?"

"நீட்டா டிரஸ் பண்ணிண்டு நிக்கறியே! என்னடி விஷயம்?" ஒருத்தி கேட்டவாறே சேகரைப் பார்த்தாள்.

"ஏண்டி, அப்படி இருக்கக் கூடாதா?"

ஒருத்தி குனிந்து காதோரம் கேட்டாள். "நான் எட்ட வரும்போதே பார்த்தேன். எதிர்த்த இவனுண்கிட்டே என்னமோ பேசிண்டிருந்தாயே, என்னவாம்? உள்ளே கல்யாணம் நடக்கிறது. வெளியே நிச்சய தார்த்தம் நடக்கிறதோ?" குரல் என்னவோ எல்லாருக்குமே கேட்டது.



# தெரியாதா என்ன...?

புது மணம் புரிந்து கொண்ட தம்பதியர் தேன் நிலவைக் கழித்துக் கொண்டிருந்தனர். அவர்களிடையே நடந்த உரையாடல் இதோ:

**மணமகன்:** சீதா! நம்மிடையே இனி ஒளிவு மறைவே கூடாது. என்னைப் பற்றிய உண்மை ஒன்றினைக் கூறுகிறேன். கேட்பாயா? ஆருயிர் சீதா ! நம் திருமணத்தின் போது என்னுடைய மாதச் சம்பளம் முந்நூறு ரூபாய் என்று கூறினேனே, முந்நூறு ரூபாய் சம்பளம் இல்லை. தொண்ணூறுதான்! — அதிர்ச்சியடையாதே !

**சீதா:** அத்தான்! இதில் அதிர்ச்சியடைய என்ன இருக்கிறது? என்னுடைய மொத்த நகைகளும் ஐம்பது பவுன் என என் தந்தை கூறினாரல்லவா, அவை ஐம்பது பவுன்கள் அல்ல! பதினைந்து பவுன்கள்தான்!

**மணமகன்:** தொண்ணூறு ரூபாய் சம்பளமானாலும் பரவாயில்லையே ! ஆட் குறைப்பினால் என்னை வேலையினின்றும் நீக்கிவிட்டார்களே! எனக்கு வேலையே கிடையாதே!

**சீதா:** அதனாலென்ன? எனக்குப் பதினைந்து பவுன்கள் நகை போட்டிருப்பதாய்ச் சொன்னேனே ஒழிய, அவை 'கவரிங்' நகைகள்தான்! பவுன் நகைகள் அல்ல!

**மணமகன்:** அது சரி! நான் இவ்வளவு கூறினேனே! என்னைப் பைத்தியக்காரன் என்றுதானே நினைப்பாய்?

**சீதா:** நினைப்பதென்ன ? எனக்குத் தெரியாதா என்ன ?

**மணமகன்:** என்னது? நான் பைத்தியக்காரன் என்பது உனக்குத் தெரியுமா ? அந்தப் பாவி கோவிந்தனுக்கு நூறு ரூபாய் லஞ்சமும் அழுது, 'நான் போன வாரம் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து குணம்பெற்று வந்ததைச் சொல்லாதே!' என்று அவனிடம் கெஞ்சினேனே! அவன் உன்னிடமும் சொல்லியிருக்கிறானே !

**சீதா:** கோவிந்தனும் சொல்லவில்லை, கோபாலனும் சொல்லவில்லை. ஒருத்தர் எனக்குச் சொல்ல வேண்டுமா, என்ன ? எனக்கே தெரியாதா? அதே பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று உங்களுக்கு ஒரு நாள் முந்திதானே நான் வந்திருக்கிறேன். அங்கு இருக்கும் போது உங்களைப் பார்த்த இல்லையா என்ன ?

— எஸ். மைதிலி

கொல்லென்ற சிரிப்பில் காது கிழிபடுகிறது.

"போங்கடி!" பாதி கோபமும், பாதி வெட்கமுமாக முகம் சிவக்கிறாள் சாரதா.

"இனியும் உங்கள் தனிமைக்குப் பங்கமாக நிற்போமா?" என்ற சொற்களோடு வண்ண உடைகள் வெளியேறின.

"பொல்லாத குறும்புக்காரிகளாக இருப்பார்கள் போலிருக்கிறதே!" சேகர் பேச்சுக் கொடுத்தான்.

சாரதா பதில் பேசவில்லை.

"என்ன யோசனை? என் கல்யாண விஷயத்தை என் அப்பா என் பொறுப்பிலேயே விட்டு விட்டார்!"

"அப்படியா? அதை யார் கேட்டார்கள்?"

"நானுகத்தான், உங்களுக்குத் தெரிந்திருக்கட்டும் என்று சொன்னேன்!"

"என் இஷ்டத்துக்கு என் அப்பா விட்டு வைக்கவில்லே." — பட்டென்று கூறினாள் சாரதா.

"இதை வருத்தத்தோடு சொல்கிறீர்களோ?"

"நீங்களாக எதையும் கற்பனை பண்ண வேண்டாம்."

"சாரதா!" அவன் குரலில் முதன் முதல் ஒரு முக்கியமான பேச்சை அதற்குரிய கனத்தோடு ஆரம்பிக்கும் பொறுப்பும், நம்பிக்கையும் புலப்பட்டன.

அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

"உங்களை ஒன்று கேட்கலாமா?"

"இவ்வளவு தயங்கும் போதே அது கேட்கக் கூடாதது என்று தெரிகிறதே!"

"ஆனால் இந்தச் சமயம் நழுவினால்.... என்னால் அதை நினைக்கவே முடியவில்லே. குறுகிய நேரமென்றாலும்கூட.... எனக்கு.... உங்களைப் பிடித்து விட்டது..... ஆனால் உங்களுக்கு.......?"

"அதோ யாரோ வருகிறார்கள்!" என்று நினைவூட்டினாள் அவள்.

வந்தவர்களைப் பார்த்துக் கொண்டே அவர்கள் இருவரும் பிரமிப்புடன் விழித்தார்கள். ராஜாராமனும், சாம்பசிவமும்.... அவள் அப்பாவும் அவன் அப்பாவும்!

"அட, சாரதாவா? நீ இங்கேயா இருக்கே? ஸார்! இவதான் என் பெண் சாரதா. இங்கே வரவேற்பில் இவளை யாரோ நிறுத்தி வச்சிருக்காங்க ஸார். உள்ளே எல்லாம் தேடினு எப்படிக் கிடைப்பா?" என்றார், ராஜாராமன்!

"ஓ! அடேடே! இதோ இங்கே நிற்கிறானே, இவன்தான் என் பையன் சேகர்" என்றார் சாம்பசிவம்.

"அப்படியா? வணக்கம்!" என்ற ராஜாராமனுக்குப் பதில் வணக்கம் செய்த சேகர், அவர் சாரதாவின் தந்தை என்பதை அறிந்து கொண்டான்.

சாம்பசிவம் சாரதாவின் பக்கம் திரும்பினார். "அம்மா, சாரதா! நீயும் சேகரும் தான் வரவேற்பில் நிக்கிறீங்களா? நல்ல ஜோடியாகத்தான் பார்த்துப் போட்டிருக்காங்க. உள்ளே உங்கள் கல்யாணத்துக்காக நாங்கள் பேச்சு வார்த்தை நடத்தறோம். இங்கேயோ நீங்கள் ரெண்டு பேரும் நிற்கிறீர்கள். சுப சகுனம்தான் போங்கள்! ராஜாராம் ஸார்! பெண் பார்க்கணும்கிற சம்பிரதாயம்கூட வேண்டாம். இங்கே, ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கிட்டுக் காலையிலேயிருந்து நிற்கிறாங்களே! என்னடா சேகர், என்ன சொல்றே?"

"உங்கள் இஷ்டம் அப்பா!" என்று தன் விருப்பத்தை அறிவிக்கிறான்.

சாரதா தலை குனிந்து கொள்கிறாள்.

பெரியவர்கள் மேலே நடக்கின்றனர்.

"சாரதா!"

"என்னவாம்?"

"இப்போது சொல்லுங்கள். உங்களுக்கு என்னை......?"

"நான் இதற்குப் பதில் சொல்லணுமா? பெரியவங்க தீர்மானிச்சாச்சே!"

"இருந்தாலும்......"

"எனக்கு அப்போதிருந்து ஒரே தலைவலி. இருந்தாலும் நிக்கறேனே, புரியவில்லையா?"

"ஓ! காதல் கல்யாண மண்டபத்திலும் உண்டாகும். இல்லையா?"

"நிச்சயமாகும் என்று சொல்லுங்கள்!"

மனங்கள் அவிழ்கின்றன. உள்ளே ஏதோ ஒரு முக்கிய சடங்குக்காகக் கெட்டி மேளம் முழங்குகிறது. ஒரு ஜோடிச் சிரிப்பலைகள் ஒன்றையொன்று தழுவுகின்றன.

அந்தக் கல்யாண மண்டபத்துக்கு அடுத்த ஜோடி தயாராகி விட்டது! மண மண்டபத்தில் என்னவோ அவர்கள் இருவரும் கையைக் கோத்து நின்றாயிற்று!

## சித்திரைச் செல்வி!

**தமிழழகன்**

புன்னகைச் சித்திரம்
பொற்சிமிழ்க் கைத்திறம்
என்ன கண் மின்னும் இதழுடையாள்; - அவள்
ஏழு நிறம் பின்னும் நுதலுடையாள்!

அருவிக் கரைவளம்
அலையின் நுரைவளம்
மருவிக் கொழிக்கும் மகிழ்வுடையாள்; - அவள்
மனத்திற் செழிக்கும் நெகிழ்வுடையாள்!

மாந்தளிர்த் தோரணம்
மணிக்குயிற் பூரணம்
சேர்ந்திழை பூசிக்கும் சித்திரையாள்; - அவள்
செந்தமிழ் ஆண்டுக்கே முத்திரையாள்!

காலமாம் தேரொடும்
கண்கொளாச் சீரொடும்
கோல உலாவரும் கோமளையாள்; - விண்மீன்
கொய்து நிலாத் தரும் பூ மழையாள்!

வாழ்வெனும் காவியம்
வனப்பொடு மேவியும்
பூவிடை மண்டும் புது மணத்தாள்; - அவள்
புது மலர்ச் செண்டின் மதுமணத்தாள்!

இயற்கையின் நாட்டியம்
இவை எனக் காட்டியும்
மயக்குறும் பேரெழில் மாமங்கையாள்; - அவள்
மக்களை வாழ்விக்கும் வான்நங்கையாள்!



# வெற்றியில் தோல்வி கண்டவர்!

**கானன்டாயில் தாம் படைத்த ஷெர்லாக் ஹோம்ஸ் என்ற கதாபாத்திரத்தின் மூலம் எத்துணை பெரும் புகழும் பெற்றார் என்பது அனைவருக்கும் தெரியும். ஆனால் உண்மையில் அவரைப் பொறுத்தவரை தாம் வாழ்க்கையில் தோல்வி யுற்றதாகவே கருதினார் அவர்.**

□ □ □ □ □ □ □ □ □ □ □

ஒரு வழக்கறிஞரிடமோ, டாக்டரிடமோ, உதவியாளர்களாகப் போய்ச் சேருபவர்கள், அந்தத் துறையின் வெற்றி நுணுக்கங்களைக் கிரகித்துக் கொண்டு, பிற்காலத்தில் தாங்களும் பிரசித்திபெற்ற வழக்கறிஞராகவோ, வைத்தியராகவோ வரவேண்டும் என்றுதான் விரும்புவார்கள். அவர்கள் லட்சியமும் அதுவாகவே இருக்கும்.

ஆனால் ஒரு வைத்தியரிடம் தொழில் அநுபவம் பெற வேண்டி வந்த நபர், அந்த வைத்தியரின் ஊக சக்தியில் மாத்திரம் மனத்தைப் பறிகொடுத்து, அதையே அஸ்திவாரமாகக் கொண்டு உலகப் பிரசித்தி பெற்ற எழுத்தாளராக மாறி அமோகச் செல்வத்தைச் சேர்த்த விந்தை நிகழ்ச்சி சென்ற நூற்றாண்டில் நடந்திருக்கிறது.

அந்த டாக்டரின் பெயர் ஜோசப்பெல். அவரிடம் தொழில் பயில வந்தவர் ஆர்தர் கானன்டாயில். இதன் விளைவாக வாசகர்களுக்குக் கிடைத்தது 'ஷெர்லாக் ஹோம்ஸ்' தோன்றும் துப்பறியும் நவீனங்கள், கதைகள்!

ஜோசப்பெல் நோயாளிகளின் வியாதிகளைக் கண்டு பிடித்துச் சொல்லும் போது அந்த நபரின் வாழ்க்கை அம்சங்களைப் பற்றியெல்லாம் ஜோசியம் சொல்லுவது போல் சொல்லி விடுவார். நோயாளியின் தோற்றம், நடை உடை பாவனை முதலியவைகளைக் கொண்டே அவர்களைப் பற்றிப் பல திண்ணமான முடிவுகளைச் செய்யும் தீரர்.

கானன்டாயில் சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்தவர். நீண்ட நாள் உதவியாளராக இருந்து தொழில் பயில முடியாத நிலையில், கப்பல் ஒன்றில் சிறிது காலம் டாக்டராகப் பணியாற்றி விட்டுத் திரும்பிச் சொந்தத்தில் தனியாக வைத்தியர் போர்டை மாட்டினார். ஆனால் போதிய வருவாய் இல்லை.

இந்த நேரத்தில்தான் அவர் சிறுவர்களுக்கான வீரதீரச் செயல்கள் நிறைந்த கதைகள் எழுத ஆரம்பித்தார். அதற்குக் கிடைத்த சன்மானம் வெகு குறைவு. ஒரு நாவல் எழுதினார். ஆனால் அதைப் பிரசுரிக்க யாரும் முன்வரவில்லை. அப்போதுதான் அவருக்கு ஆளைப் பார்த்தே நோயை ஊகித்துவிடும் டாக்டர் ஜோசப் பெல்லின் சுபாவம் நினைவுக்கு வந்தது. அந்த ஊகத் தன்மையை அடிப்படையாக வைத்து ஏன் ஒரு துப்பறியும் கதையே எழுதக் கூடாது என்று கானன்டாயிலுக்குத் தோன்றியது. கதையில் வரும் துப்பறிபவருக்கு ஒரு பெயர் கொடுத்தாக வேண்டுமே! அந்த நாட்களில் இங்கிலாந்தில் பிரசித்தி பெற்ற ஒரு கிரிக்கெட் ஆட்டக்காரரின் பெயரில் முற்பாதியையும், புகழ்பெற்ற அமெரிக்க எழுத்தாளர் ஒருவருடைய பெயரின் பிற்பாதியையும் இணைத்தார். அந்தக் கணத்திலேயே 'ஷெர்லாக் ஹோம்ஸ்' என்ற மந்திரப் பெயர் உருவாகி விட்டது. உலகத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் ஊகத்தால் ஏதும் சொல்பவர்களைப் பார்த்து, 'நீ என்ன பெரிய ஷெர்லாக் ஹோம்ஸா?' என்று கேட்கும் அளவுக்கு அப்பெயர் ஜனரஞ்சகமாயிற்று.

இது மாத்திரமல்ல. ஷெர்லாக் ஹோம்ஸின் தோற்ற வருணனை ஏறத்தாழ டாக்டர் ஜோசப் பெல் போலவே அமைந்தது.

கானன்டாயிலின் 'ஷெர்லாக் ஹோம்ஸ்' கதைகள் வெகுசீக்கிரத்திலேயே ஏராளமான வாசகர்களின் அபிமானத்தைப் பெற்றன. அவருடைய வருவாயும் அதிகரித்தது. ஆனாலும் கானன்டாயில், எழுத்தை ஒரு தொழிலாகத்தான் கருதினார். தன்னுடைய பிரதான தொழிலாகிய மருத்துவத் துறையில்



தோல்வி யுற்றதாகவே ஏங்கினார். இந்த ஏக்கத்தின் விளைவாக 1853ம் ஆண்டில் அவர் எழுதிய கதை ஒன்றில் 'ஷெர்லாக் ஹோம்ஸை'ச் சாக அடித்து விட்டார்.

அவ்வளவுதான்! வாசகர்கள் உலகத்தின் பல மூலைகளிலிருந்தும் கூக்குரல் எழுப்பினார்கள். இனி மேல் ஷெர்லாக் ஹோம்ஸ் தோன்றும் கதைகள் வராதே என்ற கோபம் அவர்களுக்கு. கானன்டாயில் பிடிவாதமாக இருந்தார். அந்த ஹோம்ஸ், தன்னை மருத்துவத் துறையில் பிரகாசிக்க விடாமல் அமுக்குகிறார் என்பது அவருடைய வாதம்.

ஆனால் 1903ம் ஆண்டில் கானன்டாயில் போயர் யுத்தத்தில் டாக்டராகச் சேவை செய்து திரும்பிய பிறகு, 'ஷெர்லாக் ஹோம்ஸை'க்கு மீண்டும் உயிர் கொடுக்க முன்வந்தார். அப்போது அவர் எழுதிய 'காலி வீடு' (Empty house) என்ற கதையில் கடைசியாக ஸ்விட்சர்லாந்தில் இறந்து விட்டதாகக் கருதப்பட்ட ஷெர்லாக் ஹோம்ஸ் எப்படியோ திபெத்திய லாமாக்களிடையே போய்ச் சிறிது காலமிருந்து உடம்பைக் குணப்படுத்திக் கொண்டு வந்து விட்டதாக எழுதினார். மீண்டும் 'ஷெர்லாக் ஹோம்ஸ்' தோன்றிய அந்தக் கதைக்கு வாசகர்களிடையே பரபரப்பான வரவேற்பு இருந்தது.

பல வாசகர்கள் ஷெர்லாக் ஹோம்ஸ் ஒரு கற்பனைப் பாத்திரம் என்று நம்பவே மறுத்தார்கள். உயிருள்ள ஒரு துப்பறியும் நிபுணர் என்ற நினைப்புடன் பல சந்தர்ப்பங்களில் அவர் உதவியைக் கானன்டாயில் மூலம் கோரினார்கள்.

ஓர் இளைஞன் பாங்கியில் தன் கணக்கிலிருந்த அத்தனை பணத்தையும் எடுத்துக் கொண்டான். முன்னிரவில் நாடகத்துக்குப் போய் விட்டுத் தான் தங்கியிருந்த ஹோட்டலுக்குத் திரும்பி உடை மாற்றிக்கொண்டான். நள்ளிரவுக்குப்பிறகு ஆசாமியையே காணோம்.

அந்த இளைஞனை யாரோ கொலை செய்திருக்கலாம் என்ற சந்தேகத்துடன் அவன் உறவினர்கள் கானன்டாயிலின் உதவியை நாடினார்கள்.

விஷயத்தைக் கவனமாகக் கேட்ட பின் ''பையன் பாங்கியில் முழுப் பணத்தையும் வாங்கியதிலிருந்து அவன் மனத்தில் முன் கூட்டியே ஏதோ திட்டம் உருவாகியிருக்க வேண்டும். நாடகக் கொட்டகையிலிருந்து வந்து சாப்பிட்ட பிறகு அவன் உடை மாற்றிக் கொண்டான் என்றால் அவனெங்கோ தெரிந்த இடத்துக்குக் கிளம்ப நினைத்திருக்கலாம். நள்ளிரவு நேரத்தில் ஸ்காட்டிஷ் எக்ஸ்பிரஸ் கிங்ஸ்கிராஸ் ஸ்டேஷனிலிருந்து கிளம்புகிறது. பையனை அநேகமாக இப்போது கிளாஸ்கோ நகரில் கண்டு பிடிக்கலாம்'' என்றார் கானன்டாயில், தமது கற்பனைக் கதாநாயகன் ஹோம்ஸின் பாணியில்.

மறு நாள் அந்த இளைஞனை கிளாஸ்கோ நகரில் கண்டு பிடித்து விட்டார்கள்.

1930ம் ஆண்டில் தம் எழுபத்தி ஓராவது ஆண்டில் கானன்டாயில் காலமானார். அவருடைய கடைசி நாவல் 1927ல் வெளியானது. சுமார் நாற்பது வருட காலமாக வாசக ரசிகர்களுடன் உறவாடி வந்த 'ஷெர்லாக் ஹோம்ஸ்' சகாப்தம் முடிந்தது.

கானன்டாயில் எழுதிய ஐம்பத்தி ஆறு கதைகளிலும் நான்கு குறுநாவல்களிலும் ஷெர்லாக் ஹோம்ஸ் தோன்றுகிறார். இவை அனைத்தும் உலகத்தில் நாற்பத்தைந்து மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. எல்லா மொழிகளிலுமாகச் சேர்த்துப் புத்தக விற்பனை பத்துக்கோடிகளைத் தாண்டிவிட்டது.

ஷெர்லாக் ஹோம்ஸின் அபிமானிகள் பேராசிரியர்கள், டாக்டர்கள், நடிகர்கள் என்று வாழ்க்கையின் பல துறைகளிலும் வியாபித்திருக்கிறார்கள். ஆங்காங்கு இந்தக் கற்பனைத் துப்பறியும் பாத்திரத்தின் பெயரில் சங்கங்கள் அமைத்து ஆண்டு விழாக் கொண்டாடுகிறார்கள்.

அரபு மொழியில் வெளியான 'ஷெர்லாக் ஹோம்ஸ்' கதைகள் எகிப்து நாட்டில் போலீஸ் பயிற்சிப் பள்ளிகளில் பாடபுத்தகங்களாக இருக்கின்றன!

இத்தகைய பெருமை படைத்த கற்பனைப் பாத்திரத்தை இது வரை எந்த எழுத்தாளனும் சிருஷ்டித்திருக்க மாட்டான் என்றுதான் நினைக்க வேண்டியிருக்கிறது! —மேனு

(ஆதாரம்: கானன்டாயிலின் வாழ்க்கைச் சரித்திரம்)

○★○

வீட்டுக்குச் சாப்பிட வந்தவரிடம் :

''நாலு வருஷத்துக்கு முன்னாலே எங்க வீட்டு வேலைக்காரனைக் கடையிலே உப்பு வாங்கி வரச் சொன்னேன்; அப்புறம் அவன் திரும்பியே வரவில்லை!''

''அதுக்காக இன்னமுமா நீங்க உப்பில்லாமல் சாப்பிடறீங்க?''

''ஏன் அப்படி கேட்கிறீங்க?''

''இந்தச் சமையலில் ஒரு பதார்த்தத்திலேயும் உப்பே யில்லையே. அதனாலேதான் கேட்டேன்!''

○★○

# உதிரிப்பூ

முழு நாவல்

ஏ.எஸ்.ராகவன்

**மா**டியின் வெளி முற்றத்தில் அமர்ந்தபடி தோட்டத்தைப் பார்த்துக்கொண்டே இருப்பது ராஜனுக்கு அலுப்புத் தட்டாத பொழுது போக்கு. அங்கிருந்து பார்த்தால் பன்னீர் மரம்தான் முதலில் கண்ணில் படும். சின்னச் சின்னக் குங்குமச் சிமிழ்களைப் போலப் பூக்கள்! சற்றுத் தள்ளிப் பவழமல்லி புதராகப் படர்ந்து நிற்கும். பன்னீர் மரத்தைப் போல உயரமில்லை அது. ஆனால் அதன் பூக்கள் தான் எத்தனை அழகு! காம்புகளெல்லாம் செக்கச் செவேலென்று. இதழ்கள் பனி வெள்ளையாய், குப்பென்று மணம் வீசும் பவழமல்லிகை தான் பாரிஜாதமலராம். அத்தை



சொல்வான். அந்தப் பாரிஜாத மலரைத் தேவலோகத்திலிருந்து கொண்டு வந்தாராம் கிருஷ்ண பரமாத்மா. சத்யபாமாவுக்கும் ருக்மிணிக்கும் இதன் காரணமாகத் தகராறு! இரண்டு பெண்கள் சேர்ந்து விட்டால் கிருஷ்ண பரமாத்மாவானாலும் தகராறு ஓயாது போலும்!

கிழக்கே நீலமும் கருமையும் மெல்ல விலகத் துவங்கியிருந்தன. உலகின் மறு கோடியிலிருந்து 'டார்ச்' விளக்கை ஏந்திக் கொண்டு காலக் கிழவன் முக்கி முனகி நடந்து வருகிறாற்போலிருந்தது. ஒளிக் கதிர்கள் பிதிர்ந்து கொண்டு பாய்ந்ததைப் பார்த்தபோது பசுந் தழை உரம் போட்ட நிலத்தை இங்குமங்கும் உழுவது போலவும் தோன்றிற்று.

ஆயிற்று. ஹேமா வருகிற நேரம்தான்.

நாள் தவறாமல் அவள் வருவாள். தோட்டத்தில் உதிர்ந்து கிடக்கும் பூக்களை மட்டும் எடுத்துக் கொண்டு போகலாமென்று அவளை அனுமதித்திருந்தான் ராஜன். இத்தனை நாளைக்கு இப்படி ஒரு அனுமதி வேறு யாருக்கும் வழங்கப்படவில்லை. இதற்குக் காரணம் ஹேமா அல்ல. அவள் வந்த நேரம் அப்படி ஒரு அனுமதிக்கு ஏற்ற நேரமாக அமைந்து விட்டது. தோட்டத்தின் முதலாளியாக ராஜன் தன்னை நிலைநாட்டிக் கொள்ள ஒரு சந்தர்ப்பம் தேவையான நேரத்தில் அந்தப் பேதைப் பெண் மலங்க மலங்க விழித்துக் கொண்டு வந்து சேர்ந்தாள். மாரிமுத்து இலேசுப்பட்டவனில்லை. அவனுடைய உத்தரவில்லாமல் ராஜன்கூட அங்கிருக்கும் மரத்தைத் தொடக் கூடாது என்றான். ''மண் உன்னுதுதான் சாமி, யார் இல்லேன்னுங்க? ஆனா அதிலே விளையற செடி என்னுது....நான் வளர்த்தது....அது என் குழந்தை ....... பட்டுனு வந்து காம்பைக் கிள்ளிப் பிட்டியே, சாமி.......'' என்று சண்டைக்கு வந்து விட்டான்.

அவனைக் கண்டால் ராஜனுக்குப் பயம் தான். சின்ன வயதிலிருந்து அந்தப் பயம் வளர்ந்து விட்டது. தாத்தா காலத்திலிருந்து தோட்டத்தைப் பாதுகாத்து வருகிறான் மாரிமுத்து. அரிவாள் மாதிரி கிருதா மீசை வைத்திருந்தான். அந்த மீசை கருப்பாக இருந்தது. இப்போது வெளுத்துப் போய்விட்டதே தவிர, அதன் அடர்த்தி, நீளம், கூர்மை இவையெல்லாம் அப்படியே இருந்தன.

ஒரே ஒரு காம்பைக் கிள்ளியதற்காக மாரிமுத்து உதறிப் பேசியதை ராஜனால் ஏற்க முடியவில்லை.

அந்தச் சமயம் பார்த்து ஹேமா நுழைந்தாள் தோட்டத்துக்குள். கையில் பூக்குடலை. கண்ணில் மிரட்சி. முழங்கால்வரை கவுன். வெட்டிவிடப்பட்ட தலை.

''யாரு?'' என்று அதட்டினான் மாரிமுத்து.

அவள் பயந்துவிட்டாள். ராஜனைப் பார்த்து ''கொஞ்சம் பூ வேண்டும் பூஜைக்கு'' என்றாள்.

''அதெல்லாம் பூவுமில்லே கீவுமில்லே... போ...'' என்றான் மாரிமுத்து.



''யாரம்மா நீ?'' என்று கேட்டான் ராஜன்.

பக்கத்து வீட்டைச் சுட்டிக் காட்டி, ''அவர்களுக்கு உறவு'' என்றாள் அவள்.

மாரிமுத்துவுக்கு இந்த விசாரணை பிடிக்கவில்லை. யாராக இருந்தாலும் இங்கே பூப் பறிக்க முடியாது. அவன் ஒரு தோட்டக்காரன் என்ற இளப்பம் போலிருக்கிறது. எஜமானைப் பார்த்து அவள் பேசுவதிலிருந்தே தெரியவில்லையா!

''உன்னை நான் பார்த்ததே இல்லையே!'' என்றான் ராஜன்.

''நான் இங்கே வந்து பத்து நாள்தான் ஆகிறது.''

''உன் பெயர்?''

''ஏமா.''

''என்னது?''

''ஏமா, அதாவது ஹேமா, ஹேமலதா.''

''படிக்கிறாயா?''

''உம்... எஸ். எஸ். எல். ஸி... பி செக்ஷன்... ஆங்கிலம் மீடியம்.''

''ஏன்? தமிழ் மீடியம் கூடாதோ?''

''கூடாதென்பதில்லை. பம்பாயில் நாங்கள் இருந்த பகுதியில் தமிழ் படிக்க வசதியில்லாமல் ஆங்கிலத்தில் சேர்த்து விட்டேன். அதன் தொடர்ச்சியாக இங்கேயும்...''

''ஓ... நீ பம்பாய்க்காரியா?''

அவள் தலை குனிந்தது.

'பம்பாய்க்காரியானாலும் சரி, சீமையிலிருந்தே வந்திருந்தாலும் சரி, இங்கே பூக்களைத் தொட முடியாது.' மாரிமுத்து உறுமினான், மனத்துக்குள்.

''ஆல்ரைட்..., கீழே கிடக்கிற பூக்களை மட்டும் எடுத்துக் கொள்... தெரிகிறதா?... மரத்தை உலுக்கக் கூடாது. செடி கொடியைத் தொடக் கூடாது.... டு யூ அண்டர்ஸ்டாண்ட்?''

''எஸ் ஸார்... தாங்க்யூ.''

இப்படியாக வழங்கப்பட்ட அனுமதி அது. மாரிமுத்துவுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அவள் அதை லட்சியம் செய்யவில்லை. தினசரி வருவாள். எப்போது வருவாளோ, ராஜனுக்குத் தெரியாது. படுக்கையை விட்டு எழுந்து முன் வராந்தாவுக்கு



அவன் வருவதற்கும், பூக்குடலையுடன் அவள் வெளியேறுவதற்கும் சரியாக இருக்கும்.

தன் குழந்தைகளாகிய செடிகளின் சிரிப்பையெல்லாம் அவள் வாரிக் கொண்டு போய்விடுகிறாள் என்ற தாபம் மாரிமுத்துவுக்கு. 'உதிரிப்பூதானே, என்ன நஷ்டம்?' என்பது ராஜனின் சமாதானம். சமாதானம்தான். வாதாட முடியுமா மாரிமுத்துவிடம்?

அடுத்த வீட்டுக்காரரின் தூரத்து உறவினளாம் இந்த ஏமா. சிறு வயதிலேயே தாயை இழந்தவள். அண்மையில் தந்தையும் மறைந்து விட்டாராம். நிர்க்கதியாய் நின்ற அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து விட்டார் பக்கத்து வீட்டுக்காரர். இவள் வந்ததால் முதலில் வீடு இரண்டாயிற்றாம். அப்புறம் ஒன்றாக ஆவதற்குக் கொஞ்ச நாள் ஆயிற்றாம். இந்த விவரங்களையெல்லாம் அத்தை வாயிலாக அறிந்து கொண்டான் ராஜன்.

அதோ ஏமா வந்து விட்டாள்.

இன்றைக்கு நடையில் ஒரு துள்ளல். முகத்தில் ஒரு மலர்ச்சி, கையில் ஒரு பரபரப்பு! அரங்கமேறி நடனமாட வந்த பெண்ணைப் போல.

ராஜன் அவளைப் பார்த்தான். முழங்காலுக்குக் கீழே தவழும் பாவாடை. அவள் வளர்ந்திருந்தாளென்றாலும் பாவாடையின் அளவு அப்படியேதான் இருந்தது. குனிந்து அவள் பூக்களைப் பொறுக்கியபோது முழங்காலுக்குக் கீழே திரட்சி தெரிந்தது. முதுகில் கிடந்த பின்னலும், அதன் கீழே தாவணியும், ஒரு சுற்றுச் சுற்றி வந்து அது இடுப்பில் செருகி நின்றதும் தெரிந்தது.

ராஜனுக்கு வியப்பாக இருந்தது. அவன் கவனித்தாலும் கவனிக்கா விட்டாலும் அவள் வளர்ந்துதான் விட்டாள். முன் போலப் பாதிச் சட்டையும், அரை வயிறும் இப்போது தெரியவில்லை. தெரியாவிட்டால் என்ன, இந்த ஏழைப் பெண்ணுக்கு அந்த வீட்டில் அரை வயிற்றுக்கு மேலா கிடைத்து விடப் போகிறது?

மாரிமுத்து பூவாளியுடன் வந்தான். அவளைப் பார்த்ததும் நின்றான். இருவரும் என்ன பேசினார்களோ அவள் சிரித்துக் கொண்டே அப்பால் சென்றான்.

பழைய கோபம் தணிந்து விட்டது அவனுக்கு. பூஞ்செடி மட்டுமல்ல, ஏமாவும் ஒரு குழந்தை என்ற உணர்வு அவனுக்கு எழுந்திருக்க வேண்டும்.

ஹேமா ஒரு முறை நிமிர்ந்தாள். தோளைக் குலுக்கி முதுகில் கிடந்த பின்னலை முன்புறமாக எடுத்துப் போட்டுக் கொண்டாள். இப்போது அதுவும் அவளுடன் சேர்ந்து கொண்டு பூக்களைப் பொறுக்குவது போல் இருந்தது.

உற்சாகம் பிடிபடவில்லை அவளுக்கு. ஏதோ ஒரு பாட்டைப் பாடியபடியே பவழ மல்லிகையின் கீழே குனிந்து குனிந்து வலம் வந்தாள். ராஜன் காதைத் தீட்டிக் கொண்டான். பாட்டு மாடிவரை வரவில்லை. இத்தனை நாளும் மூச்சே விடாதவள் இன்று பாடியது வியப்பாக இருந்தது. அத்தை சொல்வாளே, 'தேமே என்று பாவம் ஏமா, வாய் திறக்கிறதில்லை. முக்கால்வாசிக் காரியம் அவள்தான். இங்கே பூப் பொறுக்க வருகிறாளே, வருவது தெரியாது, போவது தெரியாது...' என்று.

ராஜன் கீழே இறங்கி வந்தான். அனுமதி கொடுத்த நாளுக்குப் பிறகு ஏமாவுடன் அவன் பேசியதே யில்லை. இன்றைய அவளுடைய உற்சாகமும் பாட்டும் பேச்சுக்கு அடிகோலின.

''ஏமா!''

பூக்குடலையோடு வீடு திரும்பக் காலெடுத்தவள் நின்று அவனைப் பார்த்தாள்.

''இங்கே வா...''

அவள் தயங்கினாள்.

''ஐயா கூப்பிடறாரே, காதிலே விழலையாம்மா?'' என்றான் மாரிமுத்து.

அவள் பயந்து பயந்து ராஜன் நின்று கொண்டிருந்த வீட்டின் முன் கிராதிக்கு வந்தாள்.

''பூவெல்லாம் எடுத்து விட்டாயா?'' என்று கேட்டான் ராஜன்.

''உம்...''

''ஏதோ பாட்டுப் பாடிக் கொண்டிருந்தாய் போலிருக்கிறதே, என்ன அது?''

திடீரென்று குளிர் காற்று வீசுவதைப் போல ஒரு நடுக்கம் கண்டது அவளுக்கு. முடிந்தால் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் ஓடிவிடவே விரும்பினாள். அவன் கவனிக்கக் கூடும் என்று அவளுக்குத் தோன்றாமலே போய்விட்டதே!

''சொல்லேன்...''

''அது சும்மா பள்ளிக்கூடப் பாட்டு.''

''என்ன பாட்டு?''

''சொன்னால் கேலி செய்வீர்கள்.''

''சொல்லாவிட்டால்தான் கேலி செய்வேன். இதோ பார், என் குணம் உனக்குத் தெரியாது. எதையும் மூடி மறைப்பதோ, பிகு பண்ணுவதோ எனக்குப் பிடிக்காது. கேட்கிற கேள்விக்கு டக்,-டக் என்று பதில் சொல்ல வேண்டும்.''

அவள் பரிதாபமாக அவனைப் பார்த்தாள். 'சொல்லித்தான் ஆக வேண்டுமா?' என்று கேட்பது போலிருந்தது பார்வை. தலையைக் குனிந்து கொண்டாள். ''தோட்டத்தில் மேயுது வெள்ளைப் பசு, அங்கே துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி' என்ற பாட்டு'' என்றாள்.

இதைக் கேட்டதும் ராஜனுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்து விட்டது. ஆங்கிலத்தைப் பயிற்சி மொழியாகக் கொண்ட ஒரு பெண் இப்படி ஒரு குழந்தைப் பாட்டைப் பாடுவாள் என்று எதிர்பார்க்கவில்லை. ''கேட்டாயா மாரிமுத்து?... உன் காது கேட்கவே இந்தப் பாட்டைப் பாட இவளுக்கு எத்தனை தைரியம்?.... தோட்டத்திலே வெள்ளைப் பசு மேய்கிறதாம்...கன்றுக்குட்டி துள்ளிக் குதிக்கிறதாம்..'' ராஜன் உரக்கச் சிரித்தான்.

ஏமா அவசர அவசரமாக நழுவினாள் அங்கிருந்து. விடுபட்டால் போதும் என்றிருந்தது அவளுக்கு.

''நல்ல பொண்ணு, சாமி. அசட்டுப் பிசட்டுன்னு பாடாமே பசு மாட்டைக்

## குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# :பாஸ்:போமின்®

:பாஸ்:போமின் பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக். இதில் வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ :பாஸ்பேட்டுகள் கலந்துள்ளது. இதுவே குடும்பத்தினர் அனைவரும் வலிவுடனும், சந்தோஷத்துடனும், ஆரோக்கியமாயும் வாழ உதவுவது. :பாஸ்:போமின் வீட்டில் வையுங்கள். இதை அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. இழந்த சக்தியை மீண்டும் பெற உதவுகிறது. பசியைத் தூண்டும். வலிவைப் பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ— :பாஸ்:போமின்.

SQUIBB
Phosfomin
VITAMINS ELIXIR

SQUIBB® TTT®

SARABHAI CHEMICALS

கொண்டு வந்திச்சே அதைச் சொல்லுங்க'' என்றான் மாரிமுத்து.

அடுத்த வீட்டு வேலிப் படலைத் திறந்து கொண்டு ஏமா உள்ளே போவதை ராஜன் பார்த்தான். வேலிப் படல்தான். இன்னமும் காம்பவுண்ட் சுவர் எழுப்பப்படவில்லை. அடுத்த வீட்டுக்காரர் இந்த வீட்டை வாங்கியதே ஒரு கதை. அது நமக்குத் தேவையில்லை. வீடு பழைய காலத்து வீடு. பழுது பார்ப்பதென்று கைவைத்தால் பல ஆயிரங்களை விழுங்கிவிடும். அந்த ஜோலிக்கே போகாமல் இரண்டு குடிகளை வைத்து முடிந்தவரை வீட்டிலிருந்து பணத்தை விழுங்குகிற புத்திசாலித்தனமான காரியத்தை அந்த மனிதர் செய்துகொண்டிருந்தார். அந்த இரண்டு குடிகளும் அந்த வீட்டின் எந்தப் பகுதியில் எவ்வாறு குடியிருக்கின்றன என்பது ராஜனுக்கு இதுவரை புரியாத ரகசியம். மூன்றாவது குடித்தனக்காரராக வீட்டின் சொந்தக்காரர் எங்கே இருக்கிறார் என்பதும் தெரியாது. பெரும்பாலும் வேலிப் படலுக்கு அருகில் ஏதாவது ஒரு பதியத்தை, பாத்தியைக் கிளறிக் கொண்டிருப்பதிலிருந்து அவர் வசிக்கும் பகுதி வீட்டின் முன்புறத்துத் திறந்த வெளிதானோ என்று அவன் ஐயுறுவான். நச்சுப் பிச்சென்று குடும்பம் இல்லை அவருக்கு. ஒரே ஒரு பெண். ஒரே ஒரு பையன். அதிகப்படி நபர் இந்த ஏமா தான்.

அந்த வீட்டைப் பற்றி இவ்வளவு சவிஸ்தாரமாக ராஜன் கவலையுறுவதற்குக் காரணம் உண்டு. அந்த நெரிசலுக்குள், பழைமைக்குள் அழகு எவ்வாறோ குடி புகுந்திருந்தது. அடுத்த வீட்டுக்காரரின் பெண் மாலினி இந்த ஆண்டு கல்லூரியில் சேர்ந்திருக்கிறாள். சந்தன வண்ண உடம்பு. தலையில் கட்டுக்கடங்காத கேசம். இந்த வண்ணமும் கேசபாரமும் எத்தனையோ பெண்களுக்கு இருக்கலாம். ஆனால் மாலினியின் அந்தக் கண்கள் எவருக்குமே இருக்க முடியாதவை என்பது ராஜனின் கருத்து. ஊஹூம்.. நிர்மானம். தேன் துளித்திருப்பது போல் அந்தக் கண்களில் ஓர் ஈரக் கசிவு. அந்தக் கசிவின் வழியே பார்வை புறப்படுகிறபோது, அதில் எத்தனை பேதைமை, எத்தனை பெண்மை, எத்தனை கூர்மை, எத்தனை அழகு!

பிரமன் ரொம்பப் பெரியவன். எத்தனை தான் அலுத்தாலும், சலித்தாலும் எங்கோ, எப்போதோ எவ்வாறோ இப்படி ஒரு அபூர்வ பிம்பத்தை அவன் சமைத்து விடுகிறான்!

மாலினி கல்லூரிக்குப் புறப்படும் நேரம் சரியாக ஒன்பது இருபத்தெட்டுக்கு. ஒரு நாளா இரண்டு நாளா — ராஜன் அந்த நேரத்தை ஆவலோடு கவனித்திருக்கிறான். மாடியின் வெளி முற்றத்தில் அமர்ந்து அவள் புறப்படுவதைப் பார்ப்பதில் அவனுக்கு ஆசை. அவள் அவனைப் பார்த்திருக்க முடியாது. பூஞ்சட்டி திரையிட்டு அவனை மறைத்துவிடும். அந்தச் செடிக்குப் பின்னாலிருந்து இருட்டுத்தனமாக அவளைக் கவனிப்பது தவறு என்று அவனுக்குத் தோன்றியதே இல்லை. பூச்செடிகள் பூக்களை மட்டுமா மலர்விக்கின்றன? அன்பையும் தான். அந்தச் செடியின் இளஞ்சிவப்பு இலைகள் ஊதாவும், மஞ்சளும் புள்ளி புள்ளியாய்க் கிடக்கும் அகலப் பூக்கள். அவற்றினூடே அடுத்த வீட்டு வேலிப் படலும், காலில் ஸ்லிப்பர் அணிந்து சரியாக ஒன்பது இருபத்தெட்டுக்கு வரும் நங்கையும் அவன் கண்ணிலிருந்து தப்பியதில்லை. படலைத் திறந்து தெருவுக்கு வந்ததும் நடை நிமிரும். அவள் நடப்பதைப் பார்த்தால், காலுக்குக் கீழே மலர் தூவி இருப்பது போலவும், அந்த மலர்கள் கசங்காமல் அடி எடுத்து வைக்கிறாள் என்றும் தோன்றும்.

இந்தக் கண்காணிப்பு நெடு நாட்களாக நடைபெறுகிறது. அடுத்த வீடுதானே, பழகுவதற்கு ஒரு வியாஜமும் கிடைக்காமலா போகும்! ராஜன் அப்படி ஒரு வியாஜத்தைத் தேடவில்லை. ரகசியமாக, தனக்குள் அந்தச் சுகத்தைப் பாதுகாத்தாலே போதுமென்று தோன்றிற்று அவனுக்கு.

இதோ படல் திறக்கிறது. ராஜனின் கண்கள் கூர்மையாகி விட்டன. இளஞ்சிவப்பு இலைகளூடே, ஊதாவும் மஞ்சளுமாகச் சிரிக்கும் மலர்களூடே பார்வை வேலிக்காலில் மேய்கிறது.

மாலினிக்குப் பதிலாக ஏமாதான் வந்தாள்!

ராஜன் முதல் முறையாக ஏமாற்றத்தை அனுபவித்தான். மணி ஒன்பது இருபத்தேழு தானே ஆகிறது! இந்த ஏமா ஒன்பதே முக்காலுக்கல்லவா புறப்படுவாள்! அடேடே! கடிகாரம் நின்றுவிட்டது போலல்லவா தோன்றுகிறது. ஆமாம். நின்றுதான் விட்டது.

அதே பாவாடை, தாவணி, நடையில் ஓட்டம். தெருவே தன்மீது மோத வருகிறாற்போலவும், அதிலிருந்து தப்பித்துக் கொண்டு ஓடுகிறாற்போலவும் இருந்தது ஏமாவின் நடை.

''ஸார்!''

ராஜன் திடுக்கிட்டவனாய், பூச்சட்டிக்குள் சிக்கிய பார்வையைத் திருப்பினான்.

வந்தவர் அடுத்த வீட்டுக்காரர்.

அவரைக் கண்டதும் இதயமே பெயர்ந்து வாய்க்கு வந்துவிட்டது. மாலினியின் தந்தை அல்லவா! ஒருவேளை அவனுடைய திருட்டுப் பார்வையைக் கவனித்திருப்பாரோ?

''வாருங்கள், வாருங்கள்'' என்றான், ராஜன். சிரிப்பில் அசடு வழிந்தது. ''இந்த... இந்தப் பூவைப் பார்த்தீர்களா? இதில் எத்தனை ஊதாப் புள்ளிகள், மஞ்சள் புள்ளிகள்!... இத்தனை நுட்பமாக இந்தச் சின்னஞ் சிறு செடி எப்படித்தான் மலர்கிறதோ தெரியவில்லை'' என்றான் சமயோசிதமாக.

அவரும் ஆச்சரியப்பட்டார். அதோடு நிற்கவில்லை. ராஜனுடைய தோட்டக் கலை ஆர்வத்தை வெகுவாகப் பாராட்டினார்; வியந்தார். அதோடும் நிற்கவில்லை. தாவர சாஸ்திரத்தில் தாம் படித்த, தெரிந்து கொண்ட ஆச்சரியங்களைச் சொல்லவும் ஆரம்பித்து விட்டார்.

ராஜன் நிமிர்ந்து உட்கார்ந்தான். அவனுக்குப் புரிந்து விட்டது. பக்கத்து வீட்டுக்காரர் ஏதோ உதவியை எதிர்பார்த்துத்தான் அவனிடம் வந்திருக்கிறார். இல்லாவிட்டால் இப்படி ஒத்தூத மாட்டார்!

அது உண்மைதான். ''ஒரு சிறு உதவி தேவை'' என்றார் அவர்.

''சிறு உதவிதானா?... எதுவுமே பெரிதாகச் செய்துதான் பழக்கம் எனக்கு'' என்றான் ராஜன்.

அவர் சிரித்தபடியே, ''உதவி சிறியது தான். தொகை பெரிது. ஒரு ஐந்நூறு ரூபாய் அவசரமாக வேண்டும்'' என்றார்.

''அதற்கென்ன?... தருகிறேன்'' — ராஜன் எழுந்து பீரோவை நோக்கி நடந்தான்.

அவருக்கு முகமெல்லாம் பல்லாகிவிட்டது. பக்கத்து வீட்டுக்காரப் பிள்ளையாண்டான் இவ்வளவு சகஜமாகவும் நன்றாகவும் நடந்து கொள்வான் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. அவனைப் பற்றி ஏனோ அவருக்கு அவ்வளவு நல்ல அபிப்பிராயம் கிடையாது. நினைத்தால் காரில் பல நண்பர்களை அழைத்துக் கொண்டு எங்காவது போய்ச் சுற்றிவிட்டு வரும் பொழுது போகாத செல்லப் பிள்ளை அவன் என்கிற எண்ணம்.

''இந்தாருங்கள். இந்தப் பணத்தை முன் விட்டாவது என் வீடு தேடி வந்தீர்களே, மகிழ்ச்சி'' என்றான் ராஜன்.

அடேயப்பா! என்ன அடக்கம்? என்ன மரியாதை, இங்கிதம்!

''உங்களிடம் சொல்வதற்கு என்ன?... குழந்தை பிக்னிக் போக வேண்டும் என்றாள். காலேஜ் ஆசிரியர்களெல்லாம் போகிறார்களாம். இந்தச் சந்தர்ப்பத்தில் குடும்பம் முழுவதுமே போய் வரலாமே என்று தோன்றிற்று. பணத்தை அடுத்த மாதம் தந்து விடுகிறேன்'' என்றார் அவர்.

''மெள்ளத் தரலாம். அவசரமில்லை. எந்த ஊருக்கு பிக்னிக் போகிறீர்கள்?'' என்று கேட்டான் ராஜன்.

''மைசூர்ப் பக்கம்.''

''அவசியம் குடும்ப சகிதம் போய்வரத் தான் வேண்டும். நானும் எங்காவது போக லாம் என்று பார்க்கிறேன். முடிவதில்லை. நாலு பேரோடு சேர்ந்து யாத்திரை போவதே தனி அனுபவம். காரை எடுத்துக் கொண்டு போனேன், வந்தேன் என்று ஓடி வருவதில் என்ன சுகம்?'' என்றான் ராஜன்.

''அது வாஸ்தவம்தான்'' என்றார் அவர். சொந்தக் கார் பெருமை கொண்டாடாமல் இவ்வளவு சகஜமாக எல்லோருடனும் கிளம்புவதற்கு ராஜன் ஆசைப்படுவதைக் கேட்க அவருக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

'': கல்லூரி ஆசிரியர்களின் ஏற்பாடுதான் இது. மாணவர்கள் இரண்டொருவர்தான்

''மிக்க நன்றி.''

அவர் சென்றதும் ராஜனுக்கு மாடியிலிருந்து கீழே குதிக்க வேண்டும் போலிருந்தது. காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். வழியில் அகப்பட்ட இரண்டொரு நண்பர்களை உடன் கூட்டிக் கொண்டான். பேச்சும் சிரிப்புமாகப் பகல் முழுவதும் கழிந்தது. திரும்பும்போது நண்பர்களை அவரவர் வீட்டில் விட்டுவிட்டு அவன் மட்டும் தனியே வந்தான். மனத்தில் எல்லையில்லாத உற்சாகம்; பரபரப்பு.

அவனைப் போலவே வானத்துக்கும் உற்சாகமும் பரபரப்பும் நிலைகொள்ளவில்லை போலும். திடீரென்று பெரு மழையாகப் பெய்யத் துவங்கி விட்டது. அவசர அவசரமாகப் பக்கவாட்டுக் கண்ணாடிக் கதவுகளை உயர்த்தினான். முன்புறம் கண்ணாடிப் பலகையில் விழும் மழைத் துளிகளை விலக்கும் சாமரத்தைப் பொருத்தினான். காரின் முன் விளக்கு தூண் போல் நீண்டு ஒளி பாய்ச்சிற்று.

அந்த ஒளியில் தெருவின் மூலை தெரிந்தது. அங்கே வெற்றிலை பாக்குக் கடையின் முன் முகப்பில் அவள் — அவள்தான், மாலினி— மழைக்கு ஒதுங்கி நிற்பதும் தெரிந்தது. மாலினியின் அருகில் அவளைப் போலவே— அல்லது அவளுக்காவேதானோ? — ஒதுங்கி நிற்கும் நாலைந்து மாணவர்களும் தென்பட்டார்கள். மழை திடீரென்று வந்து விட்டதால் வீடு திரும்ப வகையின்றி அவள் தவிக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டான் ராஜன்.

காரை அங்கு கொண்டு போய் நிறுத்தி, பின் கதவைத் திறந்து, ''மாலினி, ஏறிக் கொள். வீட்டுக்குத்தானே போகவேண்டும்?'' என்றான்.

திடீரென்று இப்படி ஓர் அழைப்பு இத்தனை நாள்வரை 'உம்மணாமூஞ்சி'யாக இருந்த பக்கத்து வீட்டுக்காரனிடமிருந்து வந்ததைக் கண்டு மாலினி திகைப்புற்றாள். அவனையும் மழையையும் காரையும் மாறி மாறிப் பார்த்தாள். பிறகு ''தாங்க்ஸ்... நான் நடந்தே போய்க் கொள்ளுகிறேன்... மழை சீக்கிரம் நின்றுவிடும்'' என்றாள்.

இச்சமயம் அவள் அருகே நின்றுகொண்டிருந்த உருவம் தலையை நிமிர்த்தி ''மழை இப்போதைக்கு நிற்காது. காரில் போய் விடுவதே புத்திசாலித்தனம், மாலினி'' என்றது. பாதாதி கேசம் காக்கி நிற மழை அங்கி அணிந்திருந்த அந்த உ

அழைத்துப் போ. அவள் வீடு உன் வீட்டுக்கு அருகில்தானே?'' என்றான் கிருஷ்ணன்.

''ஆமாம். நீ எங்கே போக வேண்டும் கிருஷ்ணா?''

''நான் போகிற இடத்துக்கு உன் கார் வராது. வீணாகச் சிரமப்படாதே'' கிருஷ்ணன் சிரித்தான்.

''நீ என்னை அவமதிக்கவில்லை. என் காரை அவமதிக்கிறாய்!''

''ஊஹூம். நீ அப்படியெல்லாம் தவறாக எண்ணிக் கொள்ளாதே, ராஜ்! நான் கிராமத்துக்குப் போய்க்கொண்டிருக்கிறேன். வழியில் இரண்டு வாய்க்கால்கள் குறுக்கே வந்து காரை மறிக்கும் என்பதால்தான் சொன்னேன். மாலினி, நீ போய் வா... குட்பை...''

மாலினி ஏறிக் கொண்டாள். ராஜன் நண்பனுக்கு 'டா...டா' காட்டியவாறே காரை எடுத்தான். கிருஷ்ணனைப் பார்த்து ஏறக்குறைய இரண்டு வருடங்கள் இருக்குமோ! அவனை இந்தப் பக்கம் காணவே காணோமே! படிக்கிற காலத்திலேயே அவனைக் காண முடியாது. சூரப்புலி அவன் படிப்பில். சதா புத்தகமும், ஆராய்ச்சியும் விமர்சனமும் தான். கல்லூரி அரங்குகளில், மேடைப் பேச்சில் பரிசுகள் வாங்கியவன். சளைக்க மாட்டான். ராஜனுக்குப் படிப்பு ஏறிய தில்லை. அத்தையின் தொந்தரவுக்காகக் கல்லூரிக்குப் போய் வந்ததோடு சரி.

''குடை எடுத்துக்கொண்டு வரவில்லையோ?'' என்று கேட்டான் ராஜன்.

''ஊஹூம். குடை எடுத்து வந்தால் மழை வந்திருக்காதே!'' என்றாள் அவள்.

''ஆமாமாம்'' ராஜன் சிரித்தான்.

''நீங்கள் வந்ததும் நல்லதாயிற்று. மழை இப்போதைக்கு விடாது போல்தான் இருக்கிறது!''

''நாளைக் காலைவரை சக்கைப் போடு போடப் போவதாகச் சொல்லிக் கொண்டே பெய்கிறதே!''

''நீங்கள் பி. ஏ.வா?''

''யார் சொன்னது? மூன்றும் பகுதியில் மூன்று முறை கோட் அடித்தவன்.''

''புரொபஸர் கிருஷ்ணன் உங்கள் கல்லூரித் தோழரா?''

''ஆமாம்.''

''பி. ஏ. கம்ப்ளீட் செய்யக் கூடாதோ நீங்கள்?''

''எதற்காகச் செய்ய வேண்டும்? அது இல்லாமல் என்ன நஷ்டம் வந்துவிட்டது எனக்கு? அதிகம் படித்தால் மூளை கலங்கி விடும் என்று அத்தை தடுத்து விட்டாள்!''

அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவள் சிரிக்க வேண்டும் என்பதற்காகத்தானே ராஜனும் இப்படிப் பேசினன். பக்கவாட்டுக் கண்ணாடியில் அவளுடைய அழகிய திருமுகத்தை, இளநகை படரும் சந்தனக் கலவையைக் காண்பதற்காக ராஜன் தன்னைப் பாதாளத்தில் அழுத்திக் கொள்ளக் கூடத் தயாராகத்தான் இருந்தான்.

''படித்தால் மூளை கலங்கிவிடுமா?''

''நியாயமான கேள்வி. இதைத்தான் அத்தையிடமும் கேட்டேன்... 'கலங்குவதற்கு மூளை என்று ஒன்று இருந்தால்தானே கஷ்டம், அத்தை. நீ ஏன் வீணாக...?''

அவன் முடிப்பதற்குள் மாலினி கைக்குட்டையால் வாயை மூடிக் கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்.

''நீங்கள் தமாஷாகப் பேசுகிறீர்கள்!''

''உண்மையைச் சொன்னேன், மாலினி. படிப்பு எனக்கு வரவில்லை. அதற்காக நான் வருத்தமும் படவில்லை.''

மூன்றுவது கியரிலிருந்து முதல் கியருக்கு மாற்றியது போல ராஜனின் இந்தக் குழிவிரக்கம் ஒலித்தது.

''பிக்னிக் போகிறீர்களாமே?'' அவன் கேட்டான்.

''யார் சொன்னது?''

''அப்பாதான் சொன்னார். காலையில் வீட்டுக்கு வந்திருந்தார்.''

''ஓஹோ!''



''மைசூர்ப் பக்கம் நான் போனதில்லை. கிருஷ்ணராஜ சாகர் அணையையும் பிருந்தாவனத்தையும் இன்றைக்கெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கலாமாம்.''

''ஹூம்... ஒரு நாளில் பார்த்து முடிக்க முடியாது. ஒரு ஆயுள்கூடப் போதாது.''

''நன்றாகச் சொன்னாய் மாலினி. சில வற்றைப் பார்க்கப் பார்க்கப் புதுப் புது அழகுகள், அதிசயங்கள் தெரிந்து கொண்டே இருக்கும்'' என்றான் ராஜன், பக்கவாட்டுக் கண்ணாடியில் அவளைப் பார்த்துக்கொண்டே.

''நீங்கள் தமாஷாகப் பேசுபவர் மட்டுமில்லை. உண்மையையும் கலக்கிறீர்கள்!'' என்றாள் அவள்.

''அப்படியா? உண்மையே இன்றைக்கு உலகத்தில் பெரிய தமாஷாக இருக்கிறதே மாலினி, அதற்கு என்ன சொல்கிறாய்?''

அவள் சிரித்து விட்டாள். ''உங்களோடு பேசிக் கொண்டிருந்தால் பொழுது போவதே தெரியாது போலிருக்கிறது!'' என்றாள்.

''நன்றி!'' என்றான் ராஜன்.

கார் தெருவுக்குள் திரும்பிற்று. ஆயிற்று. வீடு நெருங்குகிறது.

''மாலினி, உங்களுடன் பிக்னிக்கில் நானும் கலந்து கொள்ளலாமோ?... அப்பாவின் அழைப்புக் கிடைத்து விட்டது காலையிலேயே... உன் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான் ராஜன்.

''அப்பா சரியென்றால் நான் என்ன சொல்லப் போகிறேன்?'' என்றாள் மாலினி.

இதுதான் பெண்களுக்கு அழகு. அவள் வேறு விதமாகச் சொல்லி யிருந்தால் ராஜன் ரசித்திருக்க மாட்டான். சில பெண்கள் முண்டியடித்துக் கொண்டு அபிப்பிராயம் சொல்லவும், அழைப்பு விடுக்கவும் தொடங்குவதைப் பாராதவனா!

வீடு வந்துவிட்டது. அவள் இறங்கினாள்.

''தயவு செய்து நன்றி சொல்ல வேண்டாம். எனக்குப் பிடிக்காது'' என்றான் ராஜன்.

''நான் சொல்லப் போவதில்லையே!'' என்று மடக்கினாள் அவள்.

படலைத் திறந்து கொண்டு அவள் உள்ளே போகிறவரை பார்த்துக் கொண்டிருந்து விட்டு ராஜன் காரை எடுத்தான். மாரிமுத்து கதவைத் திறந்து வைத்துக் கொண்டு நின்றவன், வழக்கமில்லாத வழக்கமாக 'ஐயா'வின் காரில் பக்கத்து வீட்டுப் பெண் வந்ததைக் கண்டு வியந்தவனாய், ஏதோ கேட்க நினைத்து ஏதும் கேட்காமல், கார் உள்ளே வந்ததும் கதவை மூடினான்.

ராஜன் மாடிக்குப் போனான். இருபத்து நான்கு படிகளைப் பத்தே தாவில் தாவி விட்டான். கால்கள் பரபரத்தன. குபீரென்று அகரப் பசி வந்து விட்டது.

''அத்...தேய்...''

மாடியிலிருந்து 'குழந்தை' குரல் கொடுப்பதைக் கேட்ட அத்தை, ''ராஜீ, எப்போது வந்தே? சாப்பிடுகிறாயா?'' என்றாள்.

''இப்போது எனக்கு இருக்கிற பசிக்கு பச்சைக் காய்கறிகளைக் கூட விட்டுவைக்க மாட்டேன், அத்தை! அப்படிப் பசிக்கிறது'' என்றான் ராஜன்.

''பலகாரம்தான் இருக்கிறது. இன்றைக்கு அமாவாசை... மறந்துபோய் விட்டாயா?'' என்றாள் அத்தை.

''அட ராமா!''

''வெல்ல அவல், புளி அவல், தயிர் அவல் எல்லாம் தயார் செய்து வைத்தேன். உன்னைக் காணோமே, மழையும் வேறே பெய்கிறதே என்று இப்போதுதான் ஏமாவுக்குக் கொடுத்தேன். அரை மணி பொறு. மறுபடியும் தயார் செய்கிறேன்.''

''அரை மணியா?...ஒரு நிமிஷம் பொறுக்க முடியாது.''

''அப்படியானால் இருக்கிறதைச் சாப்பிடு. நான் என்ன செய்யட்டும்? பஞ்சபட்ச பரமான்னமாக வைத்துக் கொண்டிருந்தால், வேண்டாம் என்பாய். இல்லாத அன்றைக்குக் கொண்டா என்கிறாய். என்னவோ கதை சொல்வானே, துர்வாசர் வந்து துரௌபதியிடம் சாப்பாடு கேட்டாராமே!...ஒரே ஒரு பருக்கை சாதம்தான் இருந்ததாம், அவர் வந்தபோது...''

''பாக்கிக் கதையையும் சொல்லேன், அத்தை. அந்த ஒரு பருக்கை சாதம் கிருஷ்ண பரமாத்மாவின் அருளால் அமோகமாகப் பெருகிப் போச்சே!''

''ஆட்சேபணை என்ன?''

''அந்த மாதிரி அத்தையின் கைபட்டு மீதி இருக்கிற பலகாரம் பெருகட்டுமே இன்றைக்கு!''

அத்தைக்குப் பெருமை பிடிபடவில்லை. பன்னிரண்டாவது வயதிலிருந்து அவளுடைய பராமரிப்பில் வளர்ந்தவன் ராஜன். இப்போது தேவலை. படிக்கிற காலத்தில் மகா அழும்பு. அவன் விலக்கு வாங்காத வம்புச் சண்டைகளே இல்லை. வேளா வேளைக்குச் சாப்பிட மாட்டான். ஹைஸ்கூல் காலத்திலேயே பிள்ளைக்குக் கார் வாங்கிக் கொடுத்து விட்டார் அவன் அப்பா. ஒரே பிள்ளை. ரொம்ப அருமையாக வளர்ந்தவன். அத்தைக்கு அவன்தான் பிள்ளை, பெண் எல்லாம். சின்ன வயசிலேயே கணவனை இழந்து, அண்ணன் வீட்டோடு வந்துவிட்டவள். ராஜனுக்குப் பாவாடை, சட்டை போட்டுப் போட்டோ எடுத்துப் பார்த்தாள். புடவை கட்டித் தாழம்பூ வைத்துப் பின்னி, ஜடைபில்லை, ராக்குடி சகிதம் இன்னொரு புகைப்படம். பெண்ணாய்ப் பிறக்காமல் போனானே என்பது அவளுடைய தாபம். ராஜனும் அத்தையின் சாயலாகத்தான் இருந்தான். நல்ல சிவப்பு. எடுப்பான நாசி. அவனுடைய அப்பா கறுப்புத்தான். அதென்னவோ அத்தையைக் கொண்டிருந்தான் ராஜன். அவள் இல்லாவிட்டால் அவன் எங்கே? அவனை வளர்த்து, சீராட்டி, மனிதனாக ஆக்கி விட்டிருப்பவள் அவள்தானே?

ராஜன் கீழே வந்தான். இன்றைக்கு விழித்த விழி நல்ல விழிதான். யார் முகத்தில் விழித்தான்? சரியாக ஐந்தே காலுக்குப் படுக்கையை விட்டு எழுந்து கீழே வந்தது நினைவில் இருக்கிறது. செய்தித் தாளை ஒரு புரட்டுப் புரட்டி விட்டுத் தோட்டத்தின் பக்கம் போனான். தரையெல்லாம் ஈரம் கசிந்திருந்தது. ஒரு வாரமாகவே நல்ல மழை



சக்திக்கும், வலிமைக்கும்!
பால்
கோகோ
சர்க்கரை
மால்ட்
Bournvita
THE IDEAL FOOD DRINK FOR STRENGTH AND VIGOUR


White
det
டெட்
whitens
while it washes
clean

முன் அறிவிப்பே இல்லா மல் கொட்டு கொட்டென்று கொட்டி விட்டது. தோட்டத்தில் மாரி முத்துவைக் காணவில்லை. ஆங்...கையில் பூக்குடலை யுடன் ஏமாதான் முதன் முதலில் அவன் கண்ணில் தென்பட்டாள்.

அட! அந்தத் 'தோட்டத்தில் மேயுது வெள்ளைப் பசு'வா இத்தனை அதிர்ஷ்டத்துக்கும் காரணம்!

தோட்டத்தில் நிஜமாகவே பசு மேய்கிறதோ! மனத் தோட்டத்தில், ஆசைப் பயிர்களை மாலினி கிள்ளி எடுக்கிறாள் என்றே தோன்றிற்று.

''பசி உயிர் போகிறது என்கிறாய்...... மோட்டு வளையைப் பார்க்கிறாயே!'' என்றாள்.

அவன் சிரித்தான். அசட்டுச் சிரிப்பு!

''பக்கத்து வீட்டுப் பெண் காரில் வந்தாள் போலிருக்கிறதே!''

''ஆமாம்... மழையாக இருக்கிறதே என்று அழைத்து வந்தேன்.''

''ஓஹோ!...''

''என்ன ஓஹோ?''

''ஒரு பெண் பிள்ளையை அழைத்துக் கொண்டு வரவேண்டு மென்று இத்தனை நாள் கழித்தாவது உனக்குத் தோன்றிற்றே!''

''அடடே, அதுவா சங்கதி? தினசரி மழை பெய்யட்டும் அத்தை... தினசரி ஒரு பெண்ணை அழைத்து வருகிறேன்.''

முடியாமல், ''சரி, அத்தை...நீயும்தான் பல வருஷங்களாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாய். போய்விட்டு வந்துவிடு'' என்றான்.

நிமிர்ந்து பார்த்தால் அவனுக்கும் கண் கலங்கி விடும். அவளுடைய அன்புக்கு, தியாகத்துக்கு என்ன கைம்மாறு செய்தான் இதுவரை? அந்த மனசை, அந்த இதயத்தை மகிழ வைத்தானா? இல்லையே! சும்மா ஊர் சுற்றுவது, மிரட்டியும் குழைந்தும் தன்போக்கிலேயே போவது, கேலியாகப் பேசிக் கொண்டிருப்பது இதெல்லாம்தான் அவன் சாதித்தவை. இவற்றுக்காகவே அவனைப் பார்க்கப் பார்க்கப் பூரிக்கிற ஒரு பெரிய

## மரமும் மனிதனும்

ஒரு நாள் அக்பரின் அவைக் களப் புலவராயிருந்த கானே கானம் என்பவர் நகரத் தெருக்களில் ஊர்வலமாகப் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது அவர் பகைவன் ஒருவன் அவர் மீது கல்லை எடுத்து எறிந்தான். ''அவனைப் பிடியுங்கள்!'' என்று கட்டளையிட்டார் கானே கானம். வீரர்கள் அவனைப் பிடித்து வந்து அவர் முன் நிறுத்தினார்கள். அருகில் வந்து கொண்டிருந்த அதிகாரி ஒருவரைப் பார்த்து, ''ஆயிரம் ரூபாய் கொடும் அவனுக்கு!'' என்று கூறினார் அவர். அவ்விதம் கொடுக்க அதிகாரி தயங்கிய போது கானேகானம் கூறினார். ''மரம் தன்மீது கல்லை விட்டெறிந்தவனுக்குப் பழம் கொடுக்கிறது. நான் என்மீது கல்லை விட்டெறிந்தவனுக்கு ஏதாவது கொடுக்க வேண்டுமல்லவா?'' என்றார்.



—தஞ்சை விந்தன்

அலைய வேண்டும்? நாளைக்கு நான் காசிக்குப் போய் விட்டால், உன்னை யார் கவனித்துக் கொள்வார்கள்?'' என்றாள்.

''நீ புறப்பட்டதும் நான் இங்கே இருந்தால்தானே, அத்தை? மைசூர்ப் பக்கம் போய் வரப் போகிறேன்'' என்றான் ராஜன்.

அவள் சிரித்தவாறே, ''பிக்னிக்கா ?'' என்று கேட்டாள்.

''உனக்கு விஷயம் தெரியுமா?''

''எனக்கு எப்படிடாப்பா தெரியும் ? வயசு அறுபதுதானே ஆகிறது எனக்கு!....''

ராஜன் நாணத்தால் தலை குனிந்தான். எல்லாவற்றையும் தெரிந்து வைத்துக் கொண்டேதான் அத்தை இத்தனை நேரமும் அவனை ஆழம் பார்த்திருக்கிறாள்! மாலினியுடன் அவன் வந்ததைப் பார்த்ததிலிருந்து கிளம்பிய பேச்சு திருமண சம்மதம் வரை அவனை ஆட்படுத்தி விட்டது. அதுபற்றி அவனுக்கு வருத்தமில்லை. பார்க்கப் போனால் திருமணமே கூடாது என்கிற விரதம் எதுவும் அவன் பூணவில்லையே !

சாப்பிட்டுவிட்டு மாடிக்கு வந்தான். மழை நிற்கவில்லை. தெரு விளக்குக் கம்பத்தருகில் மத்தாப்புப் பொறிகளாக மழையின் ஊசிக்கால்கள் இறங்கிக் கொண்டிருந்தன. ராஜன் அலுக்காமல் சலிக்காமல் அவற்றையே பார்த்துக் கொண்டு நின்றான். இதே போல் தன் மனத்துக்குள்ளும் பிரேமை மழை பொழிவதைத்தான் அவன் கண்டான்.

நல்ல வேளை. கிருஷ்ணன் அங்கே இருந்ததால்தான் மாலினி கார் சவாரிக்கு ஒப்புக் கொண்டாள். எடுத்த எடுப்பில் அவனுடைய அழைப்பை அவள் ஏற்கவில்லையே! ஆனால் வண்டிக்குள் அமர்ந்த பிறகோ பேச்சு சரளமாகிவிட்டது. கிருஷ்ணனுக்கு நன்றி சொல்லாமல் இராது.

ஆனால் நன்றியை அந்த மனோதத்துவ புரொபஸர் ஏற்பானோ மாட்டானோ!

ஊஹூம். ஏற்க மாட்டான். எதைத்தான் அவன் ஏற்றுக் கொண்டான்? விவாதம் இல்லாமல் எந்த விஷயத்தையும் அங்கீகரிக்க மாட்டான் அவன். அதிகம் படித்ததால் வந்த வினை இது. ஆனால் என்னதான் விவாதம் செய்தாலும், கிருஷ்ணனுடைய ஆராய்ச்சி தனி அழகு. நெருப்பு சுடும் என்பது சாத்தியமாக இருக்கலாம். 'ஏன் சுடுகிறது?' என்று கேட்பான் கிருஷ்ணன். உண்மையில் பண்புகளைக் காண்கிற பட்டைக் கண்ணாடி அவனுடையது. கொஞ்ச நாள் உபநிடதங்களில் நீந்திக் கொண்டிருந்தான் அவன். 'அடா ராமா! வேதாந்தப் பித்துப் பிடித்துக் கொண்டு விட்டதா உன்னை? இந்த வயதில் உபநிடதம் எதற்கு?' என்றான் ராஜன். ஏன் கேட்டோம் என்றாகி விட்டது. வயதைப் பற்றிய தப்பபிப்ராயத்தை ராஜன் மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. சின்ன வயதுக்கும் பெரிய விஷயத்துக்கும் விரோதமில்லை என்பதை உதாரணங்களோடு விளாசி விட்டு அடுத்தபடியாக உபநிடதம் என்றால் என்ன என்று காட்ட ஆரம்பித்து விட்டான் கிருஷ்ணன். அது முடிந்ததும் வேதாந்தத்துக்கு வந்தான். கடைசியில் பித்துப் பிடிக்கிற விஷயத்தை ஆராய்ந்தான்.

அன்றைக்கு ராஜனுக்குப் பித்துப் பிடித்து விட்டதாகவே தோன்றியது.

மாலினி அவனிடம் பயிலும் மாணவியாயிருக்கலாம். வேறு எந்த ரீதியில் அவனுக்கு அவளைத் தெரிந்திருக்க முடியும்? அவன் தான் ரிஷ்யசிருங்கர் ஆயிற்றே!

''குழந்தை, பால் சாப்பிடு...''

குங்குமப்பூ மணக்க, சீனிக் கற்கண்டுப் பொடி கலந்த பால் அமுதமாக இருந்தது. வாஸ்தவம்தான். அத்தை காசிக்குப் போய் விட்டால் இவ்வளவு பக்குவமாக யார் பால் காய்ச்சித் தருவார்கள் அவனுக்கு?

வழக்கமாகப் பால் பாத்திரத்துடன் கீழே போகிற அத்தை போகாமல் நாற்காலியில் உட்கார்ந்தாள்.

''என்ன அத்தை?''

''எண்ணெய் தேய்த்துக்கொள்ள மறந்து போய்விடாதே, குழந்தை... நான் காசிக்குப் போனால் திரும்பி வர ஒரு மாசம் ஆனாலும் ஆகும்....''

''ஆகட்டும். மறக்காமல் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுகிறேன்.''

''குழந்தை, நான் சொல்கிறேனென்று நினைக்காதே. ஜனக மகாராஜனுக்குப் பெண்ணாக இருந்தும், ராமனோடு காட்டுக்குப் புறப்பட்டாள் சீதை. இல்லையா?...அந்த மாதிரிப் பெண்தான் வேணும் குடும்பத்துக்கு.''

ராஜன் சிரித்தான். ஏது, இந்த விஷயத்தை அலசித் தீர்க்காமல் அத்தை விடமாட்டாள் போலிருக்கிறதே!

''வாஸ்தவம் அத்தை. எனக்கு வருகிறவள் சீதை மாதிரி இருக்கட்டும். ஆனால் நான் காட்டுக்குப் போய்த் திண்டாட மாட்டேன்'' என்றான் சிரித்தபடியே.

''உன் கேலிக்கு அளவே கிடையாதா? பூத்ததெல்லாம் பூவாகி விடாது குழந்தை. எல்லோரும் ராமனும் சீதையுமாக ஆகி விடமுடியாது'' என்றாள் அத்தை.

ராஜன் அவள் அருகில் வந்தான். நாற்காலியின் விளிம்பைப் பற்றியவாறு முழந்தாளிட்டு உட்கார்ந்தான். சின்ன வயசில் அத்தை கதை சொல்லும்போதெல்லாம் இப்படித்தான் அவள் காலடியில் அவன் அமருவான். ''அத்தை, அந்த சீதைக்கு ஒரு கௌசலை இருந்த மாதிரி நீ இருக்கிறபோது என்ன கவலை எனக்கு?'' என்றான்.

அத்தைக்குக் கண் கசிந்து விட்டது. கண்ணீரை அவன் பார்த்து விடக் கூடாதே என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள். மனத்தில் இருந்த கவலையெல்லாம் கரைந்து போய்விட்டது.

## 2

அத்தை புறப்பட்டுவிட்டாள். காசிக்குப் போய் வந்த பிறகுதான் வீட்டில் சுப காரியம் நடைபெறும் என்று ஜோசியன் ஒருவன் சொல்லியிருந்தானாம். அத்தைக்கு சோதிடத்தில் அபார நம்பிக்கை. காசிப் பயணம் என்று சொன்னவுடனேயே இத்தனை நாளும் பிகு செய்து கொண்டிருந்த குழந்தை திருமணத்துக்குச் சம்மதம் தெரிவித்துவிட்

டானே! காசிக்குப் போய் வந்ததும் திருமணமே முடிந்து விடாதா?

ஆனால் ஒரு மாதம் அவளைப் பிரிந்து எப்படி தேசாந்திரம் போய் வருவதென்று தான் அவனுக்குப் புரியவில்லை. இத்தனை நாள் பிரிந்திருந்ததே இல்லை. சமையற்கார மாமியிடம் படித்துப் படித்து எல்லா விவரமும் சொன்னாள். "தயிர் ஊற்றுநீர்கள் அவனுக்கு. நீர் மோராக இருந்தால்தான் சாப்பிடுவான் தெரிகிறதா?... அப்பளம் சுட்டுப் போடணும். பொரித்தால் பிடிக்காது தெரிகிறதா?... வெண்ணெய் ஒரு எலுமிச்சை அளவு வைக்க வேணும்..." இப்படி எவ்வளவோ.

அத்தை புறப்பட்டுப் போனதுமே சமையற்கார அம்மாளுக்குத் திடீரென்று குளிர் காய்ச்சல் வந்து விட்டது. மாரிமுத்து டாக்டரை அழைத்து வந்தான். குறைந்தது ஒரு வாரத்துக்கு அந்த அம்மாள் நடமாடக் கூடாது என்று டாக்டர் சொல்லிவிட்டார்.

இப்படியாக எடுத்த எடுப்பிலேயே ஒட்டனுக்கு ஒட வேண்டிய நிலை வந்தது.

மைசூர்ப் பயணம் அடுத்த வாரம்தானாம். பக்கத்து வீட்டுக்காரர் வந்து தகவல் கொடுத்தார். மாடியில் முன் வராந்தாவில் இரண்டாம் முறையாக அவரை வரவேற்றுப் பேசும் பாக்கியம் கிடைத்ததை எண்ணி மகிழ்ந்தான் ராஜன். "என்னால் ஒரு காப்பி கூடக் கொடுக்க முடியவில்லை உங்களுக்கு" என்றான்.

"அதனாலென்ன? நீங்கள் வேற்று மனிதரா? நாளை முதல் எங்கள் வீட்டிலேயே சாப்பிடலாம். காப்பியை இங்கேயே அனுப்பி விடுகிறேன். அதைச் சொல்லத்தான் வந்தேன்" என்றார் அவர்.

"அழகுதான் போங்கள். எனக்காக வீண் சிரமம் எதற்கு உங்களுக்கு?" என்றான் ராஜன்.

"அதெல்லாம் மூச்சு விடக் கூடாது. அன்றைக்கு நீங்கள் இல்லையென்றால் மாலினி மழைக்குத் தப்பி வீடு வந்திருக்க முடியுமா? ரொம்பத் தமாஷாகப் பேசினீர்களாம். சொல்லிச் சொல்லி மகிழ்ந்து போகிறாள்."

ராஜன் திடீரென்று இரண்டு சுற்றுப் பருத்து விட்டவன் போலானான். மாலினி அவனைப் பற்றிப் பேசினாளா? மகிழ்ந்து போனாளா? அந்த வீட்டில் அவளுடன் அவனும் உணவு கொள்ளப் போவதை எண்ணினால் மனம் எப்படிக் கிறுகிறுக்கிறது! தமாஷாகப் பேசுவதில் இத்தனை லாபம் உண்டா?

அடுத்த வீட்டுக்காரர் காலைக் காப்பியை அனுப்பி வைத்தார். ஏமாதான் எடுத்து வந்தாள்.

"ஆறிவிட்டதோ?" என்று கேட்டான்.

"பரவாயில்லை... இனிமேல் பிளாஸ்கில் கொண்டு வந்துவிடு" என்றான் அவன்.

"சாப்பிட எப்போது வருவீர்கள் என்று கேட்கச் சொன்னார்கள்."

"சாப்பிடவா? ஒன்பது மணிக்கே சாப்பிடலாம். அந்த வேளையில்தானே மாலினியும் நீயும் சாப்பிடுவது?"

"ஆமாம்."

"எனக்காகத் தனி உபசாரம் வேண்டாம். எல்லோருடனும் நானும் சாப்பிட்டுவிடுகிறேன்."

"சரி..."

பசிக்காகச் சாப்பிடுவது, சாப்பிடுவதற்காகப் பசிப்பது என்று இரண்டு வகை உண்டு



ஆனால் பசியும் இல்லாமல், சாப்பிடுவதற்காகவும் இல்லாமல், மாலினிக்காக இலை முன் அமர்வது எந்த வகையோ!

ராஜன் அடுத்த வீட்டுக்குள் அன்றைக்குத்தான் நுழைந்திருக்கிறான். சமையற்கட்டு என்பது ஒரு சிறிய அறையாகிய புகைக் கூடமாக இருந்தது. அதன் வெளிப்புறம் மூங்கில் தட்டி அடைத்துச் சாப்பாட்டு அறையாகத் தயாரித்திருந்தார்கள். அவனுக்கு வெளிப்புறம் இலை போடப்பட்டிருந்தது. அருகில் வீட்டுக்காரருக்கு எவர்சில்வர் தட்டு வைக்கப் பட்டிருந்தது. ஏமாவும் மாலினியும் புகைக் கூடத்துக்குள்ளேயே உட்கார்ந்து விட்டார்கள்.

''நீங்கள் சரியாகச் சாப்பிடவில்லை போலிருக்கிறதே!'' என்றார் அவர்.

''அத்தை கையால் சாப்பிட்டே பழக்கம் போலிருக்கிறது'' என்று கேலி செய்தாள் மாலினி.

''அதல்ல. நான் சரியாகச் சாப்பிட ஆரம்பித்தால் இங்கு யாருக்கும், எதுவும் மீதம் இருக்காது'' என்றான் ராஜன்.

''ஊஹூம். சுட்ட அப்பளம் போடுங்கள் சித்தி, அவருக்குப் பொரித்தது பிடிக்காது'' என்று கிலுகிலுத்தாள் ஏமா.

''வேண்டாம், எனக்காகச் சிரமப்படாதீர்கள்'' என்று ராஜன் முறையிட்டான்.

''நீர் மோராக ஊற்ற வேண்டும் அவருக்கு.'' இதுவும் ஏமா விட்ட எச்சரிக்கை. சமையற்கார மாமியிடம் அத்தை சொன்னதையெல்லாம் அருகிலிருந்து கேட்டுக் கொண்டிருந்திருப்பாள் போலிருக்கிறது.

சாப்பாடு முடிந்து வீட்டுக்குத் திரும்பிய போது ராஜனுக்குத் தன் வாழ்க்கை முறையில் பல மாறுதல்கள் தாமாகவே புகுந்து விட்டன என்று தோன்றிற்று. ஒரு கல்யாணம், கார்த்திகை என்று போனால்கூடச் சாப்பாட்டுக்கு உட்காராமல் வீட்டுக்கே வந்து விடுபவன் அடுத்த வீட்டில் சாப்பிடப் போகிறான். அவர்கள் போடும் வற்றல் குழம்பு பாயசமாக இனிக்கிறது.

மாலையில் பலகாரமும் காப்பியும் வந்தன. ஏமா கொண்டு வந்தாள். அவளோடு மாலினியும் வந்தாள். மாடியறையிலிருந்த புத்தக அலமாரியைப் பார்த்துவிட்டு, ''நீங்கள் இலக்கியப் பித்தரோ?'' என்று கேட்டாள்.

''ஊஹூம். இந்தப் புத்தகங்களை எல்லாம் நான் படித்ததே இல்லை. ஒரு சமயம் பார்க்க வேண்டும் என்று ஆசை வந்தது. வாங்கி வைத்தேன். அவ்வளவுதான்'' என்றான் ராஜன்.

''பொய் சொல்கிறீர்கள்!''

''இதோ பார் மாலினி. அது ஒன்றுதான் எனக்கு இன்னமும் கைவராத வித்தை: பொய் பேசத் தெரியாது எனக்கு.''

''நிஜமாக இதையெல்லாம் நீங்கள் படிக்கவில்லையா?''

''இல்லை'' என்றான் ராஜன்.

''எதற்காக அடுக்கி வைத்திருக்கிறீர்கள் பின்னே?''

''அவைகளைப் பார்த்தாலே போதும் என்றிருக்கிறது. சிலவற்றைப் பார்த்துக் கொண்டிருப்பதே ஆனந்தம் இல்லையா?''

அவனுடைய கேள்வி அவளுடைய காதில் விழவில்லை. அலமாரியிலிருந்த புத்தகங்களை எடுத்துப் பார்ப்பதும், மீண்டும் உரிய இடத்தில் வைப்பதுமாகப் பரபரப்புடன் இருந்தாள். ''நான் இரண்டு புத்தகங்கள் எடுத்துக்கொண்டு போகலாமா?'' என்று கேட்டாள் கடைசியில்.

''என்ன கேள்வி!... எடுத்துக் கொண்டு போகப்பட வேண்டும் என்பதற்காகவே தான் அவை இருக்கின்றன, மாலினி'' என்றான் அவன். பிறகு கேட்டான்: ''என்ன புத்தகம்?''

''மனோதத்துவ ஆராய்ச்சி, மனம் ஒரு மருந்து — இரண்டு புத்தகங்கள்.''

''உனக்கு மனோதத்துவம் பிடிக்குமா?''

''மோர்க்குழம்புக்கு அடுத்தபடி மனோதத்துவம்தான் எனக்கு உயிரானது.''

''ஓஹோ, எனக்கு மோர்க் குழம்பும் பிடிக்காது, மனோ தத்துவமும் பிடிக்காது.''

''ஏன்?''

''மோரின் ருசியைக் கெடுத்து அதைக் குழம்பு செய்வானேன்? மனம் என்பது உணர்ச்சிகளின் கூட்டு. அதை ஆராய்வது உப்பு, புளி, மிளகாயைப் பிரித்துப் பார்க்கிற மாதிரி.''

அவள் சிரித்தபடியே ஓடிவிட்டாள்.

மைசூர்ப் பயணத்துக்கு ஆயத்தங்கள் தடபுடலாக நடந்தன. ராஜன் துணிமணிகளை ஒரு பெட்டிக்குள் அடைத்துக் கொண்டான்.

''படுக்கை வேண்டாமா?'' என்று கேட்டான் மாரிமுத்து.

''வேண்டாம். ஒரு கம்பளிச் சால்வை இருக்கிறது. போதும்.''

இச்சமயம் கிருஷ்ணன் வந்தான். அவனும் மைசூர் வருகிறானாம்.

''உன்னை யார் சேர்த்தது கோஷ்டியில்?'' என்றான் ராஜன்.

''நன்றாக இருக்கிறதே உன் கேள்வி... கல்லூரி ஆசிரியர்களின் பிக்னிக்கில் சேர்ந்ததுமல்லாமல், ஒரு கல்லூரி ஆசிரியனைப் பார்த்தே இப்படிக் கேட்க என்ன தைரியம் உனக்கு!'' என்றான் கிருஷ்ணன்.

''கிருஷ்ணா, இப்படி ஊர் சுற்றிப் பார்க்கிற மனசு உனக்குக் கிடையாதேடா?''

''வாஸ்தவம். நான் ஊரைச் சுற்றிப் பார்க்க வரவில்லை. மைசூர் பல்கலைக் கழகத்தில் கர்னல் ஸ்டோன் என்பவர் இருக்கிறார். பெரிய ஞானி. மனோ தத்துவப் புலவர். அவரைச் சந்திக்கத்தான் பயணத்துக்கு ஒப்புக்கொண்டேன்.''

''அதுதானே பார்த்தேன்!''

''எந்த ஊராக இருந்தால் என்ன ராஜ். எல்லாம் மண்ணும் கல்லும்தானே கட்டடங்களாக எழுந்து நிற்கின்றன! எங்கும் மனிதர்கள்தானே வளைய வளைய வருகிறார்கள்!''

''உன் பார்வை அப்படி.''

கிருஷ்ணன் சிரித்தபடி பேசினான். அவன் வருகிறான் என்பதாலேயே பயணம் பயனுள்ளதாக ஆகிவிட்டது என்று ராஜனுக்குத் தோன்றிற்று.

''ஏமா, நீயும் உண்டா மைசூருக்கு?''

''உம்...''

# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம், பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சியளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்.

விலை ரூ. 3. (தபால் செலவு உள்பட)

**SHRI RAMTIRTH YOGASHRAM**

**DADAR - BOMBAY-14**

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3
போன்: 34258

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன

**GLOSTER**

**33KV**

**TYPE**

**POWER CABLES**

High Impulse Value
Low Power Factor
Non Draining
Mass Impregnated

ESTED & CERTIFIED BY
**ATIONAL TEST HOUSE,**
**LIPORE**

anufactured strictly
cording to ISS 692




**ORT GLOSTER**
**DUSTRIES LTD.**

A Netaji Subhas Road, Calcutta-1.
nches: Harilela House, Mint Road, Bombay-1
Connaught Circus, New Delhi-1
ajpatkunj, Napier Town, Jabalpur · 6 Park Road, Freny Manor, Lucknow-1.



POND'S






''தோட்டத்து உதிரிப் பூவெல்லாம் நாளை உன்னைக் காணுமல் ஏங்கும் இல்லையா?''

அவள் சிரித்தாள். ''உதிரிப் பூக்களுக்கு ஏக்கம் கூட உண்டா?'' என்று கேட்டாள், பட்டென்று.

அடேயப்பா! ராஜன் அதிர்ந்து விட்டான் ஒரு கேள்வி என்ருலும் என்னமாய்க் கேட்டு விட்டாள்! வாஸ்தவம்தானே. உதிரிப் பூவுக்கு ஏக்கம் ஏது?

அவள் இறங்கிப் போவதைப் பார்த்த ராஜன் அவள்தானு 'தோட்டத்தில் மேயுது வெள்ளைப் பசு' என்று பாடினுள் என்று வியந்து போனுன்.

கிருஷ்ணன் தலையணை போன்ற புத்தகம் ஒன்றை வைத்துக் கொண்டு வழி நெடுகப் படித்துக்கொண்டே வந்தான். எதிர் வரிசையில் மாலினி உட்கார்ந்திருந்தாள். கோடியில் ஏமா. இடையே அடுத்த வீட்டுக்காரரும், அவருடைய மனைவியும், மாலினியின் தம்பி ரகுவும். இரண்டு வரிசைகளுக்கும் இடையே சாப்பாட்டு மூட்டை, சில பைகள், ஒருசில கூஜா வரிசை.

அடுத்த வீட்டுக்காரர் ஒரு பழைய நோட்டுப் புத்தகத்தில் ஒரு நயா பைசா விடாமல் செலவினங்களைக் குறித்து ஒட்டு மொத்தமாக எவ்வளவு ஆயிற்று என்று கணக்கிட்டுக் கொண்டிருந்தார்.

''உலகம் ரொம்பக் கெட்டுப் போச்சு ஸார். எதை எடுத்தாலும் ஒன்றுக்குப் பத்துப் பங்கு விலை. இந்த ரீதியில் போனுல் காலம் தள்ளுவதே கஷ்டமாகப் போய்விடும்.'' என்ருர் அவர் நோட்டை மூடியபடியே.

''ஆமாம்'' என்ருன் ராஜன்.

''எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. இந்த மைசூருக்கு நாலு ரூபாய்தான் சார்ஜ் அப்போது. இப்போதோ விள்ளாமல் விரியாமல் பதினெட்டு ரூபாய்...''

''ஆமாமாம்.''

''கலி காலம் ஸார், கலிகாலம்!''

ராஜன் 'ஆமாமாம்' என்று தலையாட்டுவதற்குள் கிருஷ்ணனின் குரல் கேட்டது. ''காலத்தைக் குற்றம் சொல்வதில் பலனில்லை. நல்லதும் கெட்டதும் எப்போதும் உள்ளவைதான். எல்லாம் மனசின் கற்பனை'' என்ருன்.

''காலம்கூடவா?'' என்று கேட்டான் ராஜன்.

''சந்தேகமில்லாமல்.''

''நேற்று, இன்று, நாளை என்பதெல்லாம் எப்படிக் கற்பனையாகும்? காலம் உனக்காகவும் எனக்காகவும் காத்திருப்பதில்லை, கிருஷ்ணு. அது போகிறது. போய்க் கொண்டே இருக்கிறது.''

''ஊஹூம்... காலம் போவதில்லை. வருகிறது. வந்து வந்து உன் முன்னுல் நிற்கிறது. அதைத்தான் நீ நேற்று, இன்று, நாளை என்று பாகுபடுத்துகிருய். நேற்றைக்கு வந்த சூரியன்தானே இன்றைக்கும் வந்திருக்கிருன். நாளைக்கும் அவன்தானே வருவான்?''

அவனுடைய கேள்வி நியாயமாகவே தோன்றிற்று.

இச்சமயம் மாலினியின் குரல் எழுந்தது. அவள் சொன்னுள்: ''காலம் போவதுமில்லை வருவதுமில்லை. அது நிலையாக இருக்கிறது.



'உங்கப்பா மிருகங்களிடம் அன்பா இருப்பாரா?'

'ரொம்ப அன்பு! அவருடைய வண்டி மாட்டு மேலே எவனுவது கைவச்சா அவனைக் கொன்றுவிடுவார்.'

சூரியன் நேற்றும் வரவில்லை, இன்றும் வரவில்லை. வருவது போலத் தோன்றுகிறது நமக்கு. அவ்வளவுதான்.''

ராஜன் அதிர்ந்து விட்டான். மாலினியின் தர்க்கம் மிகமிக நியாயமாகவே தோன்றிற்று.

கிருஷ்ணன் ஆரம்பித்து விட்டான். அவன் பேசுவதைக் கேட்பதற்காகவே இப்படி ஏதாவது விவாதம் வராதா என்றிருந்தது ராஜனுக்கு. மாலினியும் அந்த விவாதத்தில் பங்கு கொண்டு சூடேற்றினுள். சில சமயம் கலகலவென்று அவள் சிரிப்பாள். சில சமயம் முகத்தைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்திருப்பாள். கூடியவரை அடுத்த வீட்டுக்காரரின் கட்சியையே ஆதரிப்பதென்ற கொள்கையை ராஜன் கடைப்பிடித்தான். மாலினியுடன் பழகுவதற்கு இதுவே நல்ல உபாயமாகப் பட்டது. ஆனுல் கிருஷ்ணன் லேசுப்பட்டவனில்லை. பெண்களைப் பற்றிப் பொதுவாகச் சொல்ல ஆரம்பித்துச் சிக்கலை உண்டாக்கி விட்டான்.

''பிரமன் பெண்களைப் படைக்க அதிகம் உபயோகிக்கும் சரக்கு பேதைமைதான்'' என்ருன் அவன். ''அதை மறைப்பதற்காகவே கொஞ்சம் தளுக்கு, கொஞ்சம் குலுக்கு, கொஞ்சம் மினுக்கு என்கிற மாயப் பொடிகளைத் தவா பத்து சதவீதம் தெளிக்கிருன்.''

மாலினி விடுவாளா? ''ஆணைப் படைப்பதில் தவா பத்து சதவீதம் அகந்தை, முரட்டுத்தனம், கர்வம், இதை உபயோகிக்கிருன் பிரமன். கயநலமே உருவானவன் ஆண்'' என்ருள்.

கிருஷ்ணன் சிரித்தான். ''ஆண் தன்மை ஓங்கி நிற்க விரும்புவது. ஆளுகை என்பதே ஆண் தன்மை. பெண் அவனுக்கு அடங்கியாக வேண்டியவள்தான். இதற்குப் பிர

மனைக் குறை சொல்லி என்ன பயன்?'' என்று கேட்டான்.

''அது அந்தக் காலம். இப்போது பெண் விழித்துக் கொண்டு விட்டாள்'' என்று சீறினாள் மாலினி.

''ஓ...அப்படியானால் இனி பெண் ஆணை அடக்கி ஆளுவாள் போலிருக்கிறது!'' கிருஷ்ணன் சிரித்தான் உரக்க.

விவாதம் திசை தப்பி விட்டது. ஆணின் வஞ்சத்தை அவள் நிரூபிக்க முயல, பெண்ணின் கவர்ச்சி மயக்கை அவன் காட்ட முயல, இருவருக்கும் ஓயாத சொற்போர். ராஜனுக்கு இந்தக் காட்சி ரசமாக இருந்தது. சும்மாவா? தலையணை தலையணையாகப் படித்துக் கொண்டு வந்திருப்பவன் அல்லவா கிருஷ்ணன்!

ஏமா ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். எல்லோருடைய பேச்சுக்களையும் கேட்டுக் கொண்டு சில சமயம் சிரிப்பதும், சில சமயம் முகத்தைத் திருப்பிக் கொள்வதுமாக. இந்தப் பெண்களுக்கே சிரிப்பதையும் முகத்தைத் திருப்பிக் கொள்வதையும் தவிர வேறெதுவுமே தெரியாதோ என்று சந்தேகம் வந்தது ராஜனுக்கு.

**மை**சூர் போகிறவரை இவ்வாறே விவாதங்களும் விளக்கங்களுமாகப் பொழுது போயிற்று. மன்னிக்கவும். பொழுது போகவுமில்லை, வரவுமில்லை, நிலைத்திருந்தது. ராஜனுக்கு அந்தப் பயணம் முடிவடைவதில் விருப்பமில்லை. எதிரே மாலினியும் அருகில் கிருஷ்ணனும் இருக்கும்வரை பேச்சுக்குப் பொருள் தேட வேண்டிய அவசியமில்லை. 'மௌனம்' என்ற தலைப்பில் கூட விவாதம் கிளம்பிவிடும்.

''ஆரம்பத்தில் இந்தப் பிரபஞ்சத்தில் இருட்டுத்தான் இருந்தது. உபநிடதம் கூறும் உண்மை இது'' என்றான் கிருஷ்ணன்.

''இப்போது இருட்டு இல்லையோ?'' என்று கேட்டாள் மாலினி.

''இருக்கிறது. ஆனால் வெளியே அல்ல. மனிதனுடைய மனசுக்குள்...பிரம்மம் இருக்க வேண்டிய இடத்தில் இப்போது இருட்டின் ஆட்சி நடக்கிறது....''

''விவாதத்தை முடக்கி விடுவதில் நீங்கள் வல்லவர்!... ஆண் தன்மையே வஞ்சகம் நிறைந்தது'' என்றாள் அவள்.

''இப்படி நினைப்பதற்குக் காரணம் உன் மனசில் இருட்டு இருப்பதால்.''

கிருஷ்ணன் ஒரு நாளும் அவளுக்காகப் பரிந்து பேசியதில்லை. விவாதத்தில் தோற்கவே அவனால் முடியாது. இவ்வளவு பிடிவாதக்காரனுடன் என்ன பேச்சு என்று மாலினியும் ஒதுங்குவதில்லை. கட்சி கட்டிக் கொண்டு அவர்கள் நடத்திய சொற்போர் இறுதியில் தீராது போகவே முடிந்துவிட்டது.

கடைசியில் மைசூர் வந்ததும் கிருஷ்ணன் பல்கலைக் கழகத்தைப் பார்க்கப் போய் விட்டான். பிருந்தாவனத் தோட்டங்களைக் காண வரவில்லை அவன். அரண்மனையும் அகல வீதிகளும் அவனுக்குப் பொருட்டில்லை. ''நல்ல காலம் மனிதர் போய்த் தொலைந்தார்! கல்லூரியில் கூட இப்படித் தான். விவாதம் என்று ஆரம்பித்தால் விட மாட்டார்!'' என்றாள் மாலினி.

அடுத்த வீட்டுக்காரர் அதிகம் பேசவில்லை. நோட்டுப் புத்தகத்தில் அடிக்கடி கணக்கு எழுதுகிற காரியத்தைத் தவிர வேறெதுவும் செய்ய விரும்பாதவர் போல் இருந்தார். மாலினிதான் ஏதாவது பேசுவாள். ஏமா வாயே திறப்பதில்லை.

பிருந்தாவனத் தோட்டங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பு முன் ராஜன் அவர்களை ஓர் உணவு விடுதிக்கு அழைத்துச் செல்ல விரும்பினான்.

''வேண்டாம்'' என்றார் மாலினியின் தந்தை.

''பசியோடு திரும்ப முடியுமா? இலேசாக டிபன் சாப்பிட்டுவிட்டுப் போகலாமே!'' என்றான் ராஜன்.

''ஆமாப்பா. பசி உயிர் போகிறது'' என்றாள் மாலினி.

''அதெப்படிப் பசிக்கும்? இந்தப் பசியைக் கூடத் தாங்காவிட்டால் அப்புறம் என்ன பெண் ஜன்மம் அது!'' என்று சீறினார் தந்தை.

அவருடைய கோபத்துக்குக் காரணத்தைப் புரிந்து கொள்ளாத ராஜன் அசந்தர்ப்பமாகச் சிரித்தவாறே, ''பரவாயில்லை.. மாலினியைக் கோபித்துக் கொள்ளாதீர்கள். நாம் மைசூர் போவதற்குள் பசி நிச்சயமாக நம்மை வாட்டிவிடும்.. என்னுடைய 'ட்ரீட்'டாக இருக்கட்டும். வாருங்கள்'' என்றான்.

''செலவுக்காக நான் தயங்கவில்லை.... ஊம்.... சரி.... சாப்பிட்டு விட்டே போவோம்'' என்று ஒப்புக் கொண்டார் தந்தை.

சாப்பிட்டுவிட்டு வெளியே வரும்போது அவரே பிடிவாதமாக 'பில்'லைக் கொடுத்தார். ராஜனின் முறையீடுகள் எடுபடவில்லை. இப்படி நேரும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

''வாருங்கள். சில சமயம் அப்பாவுக்குக் காரணம் இல்லாமல் கோபம் வந்துவிடும். அப்போது யார் சமாதானம் செய்தாலும் முடியாது'' என்றாள் மாலினி.

அவருடைய கோபம் மைசூர் திரும்புகிற வரை மௌனத்துக்குள் புகைந்து கொண்டிருந்தது. வழி நெடுக யாரும் பேசவுமில்லை. கிருஷ்ணன் இல்லாது போனானே என்றிருந்தது ராஜனுக்கு. அவன் இருந்தால் அவருடைய கோபத்தின் காரணத்தை அலசிச் சொல்லிவிடுவான்.

கிருஷ்ணன் இருந்தான் அறையில், கனத்த புத்தகத்துக்குள் நெளிந்து கொண்டு.

''பிருந்தாவனத்துக்கு நீ வரவில்லையே, கிருஷ்ணா... எத்தனை அழகான சந்தர்ப்பத்தை இழந்து விட்டாய் தெரியுமா?'' என்றான் ராஜன்.

கிருஷ்ணன் சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறாய்?''

''ராஜு, உன் பார்வை வேறு. என் பார்வை வேறு. நீ பூவைப் பார்க்கிறாய். நான் வேரைப் பார்க்கிறேன். மனிதனும், தாவரமும், நதியும், மலையும், சூரியனும் சந்திரனும் தவிர உலகில் என்ன புதுமை இருக்கிறது?'' என்றான் அவன்.

ராஜனுக்குச் சிரிப்பு வந்தது. "மனித னுக்குள்ளே கலை உணர்வும் அழகுணர்ச்சி யும் இருக்கின்றனவே அவற்றை நீ மதிக்க வேண்டாமா?" என்று கேட்டான்.

"கலை உணர்வு என்பது உண்மைக்கு நீ கொடுக்கிற பொய் உருவம்தானே? அழகு என்பது கவர்ச்சிதானே?" என்றான் கிருஷ் ணன்.

"இல்லை, கிருஷ்ணா. அழகிலும் கலையிலும் தான் தெய்வம் குடியிருக்கிறது" என்றான் ராஜன். ஒரு கணம் அவனுக்கு வியப்பாக இருந்தது. இவ்வளவு அழகான பதில், தெளி வான விளக்கம் அவனுக்கு எப்படி வந்தது? சகவாச தோஷமாக இருக்குமோ?

கிருஷ்ணன் சிரித்தான். "தெய்வம் அழ கிலும் இல்லை, கலையிலும் இல்லை. அழகு நிலையானதல்ல. கலையின் அடிப்படையே கற்பனை. இந்த இரண்டிலும் தெய்வம் இருக்க முடியாது" என்றான்.

"நல்லவேளை, தெய்வமே இல்லை என்று சொல்லாமற் போனாயே!"

"அதைச் சொல்வதில் லாபமில்லை." கிருஷ்ணன் பட்டைக் கண்ணாடியைக் கழற்றி னான். அவற்றின் வழியே பார்த்தபோது பெரிதாகத் தெரிந்த அவன் கண்கள் கண் ணாடி கழன்றதும் சிறியனவாகத் தெரிந்தன. "தெய்வம் எங்கே இருக்கிறது தெரியுமா? ராஜ்? அது சத்தியத்தில் கோயில் கொண் டிருக்கிறது. உண்மைதான் தெய்வம்...."

சிரித்துக் கொண்டே கிருஷ்ணன் போய் விட்டான். ராஜனுக்கு வியப்பே எஞ்சிற்று.

"எல்லாம் வசதியாக இருக்கிறதோ?" என்று விசாரித்துக் கொண்டே அடுத்த அறைக்குப் போனான் ராஜன். கிருஷ்ண னும் போய்விட்ட பிறகு தனியாக இருக்கப் பிடிக்கவில்லை அவனுக்கு.

"இருக்கிறது" என்றார் மாலினியின் தந்தை. குரலில் கரகரப்பும் கராரும் தெறித்தன.

ராஜன் லட்சியம் செய்யாமல் எதிரே உட்கார்ந்தான்.

"ஹோட்டல் பில் விஷயத்தில் நீங்கள் இவ்வளவு கடுமையாக நடந்து கொண் டிருக்கக் கூடாது" என்றான், வேறே எதுவும் பேசத் தோன்றாமல்.

"அதை நீங்கள் தந்தாக வேண்டும் என்று மட்டும் எங்கே சொல்லி யிருக்கிறது?" என்று கேட்டார் அவர்.

"ஹி...ஹி.... அதல்ல... நான்..."

"சாப்பிட்டதெல்லாம் ஜீரணமாகிவிட் டது. இந்த பில்லை மட்டும் ஜீரணம் செய்ய முடியவில்லையோ உங்களால்? யார் கொடுத் தால் என்ன? எங்கே உங்கள் நண்பர்?"

"நூல் நிலையத்துக்குப் போயிருப்பான்."

"நிறையப் படிக்கிறார் போலிருக்கிறது. ஆனால் புத்தகத்தில் மட்டும் எல்லாம் அடங்கி விடாது. —வெளி உலகத்தைப் பார்த்தால்தான் ஞானம் வரும்."

"ஆமாமாம்.. பெரிய வேதாந்தி மாதிரி பேசுகிறான்!"

இச்சமயம் மாலினி வந்தாள். "வேதாந்தி இல்லை அவர். வேதாந்திக்கு இதயம் உண்டு. உங்கள் நண்பருக்கு அது இல்லை" என்றாள்.



"கிணற்றுச் சகடைக்குக் கிரீஸ் போட வேண்டி யிருக்கு டாக்டர்! பெனிசிலின் ஆயின்ட்மென்ட் கொஞ்சம் தருகிறீர்களா?"

இதை ராஜனால் ஏற்க முடியவில்லை. மாலினி சொன்னாள் என்பதற்காக அசட் டுச் சிரிப்புச் சிரித்தான். "அவன் அறிவாளி. புத்தி கூர்மை படைத்தவன்" என்றான்.

"இருக்கட்டுமே. சின்னச் சின்ன நீர் ஊற் றுக்கள் இருக்கின்றன என்பதால் பாலை வனத்துக்கு மதிப்பு வந்துவிடுமா? அழகை மதிக்காத மனசுக்குப் புத்திசாலித் தனத்தால் என்ன பிரயோஜனம்?" என்றாள் மாலினி.

அது உண்மைதான் என்று தோன்றிற்று ராஜனுக்கு.

"என்னவோ விவாதம், என்னவோ பேச்சு இவர்கள் எல்லாம் பேசுவதைக் கேட்டால் ஏனடா இந்தக் குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லி வைத்தோம் என்றிருக்கிறது" என்றார் தந்தை.

"படித்தால்தான் இதெல்லாம் வருமா அப்பா? படிக்காமலேயே ஆராய்ச்சி செய்யக் கூடாதா?" என்று கேட்டாள் பெண்.

"நாளைக்குப் புக்ககம் போனால் என்ன செய்வாயோ போ. அங்கேயும் உன் மாமி யாரிடம் தத்துவ விவாதம் செய்தால் அழகாகத்தான் இருக்கும்."

"தத்துவம் தெரிந்த பிறகு மாமியாரிடம் பேசக் கொடுப்பார்களா அப்பா?" மாலினி சிரித்தாள்.

"சரி, சரி. எனக்குப் பசிக்கிறது. மிஸ்டர் ராஜன், போவோமா?" என்று எழுந்தார் தந்தை.

ராஜனுக்குப் பசியில்லை. போகவும் விருப்பமில்லை. ஆனால் அதைச் சொல்ல முடியுமா? வேண்டா வெறுப்பாக அவ ருடன் கிளம்பினான். மாலினியும் ஏமாவும் பசியில்லை என்று சொல்லி விட்டார்களாம். உடன் வரவில்லை.

திரும்ப வந்தபோது அறையில் கிருஷ்ணன் இருந்தான். கனத்த புத்தகத்துக்குள் ஆழா மல், சாய்வு நாற்காலியில் படுத்திருந்தான்.

தலையணையால் முகத்தை மூடிக்கொண்டிருந்த அவனைப் பார்த்ததும் ராஜன் சிரித்தபடியே, ''புத்தகத்தைத் தலையணையாகவும் தலையணையைப் புத்தகமாகவும் பயன்படுத்த உன் ஒருவனால்தான் முடியும் கிருஷ்ணா... எப்போது வந்தாய்?'' என்றான்.

''இப்போதுதான்.''

''ஏன் இப்படி விழுந்து கிடக்கிறாய்?''

''ஒன்றுமில்லை.''

''தலை வலிக்கிறதா?''

''ஊஹூம்.''

''பின்னே என்ன?''

''நெஞ்சு வலிக்கிறது.''

''அடப் பாவி! நெஞ்சு என்று ஒன்று இருக்கிறதாடா உனக்கு?... பெரிய வேதாந்தி ஆயிற்றே நீ!'' என்று சிரித்தவாறே அவனருகில் சென்ற ராஜன் தலையணையை இழுத்தான். இழுத்தவன் திடுக்கிட்டான். கிருஷ்ணனின் விழிகளில் நீர் ஆறாக ஓடிக்கொண்டிருந்தது. ''ஏன் அழுகிறாய் கிருஷ்ணா?'' என்று கேட்டான் ஆதுரத்துடன்.

அவன் பெருமூச்சு விட்டான்.

''சொல்லேன். என்ன வந்துவிட்டது உனக்கு? கர்னல் ஸ்டோன் பெயருக்கேற்றபடி கல்லாக இருந்து விட்டாரா?''

அவன் எழுந்து உட்கார்ந்தானே தவிர பதில் ஏதும் சொல்லவில்லை.

''என்ன நடந்தது?''

''ஒன்றும் நடக்கவில்லை.'';

''அப்புறம் ஏன் அழுகிறாய்?''

''அதனால்தான் அழுகிறேன்.. ஏதாவது நடந்திருந்தால் அழுவானேன்? ராஜ், உனக்குப் புரியாது. தயவு செய்து என்னை எதுவும் கேட்காதே.''

''இதோ பார், கிருஷ்ணா. நீ பெரிய தத்துவப் புலவனாக இருக்கலாம். ஆனால் அழுகைக்குக் காரணம் சொல்லாமல், எனக்குப் புரியாதென்றால் அதை ஏற்க மாட்டேன். எனக்கு அழுது அழுது நிறையப் பழக்கம். எல்லாவகை அழுகையும் எனக்கு அத்துபடி.''

கிருஷ்ணன் இலேசாகச் சிரித்தான். ''உனக்குப் புரியாது ராஜ்'' என்றான் மறுபடியும்.

''எல்லாம் புரியும் சொல்லு.''

''முதல் முதலாக என் தத்துவ விளக்கம் தோற்றுப் போய்விட்டது ராஜ்''.

''அப்பாடா! இதுதானா?''

''பார்த்தாயா, இது சாமான்ய விஷயமாக உனக்குத் தோன்றுகிறதல்லவா? அதனால்தான் சொல்ல மாட்டேன் என்றேன்.''

''கிருஷ்ணா, தோல்வி என்பதே ஒரு வகை வெற்றிதான்; விட்டுத்தள்ளு.''

''எதை விடுவது? எதைத் தள்ளுவது?''

''விசாரத்தை விடுவது; சாப்பாட்டை உள்ளே தள்ளுவது... உம் எழுந்திரு. நன்றாக அழுதாய் போ!''

''ஊஹூம். என் விளக்கம் தோற்பதை என்னால் சகிக்க முடியாது. அதுவரையில் எனக்கு உணவு வேண்டியதில்லை.''

கிருஷ்ணன் எழுந்து விட்டான்.

அவன் போனதும் அந்தச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தான் ராஜன். ஒரு விளக்கம் தோற்றதற்காக இவ்வளவு அழுகிறானே, வாழ்க்கையில் அழ வேண்டிய கட்டங்கள் இன்னும் எவ்வளவோ உள்ளனவே, என்ன செய்வானோ! அதை நினைத்தாலும் சிரிப்புத்தான் வந்தது ராஜனுக்கு.

பூக்குடலையுடன் ஏமா எங்கோ போய்க்கொண்டிருந்தாள்,

''ஏமா!'' என்று அவளைக் கூப்பிட்டான் ராஜன். அவள் நின்றாள்.

''இங்கே உனக்குப் பூ ஏது?'' என்று கேட்டான்.

அவள் சிரித்தவாறே ''பூ மலராத இடம் கூட உலகில் உண்டா?'' என்று திருப்பிக் கேட்டாள்.

இரண்டாம் முறை அவளிடம் தோற்றுப் போய்விட்ட ராஜனுக்குக் கோபம் வந்தது. ''வரவர நீ கேட்கிற கேள்விகள் என்னைத் திணற அடிக்கின்றன. ரொம்பத் தத்துவம் தெரிந்தவள் மாதிரி பேசுகிறாய்'' என்றான்.

''எனக்குத் தத்துவம் தெரியாது ஸார்'' என்றாள் அவள். அதோடு நில்லாமல் ''தத்துவம் ரொம்ப அபாயகரமானது. அது ஒரு பித்து என்று மாலினி சொல்வாள்'' என்றாள்.

''மாலினியா இப்படிச் சொல்கிறாள்?''

''ஆமாம்... ஆனால் நான் சொன்னேன் என்று சொல்லிவிடாதீர்கள். அப்புறம் என் தலை உருளும்.''

''பயப்படாதே. நம்பிக்கையோடு நீ என்னிடம் சொல்லியிருக்கிறபோது அதை நான் வெளியிடுவேனா? — ஆனால் ஏமா, பார்க்கப் போனால் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையான பித்துப் பிடிக்கத்தான் செய்கிறது இல்லையா?''

அவள் தலையை ஆட்டினாள். போயும் போயும் இதையெல்லாம் ஏமாவிடம் சொல்கிறோமே என்று தோன்றிற்று ராஜனுக்கு. அவளுக்கு என்ன தெரியும்? முழங்காலுக்குச் சற்று கீழ்வரை பாவாடை தரிக்கும் சிறுமிதானே!

அவள் போய்விட்டாள்.

பூக்கள் எங்கும் மலரும். கடவுளும் எங்கும் இருக்கிறார். பூஜையை வழக்கம் போல் நடத்திவிடலாமென்ற நம்பிக்கையுடன் ஏமா புறப்பட்டுப் போவதைப் பார்த்த ராஜனுக்கு அவளைப் பற்றிய தன் கணக்கு பிசகாக இருக்குமோ என்று சந்தேகம் வந்தது.

மறுநாள் ஸ்ரீரங்கப் பட்டணம் போய் வந்தார்கள். கிருஷ்ணன் அங்கும் வரவில்லை.

''அவனும் வந்தால் நன்றாக இருக்கும்'' என்றான் ராஜன்.

''இருக்காது; வராததே நல்லது'' என்று சிரித்தாள் மாலினி.

''அதுவும் சரிதான். ஏதாவது விவாதம் செய்வான்.''

''அதற்காக நான் சொல்லவில்லை. விவாதத்தில் குழப்பத்தை உண்டாக்கி விடுவார். விதண்டாவாதம் செய்தே பழகிவிட்டது அவருக்கு.''

மாலினியுடன் பேசவும் அவளோடு பழகவும் அரிய சந்தர்ப்பமாக அமைந்து விட்டது பயணம். ஆனால் இடையிடையே நோட்டுப் புத்தகத்துடன் தந்தை குறுக்கிட்டார். ராஜனின் சுவாதீனமான போக்கை அவர் ரசிக்கவில்லை என்பது வெளிப்படையாகவே தெரிந்தது. இது அவனுக்குத் துயரத்தைத் தந்தது.

# நல் வசந்தக் கனியமுத நய விருந்தாம்
# நாவினிக்க ஜிலுஜிலுக்கும் ரெக்ஸ் ஜெல்லி!

களஞ்சியம் போன்ற கனிச் சுவை! அதுதான் ரெக்ஸ் ஜெல்லி குடும்பத்தின் அபிமான இனிப்புப் பண்டமாக விளங்கக் காரணம். ஆவலூண்டும் 6 சுவை வகைகளில் உள்ளது: ஆரஞ்சு, லெமன், அன்னாசி, ஸ்ட்ராபெர்ரி, ராஸ்ப்பெர்ரி, செர்ரி.

இலேசானது, ஊட்டமளிப்பது, தயாரிக்க இலகுவானது. தனிப்பட உண்பதற்கும் இனியது ரெக்ஸ் ஜெல்லி—அதன் படிகங்களை வெந்நீரில் கரையவைத்துக் குளிர விட்டு உறையவைத்தால் ஆயிற்று. டப்பியிலுள்ள அல்லது ஸ்டேவ்டு பழங்களோ, ஸ்பாஞ்ச் கேக்குகளோ அத்துடன் சேர்த்து அணி செய்து, கஸ்டர்டு அல்லது க்ரீமை மேலிட்டுப் பரிமாறவும் செய்யலாம்.



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.




இப்போது
புதிய
பாக்கிங்கில்

Bensons-618A/5 TAM

மைசூர் திரும்பியதும் அறைக்குள் புதைந்து கொண்டான் ராஜன். அவனை அவர் புரிந்து கொள்ளவேயில்லை. மாலினி யைக்கூட அவர் புரிந்து கொள்ளவில்லையே! யாரிடம் சொல்லி மனசை ஆற்றிக்கொள்வது?

ஏமா பூக்குடலையுடன் வருவது தெரிந்தது.

''ஏமா!''

''என்ன?''

''எனக்கு ஒரு உதவி செய்வாயா?''

''உதவியா? நானு ?''

''ஆமாம்.... உன்னால்தான் முடியும்.'' ராஜன் சிரித்தான். ''இன்றைக்குச் சாயந்திரம் ஏதாவது ஒரு சினிமாவுக்குப் போகலாம் என்று ஆசை..... தனியாகப் போய்வர மனசில்லை.''

அவள் முகம் வெளிறிவிட்டது. ''ஊஹூம். சித்தி கோபித்துக் கொள்வாள். நான் வர முடியாது!'' என்றாள்.

அட அசட்டுப் பெண்ணே! உன்னையா அவன் அழைக்கிறான்! மாலினி ஒரு வேளை வரக் கூடுமோ என்று தெரிந்து கொள்ள அல்லவா பேச்சை வளர்க்கிறான்!

''மாலினி வரக்கூடுமா ஏமா?'' அவன் கேட்டே விட்டான்.

அவள் சற்று யோசித்தாள். ''முடியும் என்றுதான் நினைக்கிறேன். அவளுக்குச் சினிமாப் பித்து உண்டு'' என்றாள்.

''முடியுமா? நிஜமாகவா?''

''உம்....!''

''எப்படி உறுதியாகச் சொல்கிறாய்?''

''ஒருத்தர் மனம் இன்னதென்று தெரியாதா ?''

ஒரு . டன் பனிக்கட்டி தலையில் இறங்கினாற்போல் இருந்தது ராஜனுக்கு. இந்தப் பெண் நிஜமாகவே புத்திசாலிதான். மாலினியின் மனம் தனக்குத் தெரியும் என்றல்லவா சொல்கிறாள் ? அவனுடன் திரைப்படத்துக்கு மாலினி வரக்கூடும் என்பதே அவனுக்கு ஆனந்தமாக இருந்தது.

''மிக்க நன்றி ஏமா!'' என்றான்.

அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவனைப் பரிகசிப்பது போல் இருந்தாலும் அவனுக்கு ஆறுதல் கூறுவதாகவும் இருந்தது. அவனுக்கு ஆறுதல் வேண்டும். தாபத்துக்கு ஒரு வடிகால் வேண்டும். அது அந்தச் சிரிப்பில் இருந்தது.

ஏமா போய் விட்டாள்.

பொல்லாத பெண்ணாக இருக்கிறாளே !

நிம்மதியாகச் சாய்ந்தான் ராஜன் சாய்வு நாற்காலியில்.

தலையணை கழுத்துப் பக்கத்தில் ஜில்லென்றிருந்தது. அதை எடுத்துப் பார்த்தான். கிருஷ்ணன் உகுத்த கண்ணீர்தான் கசிந்து பரவியிருந்தது அங்கே !

எங்கே போய்விட்டான் அவன்? கண்ணிலேயே படவில்லையே! தன் லட்சியத்தின் வெற்றிக்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறானோ ? இருக்கலாம்.

அவன் லட்சியத்துக்காக அழுகிறான். ராஜனோ ஆசைக்காகச் சிரிக்கிறான். யார் உயர்த்தி ?

அறை வாயிலில் நிழல் கவிந்தது. ராஜன் நிமிர்ந்தான். அடடே! மாலினியா வந்


'காப்பிக்கொட்டை 8-50!'
'சரி, பொட்டலம் கட்டு.'
'பொட்டலம் இந்தாங்க!' 9-20 கொடுங்க!'
9-20தா, முன்னாலே 8-50துன்னு சொன்னீயே'
'கட்டுவதற்குள் விலை ஏறிப் போச்சு!'
'பொட்டலத்தை வேகமாகக் கட்டுவதற்கென்ன?'

---

இருக்கிறாள் ! சந்தன வண்ண உடம்பில் நீலப் புடவை சார்ந்திருந்தது. சிவப்புச் சோளி அணிந்திருந்தாள். காதில் தோடும் ஜிமிக்கியும் 'டால்' வீசின. வைரக் கற்களோ?

''ஊஹூம்.... பொருட்காட்சியில் வாங்கினதுதான். ரங்கூன் வைரம்'' என்றாள் அவள்.

''எதுவாக இருந்தால் என்ன? இருக்கிற இடத்தில் இருந்தால் எல்லாமே எடுப்பாக இருக்கும் !'' என்றான் அவன்.

படம் பார்க்கத் தயாராக அவள் வந்திருக்கிறாள் என்பது தெரிந்துதான் ராஜன் புறப்பட்டான். வியப்பின் உச்சியில் நின்றான். ''நீ வரமாட்டாயோ என்று நினைத்தேன் மாலினி!'' என்றான்.

''ஏன் அப்படி நினைத்தீர்கள்?'' என்று கேட்டாள் மாலினி.

''தனியாகப் படம் பார்க்கப் போவது...'' என்று இழுத்தான் அவன் சங்கோசத்துடன்.

''தனியாகத்தானே பிறந்தோம்? தனியாகத்தானே வளர்ந்தோம்? இப்போது தனியாகவே போகிறோம்....'' சொல்லி விட்டு அவள் கலகலவென்று சிரித்தாள். பிறகு அவசர அவசரமாக, ''புறப்படுங்கள்.. புரொபசர் வந்து தொலைக்கப் போகிறார். அப்புறம் படம் பார்த்தாற்போலத்தான்'' என்றாள்.

இவ்வளவு எளிதாக இந்தச் சந்தர்ப்பம் உருவாகும் என்று எதிர்பாராத ராஜன் உடனே அறையைப் பூட்டிக் கொண்டு கிளம்பி விட்டான். கையில் நோட்டுப் புத்தகத்துடன் அவளுடைய தந்தை எதிரே வராதிருக்க வேண்டுமே என்கிற கவலை. தலையணைப் புத்தகத்துடன் கிருஷ்ணன் வராதிருக்க வேண்டுமே என்கிற விசாரம்.

''எந்தப் படத்துக்குப் போகிறோம் ?'' என்று கேட்டாள் மாலினி.

''சாம்ஸனும் டிலைலாவும்.''

''நல்ல படமோ ?''

"பிரமாதமான படமாம். ஒரு வருஷம் ஓடிற்றாம் நியூயார்க்கிலே."

"அப்படியா ?"

அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவனைப் பரிகசிக்கிறதோ ?

படத்தை யார் பார்த்தார்கள்? ராஜன் நிச்சயமாகப் பார்க்கவில்லை. அருகில் மாலினி அல்லவா வீற்றிருக்கிறாள்? வேடிக்கை, தனியாகவே பிறந்தோம், தனியாகவே வளர்ந்தோம் என்றும் பேசினானே, இப்போது தனியாகவா அவன் இருக்கிறான்? தனித்துவம் எப்போதுமே இருந்ததில்லையல்லவா ? அவன் தனித்தா இருக்கிறான் ?

படம் ஓடிக் கொண்டிருந்தது. டிலைலா என்னும் எழிலரசிக்காக ஸாம்ஸன் நிகழ்த்தும் சாகஸங்கள் அடுக்கடுக்காக வந்தன. மாலினியின் இதழ்க்கடையில் முறுவல் இளர்ந்தது அதையெல்லாம் பார்த்ததும். அவள் பரவசப்படுகிறாள் என்பதை ராஜன் புரிந்து கொண்டான்.

"ராஜ், காதல் என்பது என்ன?" அவள் கேட்டாள், திடீரென்று.

ஒரு கணம் திகைப்புற்ற ராஜன் சமாளித்துக்கொண்டு, "காதல் என்பது வாழ்வின் லட்சியம்... காதல் என்பது தெய்வீகமானது .....காதல் என்பது...." என்றான்.

"அது ஒரு தேவையா?" என்றாள் மாலினி.

"தேவை என்கிற வார்த்தை சரியில்லை, மாலினி. உயிர் வாழ்வதற்கு மூச்சு தேவை என்றா சொல்வது?... உணவு தேவை.... காற்று உயிராக இருப்பதால் அது தேவையாகாது... காதலும் அப்படித்தான் என்று எனக்குத் தோன்றுகிறது."

"காதல் பொய் என்கிறார்களே!"

"யார் சொல்வது?"

"உங்கள் நண்பரே சொல்கிறார். சலனப் படும் உணர்ச்சியாக இருப்பதால் காதல் பொய்யாம். நிலைத்த பிடிப்பு அதற்குக் கிடையாதாம்."

"அவனுக்கு மூளை கெட்டுவிட்டது மாலினி. காதல் இல்லாவிட்டால் வீரம் ஏது? கலை ஏது? உயிர்தான் ஏது?"

அவள் முகம் பூரணச் சந்திரனைப் போல் ஆகிவிட்டது. இவ்வளவு அழகான, தெளிவான விளக்கம் கொடுத்ததற்காக ராஜனைப் பாராட்டினாள். "நீங்கள் பெரிய ஆள்தான்" என்றாள்.

படம் முடிந்து இருவரும் திரும்பினார்கள்.

ராஜன் பிரமை பிடித்தவனைப் போல் நடந்தான். மாலினியோ உற்சாகத்தில் மிதந்தாள். இருவருக்குள்ளும் ஒரு ரகசியமான ஒட்டுறவு ஏற்பட்டு விட்டது என்பதில் ராஜனுக்குச் சந்தேகமில்லை. அத்தை காசியிலிருந்து திரும்பி வந்ததும் அவனுக்கு மருமகள் கிடைத்து விடுவாள். சீதையைப் போல அல்லவா பெண் கேட்டாள் அத்தை! சீதைக்கும் மேலே ஒருத்தி கிடைத்திருக்கிறாளே!

அவர்கள் தங்கியிருந்த ஓட்டலை அடைந்ததும் மாலினியை அவளுடைய அறையில் கொண்டு விடச் சென்றான் ராஜன். அந்த அறை பூட்டியிருந்தது. அங்கு யாரும் இல்லை

"அப்பா இல்லையா?" என்று கேட்டான்.

"இன்னமும் திரும்பி வரவில்லை போலிருக்கிறது..." என்றாள் அவள்.

"எங்கே போயிருக்கிறார்கள்?"

"அது தெரியாது. எனக்குத் தலைவலி, நான் வரவில்லை என்று சொல்லி விட்டேன். அவர்கள் மட்டும்தான் போனார்கள்."

"என் அறையிலேயே இருக்கலாம் நீ."

"வேண்டாம்.... மருசாலி இருக்கிறது என்னிடம்."

அவளை விட்டு விட்டு ராஜன் திரும்பினான். ஏனோ தன் மகிழ்ச்சியில் குறை இருப்பதாக இப்போது அவனுக்குத் தோன்றிற்று. அப்பாவையும் அம்மாவையும் வெளியே அனுப்பி விட்டு அவர்களுக்குத் தெரியாமல்தான் மாலினி தன்னுடன் படம் பார்க்க வந்திருக்கிறாள். ஆமாம்: அப்படித்தான் இருக்க வேண்டும்.

## 3

சாய்வு நாற்காலியில் கிடந்தான் ராஜன். ஸாம்ஸனும் டிலைலாவும் எதிரே நின்றார்கள். காதலைப் பற்றிய விளக்கம் — அவன் கூறிய விளக்கம் — நெஞ்சில் நின்றது. மைசூர் வந்த பிறகு அவனாலும் பெரிது பெரிதாகப் பேச முடிகிறதே! இதற்குக் காரணம்கூடக் காதல் தான். அது அவனைப் பேச வைத்துவிட்டது. அவனிடம் இதையெல்லாம் விவாதிக்கலாம் என்று மாலினி எண்ணினாளே அதுவும் ஆச்சரியம்தான். இந்தக் கிருஷ்ணன் என்னென்னவோ உளறி யிருக்கிறான். காதல் என்பது ஒரு வெறி, ஒரு பித்து, ஒரு முழுமையான கனவு! இதைத் தெரிந்துகொள்ள வேண்டாமா அவன்?

அறை வாசலில் நிழல் நீண்டது. வெளி முற்றத்து விளக்கொளி பாய்ச்சிய அந்த நிழல் ராஜனின் காலடி வரை கிடந்தது.

ஏமா நின்றாள் அங்கே!

"படம் பார்த்துவிட்டு வந்தீர்களா?"

"உம்..."

"நன்றாக இருந்ததா?"

"ஓ.... மிகவும் நன்றாக இருந்தது..."

"எனக்கு ஒரு தாங்க்ஸ் கூடக் கிடையாதா?"

"அது அவசியமா, ஏமா?"

அவள் சிரித்தாள். அவனைப் பார்த்துப் பரிகசிக்கிறாளோ! "அவர்கள் இன்னமும் வரவில்லை.... சித்தப்பாவும் சித்தியும் ரகுவும்..." என்றாள் அவள்.

"அடேடே! நீ அவர்களுடன் போகவில்லையா?"

"இல்லை."

"தனியாகவா இருந்தாய்?"

"தனியாகத்தானே பிறந்தோம், வளர்ந்தோம்?....இப்போது தனியாக..."

அவள் முடிக்கவில்லை. ராஜன் உரக்கச் சிரித்துவிட்டான். மாலினியைப் போலவே அல்லவா பேசுகிறாள்! அவளுடைய மறு பதிப்புப் போல. ஆனால் அவள் வேறு; இவள் வேறு.

ஏமா தயங்கியவாறு நின்றாள்.

ராஜன் எழுந்தான். "அவர்கள் எங்கே போயிருக்கிறார்கள் என்று தெரிந்தால் நான்

போய் அழைத்து வரலாம். மணி பத்துக்கு மேல் ஆகிவிட்டதே! ஏன் இன்னமும் வர வில்லை?'' என்றான்.

''பக்கத்தில் ஏதோ ஓர் உறவினர் வீட்டுக் குப் போயிருக்கிறார்கள். அவர் பெயர் நினை வில்லை'' என்றாள் ஏமா.

''அதைக் கேட்டு வைத்துக் கொள்ள வேண்டாமா?'' என்று கடிந்தாற்போல் கேட்டான் ராஜன்.

''நான் எதையும் கேட்டு வைத்துக் கொள்வதில்லை'' என்றாள் அவள் அமைதியாக.

''கேளாமலேயே வைத்துக் கொள் வாயோ?''

''ஆமாம்...'' அழுத்தமாகவே சொன் னாள் அவள். ''நான் யார்? எங்கே போகி றீர்கள் என்று கேட்க எனக்கு என்ன அதி காரம்?.... போயும் போயும் நீங்கள்தான் என்னிடம் சொல்லிவிட்டுச் சினிமாவுக்குப் போய் வந்திருக்கிறீர்கள்!'' ஆற்றாமையோடு சிரிப்பின் உதிரல் பிறிர்ந்தது. வண்டலாக வேதனை படிந்தது அதிலே.

ராஜன் அவளையே பார்த்தான். திடீ ரென்று முழங்கால் கீழ்ப் பாவாடை பதி னெட்டு முழப் புடவையாக மாறிவிட்டது போலிருந்தது. சின்ன வயசானாலும் உணர்ச் சிகளை அலசி அலசிப் பார்க்கிற அனுபவத் தின் நெடி வீசிற்று அவளிடம். வாஸ்தவம் தான். இவள் யார்? இவளைக் கேட்டுக் கொண்டுதான் போவார்களா, வருவார் களா? பாவம்! அந்த வீட்டில் அவள் அழையா விருந்தாளி.

மீண்டும் நிழல் நின்றது. இச்சமயம் மாலினியே வந்தாள்! ஏமா ஓடி விட்டாள்.

''அப்பாவும் அம்மாவும் இன்னும் வர வில்லை, ராஜ்...'' என்றாள்.

''வருவார்கள். சரியானபடி போக்கு வரத்து வசதிகள் கிடைத்திருக்காது. வேறென்ன?'' என்றான் அவன்.

''கார் எடுத்துக் கொண்டு போவதாக அப்பா சொன்னார்.''

''கார் பழுதாகி யிருக்கும்.''

''அப்படித்தான் இருக்குமோ?'' மாலினி யின் கண்கள் கலங்கின. பெருமூச்சு விட் டாள். ''நானும் அவர்களுடன் போயிருக்க வேண்டும். அசட்டுத்தனம் செய்துவிட் டேன்'' என்றாள்.

ராஜனுக்கு இதைக் கேட்க வருத்தமாக இருந்தது. பெரிய பெரிய தத்துவமெல்லாம் பேசுகிறவள் இந்தச் சின்ன விஷயத்துக்கு இப்படி அதிர்ந்து போகிறாளே! அவர்கள் என்ன குழந்தைகளா?

''நீ பயப்படுவது போல அவர்களுக்கு ஏதாவது ஆபத்தே நேர்ந்திருப்பதாக வைத் துக் கொள்வோம். கார் ஒரு மரத்திலோ, பாலத்திலோ மோதி விட்டதாகவே இருக் கட்டும். நாம் என்ன செய்ய முடியும்?..... வருவது வந்தே தீரும்'' என்றான். அவளுக் குத் தைரியம் சொல்லுவதாக நினைத்துக் கொண்டு.

இந்தச் சமயம் பார்த்து இவ்வளவு நேர மும் கண்காணாதிருந்த கிருஷ்ணன் வந்து சேர்ந்தான். மாலினி கண் கலங்கியிருப் பதைக் கண்டு ''என்ன விஷயம்?'' என்று விசாரித்தான்.

ராஜன் சொன்னான்.

''இதுதானா? அவர்கள் நொடியில் வந்து விடுவார்கள். வழியில் ஏதோ ஒரு பாலம் பழுதாகி யிருப்பதாகச் செய்தித் தாளில் பார்த்தேன்....'' என்றான் கிருஷ்ணன்.

மாலினி ஒரு துள்ளுத் துள்ளி, ''அப் படியா?'' என்றாள்.

''ஆமாம். மாலைச் செய்தித் தாளில் படம் கூடப் போட்டிருந்தார்கள். அநேக மாக அதுதான் காரணமாக இருக்கும். கவலை வேண்டாம்.''

''இவர் பயப்படுத்தி விட்டார் அதற்குள்!''

''ராஜன்தானே? அவன் கிடக்கிறான்!'' என்றான் கிருஷ்ணன்.

மாலினி நிம்மதியாக அறைக்குச் சென்றாள் அங்கிருந்து பாட்டுக்கூடக் கிளம்பியது. அவள் போனதும் கிருஷ்ணன் கோபமாக ராஜனைப் பார்த்தான். ''முட்டாள், இப் படியா ஒரு பெண்ணைப் பயப்படுத்துவது? வேதாந்தம் பேசுவதற்கு நேரம், காலம் கிடையாதா?'' என்றான்.

''உண்டா?... எப்போதுமே அதிலே உழல் கிறவன் ஆயிற்றே நீ!'' என்று சிரித்தான் ராஜன்.

''பெண்களுக்கு மனசு மிகவும் பலவீன மானதுடா. பெற்றோர்களிடம் அவர்களுக்கு உள்ள பாந்தவ்யம் ஆண்களுடையதைவிடத் தீவிரமானது. இதோ பார், பாலம் பழுதாகி யிருப்பதாக நான் சொன்னது நிஜமென்றா நினைத்தாய்? ஊஹூம். சும்மா அவளுக் காகச் சொல்லி வைத்தேன்'' என்றான் கிருஷ்ணன்.

''ஏது, இத்தனை அக்கறை?''

அவன் சிரித்தான்.

''இவ்வளவு அக்கறை உள்ளவன் அவ ளோடு காதலைப் பற்றி இல்லாததை எல் லாம் சொல்லி ஏன் பயப்படுத்தினாய்?''

''இப்போதும் பயப்படுத்துவேன். வெறும் ஆசைதான் காதலா ?''

சுருக்கென்று தைத்தது கேள்வி. ராஜன் நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டான்.

''என்ன விவாதம்?'' என்று கேட்டபடி மாலினி வந்து விட்டாள்.

''உன்னோடு காதலைப் பற்றித் தர்க்கம் செய்த விஷயம்தான்.... நான் பயப்படுத்தி விட்டேனாம் ! ராஜன் சண்டைக்கு வருகி றான்'' என்றான் கிருஷ்ணன்.

''பயப்படுத்தித்தான் விட்டீர்கள். ராஜ் விளக்கம் சொன்ன பிறகுதான் எனக்கு அமைதி ஏற்பட்டது. மனசு கலங்கிப் போயிருந்தது. சினிமா பார்க்கிற சாக்கி லாவது கலக்கம் தீராதா என்று புறப்பட் டேன். அதெல்லாம் உங்களுக்கு எங்கே தெரியப் போகிறது ?''

ராஜன் அவளைப் பார்த்தான். மன அமைதியின் பொருட்டு, கலக்கம் தீர வேண்டும் என்பதற்காக, ஓர் அழுத்தத்தி லிருந்து விடைபெறத்தான் அவள் படம் பார்க்க வந்தாள் !

''எனக்குத் தெரியாது என்று நினைக் காதே, மாலினி! ஏமா மூலம் நீயும் ராஜனும்

சினிமாவுக்குப் போயிருப்பதைத் தெரிந்து கொண்டேன். வழக்கம் போல் நீ எதையோ மனத்தில் வைத்துக் கொண்டு தவிக்கிறாய் என்பது எனக்குப் புரிந்துவிட்டது'' என்றாள்.

ராஜன் இருவரையும் மாறி மாறிப் பார்த்தான்.

''வெறும் ஆசை, வெறும் மயக்கம் காதல் அல்ல. இதைத்தான் நான் சொன்னேன். ஆஹா, ஹைஹை என்று பிதற்றுகிறார்களே, இவர்களெல்லாம் உண்மையான காதலைக் கண்டவர்களா என்று கேட்கிறேன். சினிமாவிலும் கடற்கரையிலுமா காதல் வளரும்?'' கிருஷ்ணன் விளக்கம் தரத் துவங்கிவிட்டான்.

ராஜனுக்கு நெஞ்சுக்குள் குடைச்சல் எடுத்தது. மாடியில் செடி மறைவில் வளர்த்த ஆசையின் அவலம் அவனுக்குப் புரிவது போலிருந்தது.

''காதலை யார் மறுப்பார்கள்? உண்மையான காதலைச் சொல்கிறேன். அதை மறுக்க முடியுமா, மாலினி? வீடு கட்டுவதற்கு மண் அவசியம்தான். ஆனால் மண்ணை நீ சாப்பிட முடியுமா ? அதிலே பயிர் விளைவித்து அறுவடை செய்த பிறகே சாப்பிட முடியும். மூலாதாரம் வேறு, அதை அநுபவிப்பது வேறு... காதலும் அப்படித்தான். அது மூலாதாரம்; மண்.... அதில் பண்பும் பயனும் விளைய வேண்டும்....'' என்றான் கிருஷ்ணன்.

மாலினியின் முகம் பூரண சந்திரனாக மாறவில்லை. உதயசூரியனாக மாறிற்று. கிருஷ்ணனை வைத்த விழி வாங்காமல் பார்த்தாள்.

அவர்களுக்கிடையே அமர்ந்திருப்பது சங்கடமாக இருந்தது ராஜனுக்கு. இதுவரை புரியாதிருந்த ஓர் உண்மை அப்போதுதான் அவனுக்கு விளங்கிற்று. மலை உச்சியிலிருந்து தலைகுப்புற விழுவது போல ஒரு சுழற்சி அவனைத் தாக்கிற்று. எந்தக் காதலை ஆஹா, ஹைஹை என்று போற்றி வந்தானோ, அது அர்த்தமற்றதாகிவிட்டது. பரஸ்பரம் கிருஷ்ணனும் மாலினியும் குழம்பியிருந்த போது, குழப்பத்தின் தெளிவுக்கு அவன் காரணமாக இருந்தான். அவ்வளவே. இல்லாவிட்டால் மாலினி படம் பார்க்க வந்திருப்பாளா என்பது கேள்விதான். கிருஷ்ணனின் மீது அவளுக்கு இருந்த கோபத்தால் அந்த வாய்ப்புக் கிட்டிற்று.

வெளியே அரவம் கேட்டது.

அவர்கள் வந்து விட்டார்கள் !

ராஜனுக்கு அப்போதுதான் நிம்மதி ஏற்பட்டது. மாலினி ஓடினாள் வெளியே. அப்பாடா ! அவள் போனாளே !

## 4

''ஏமா!''

பூக்குடலையுடன் புறப்பட்டவள் நின்றாள். அவளுடைய முகத்தில் விவரிக்க இயலாத புன்னகை ஒன்று நெளிந்தது. அந்தப் புன்னகை எப்போதுமே அங்கே இருந்தது. அவனைப் பார்த்துப் பரிகசிக்கிற புன்னகை!

''நீ என்னை ஏமாற்றி விட்டாய் !'' என்றான் ராஜன்.

புன்னகை மறைந்து விட்டது உடனே. கலக்கம் பரவிற்று அங்கே. ஏமா அவனை ஏமாற்றினாளா ! அவளுக்குப் புரியவில்லை.

''இதோ பார், நான் கேட்பதற்குப் பதில் சொல்..... மாலினியைப் படம் பார்க்க அனுப்பினாயே, அதில் கள்ளத்தனம் இல்லை?''

''சொல்லத்தான் வேண்டுமா ?'' மீண்டும் குறும்புச் சிரிப்புத்தான். ''மாலினிக்கும் உங்கள் நண்பருக்கும் தகராறு ஏற்பட்டிருந்ததால் சினிமாவுக்கு உங்களுடன் புறப்பட மாலினி தடை சொல்ல மாட்டாள் என்று நினைத்தேன்.... இப்போது தகராறு தீர்ந்துவிட்டாற்போலிருக்கிறதே!''

''உன்னை நான் புரிந்து கொள்ளவே இல்லை, ஏமா.... அதற்காக அழுகிறேன். நீ பத்தரைமாற்றுத் தங்கம்.... பெயரே ஏமா தானே உனக்கு? உன்னை விட்டு விட்டுச் சினிமாவுக்குப் போனேன் நான்...அது தப்பு இல்லையா, ஏமா ?''

''அது எப்படித் தப்பாகும்?''

''உனக்குப் புரியவில்லையா ?''

''எல்லாம் புரிகிறது. பேசாமலிருங்கள். அதை நான் தப்பாக நினைப்பேன் என்று குழம்புகிறீர்கள். அதுதானே ?'' என்றவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். முகமே வெளிறி விட்டது. ''ஹைஹூம்.... அப்படி நினைக்க எனக்கு என்ன உ...ரி...மை.... இருக்கிறது? எனக்கு நேரமாகிறது. தேடுவார்கள்'' என்று பரபரத்தாள்.

''நில், ஹேமா.... யாரும் இனி மேல் தேடமாட்டார்கள். யாருடைய அனுமதியும் இனிமேல் உனக்குத் தேவையும் இல்லை..... தெரிகிறதா ?'' என்றான் அவன்.

அவள் தலை குனிந்தாள். சந்தன வண்ணமில்லை. ஆனால் வண்ணமோ இங்கு மணமுள்ள சந்தனமாக இருக்கிறது. கேச பாரம் இல்லை. கனமாக இல்லாமல் நெளி நெளியாக, அழகாக அது வளைகிறது முதுகில்.

''இன்றைக்கு நீ என்னுடன் சினிமாப் பார்க்க வரவேண்டும், ஹேமா....'' என்றான் அவன்.

''சினிமாவுக்கா?... கோயிலுக்குப் போய் வரலாமென்று பார்த்தேன். உங்கள் விருப்பம் சினிமாவானால் எனக்கு ஆட்சேபமில்லை.''

''ஹேமா, நீ ரொம்பப் பெரியவள். கோயிலுக்கே போகலாம் நாம்.... சரிதானே?''

அவள் சிரித்தாள்.

''ஹேமா, உதிரிப் பூக்களை எடுத்து மாலை தொடுக்கத் தெரிந்திருக்கிறது உனக்கு. நானோ தோட்டத்தின் உடைமைக்காரனாக இருந்தும் அதையே அழிக்கப் பார்த்தேன். நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது.....''

ராஜன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

ஹேமா அவனருகில் வந்தாள். சட்டென்று குனிந்து அவனுடைய கால்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள்.

அங்கேகூட அவளுக்கு ஓர் உதிரிப்பூ கிடந்தது.

அது ராஜனின் கன்னத்தின் வழியே பெருகி வடிந்த ஒரு சொட்டுக் கண்ணீர் !

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharati Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




**பிரில்க்ரீம் மட்டுமே**

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்கியமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

BP/11/P/11/65 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் சேவை தனி